# சின்னஞ் சிறு பெண்


ஆசிரியர்:

**மாக்ஸிம் கார்க்கி**






தமிழாக்கம்:

**வல்லிக்கண்ணன்**





மீனாட்சி புத்தக நிலையம்
60, மேலக்கோபுர வாசல்
மதுரை-1

**நெல்லை பப்ளிஷிங் ஹவுஸ் லிமிட்டெட்,**

**திருநெல்வேலி ஜங்ஷன்.**

# முன்னுரை

உலக இலக்கிய வரலாற்றில் ரஷ்யாவின் ஸ்தானம் பெரியது; மிக முக்கியமானதும் கூட. அத்தகைய சிறப்பை ரஷ்யாவுக்குப் பெற்றுத் தந்த இலக்கிய ஆசிரியர்களில் மாக்ஸிம் கார்க்கியும் ஒருவர். மற்றவர்களைப் பார்க்கிலும் தனிப்பட்டவர் அவர். உலகின் இதர நாடுகளில் வாழ்ந்து பணியாற்றிய இலக்கிய ஆசிரியர்கள் நடுவில் கூட கார்க்கி முற்றிலும் தனி ரகமானவர் என்றே குறிப்பிட வேண்டும்.

தொல்லைகள் நிறைந்த காலத்தில், குழப்பங்கள் மலிந்த வேளையில், சிறுமைகள் மண்டிக் கிடந்த சமுதாயத்தில், வறுமையும் கொடுமையும் வாழ்ந்த குடும்பம் ஒன்றில் பிறந்து வளர்ந்தவர் அவர். உயிர் வாழ்வதற்கே அவர் பலதரப்பட்ட வேலைகளையும் ஏற்று உழைக்கவேண்டியிருந்தது. உணவு விடுதிகளில் சில்லறை அலுவல்கள் செய்வது, கப்பல் தளங்களைத் தேய்த்துக் கழுவுவது போன்ற வேலைகள் முதல் எத்தனையோ அலுவல்களில் அவர் உழன்றிருக்கிறார். ரஷ்யாவின் ஒரு மூலையிலிருந்து மறுகோடி வரை நடந்து திரிந்திருக்கிறார். இவை எல்லாம் தான் அவருக்குக் 'கல்லூரிப் படிப்பு' ஆக அமைந்தன. நல்லவனாக வாழ வேண்டும், மேம்பட்டு உயரவேண்டும் என்ற ஆர்வக்கனல் அவருள் கனன்று கொண்டே இருந்தது. அறிவுப் பசியும் அவருக்கு அதிகம் தான். அதனால், அகப்பட்ட புத்தகங்களை எல்லாம் அவர் படித்தார். தானும் எழுதத் தொடங்கினார்.

ஆதியில், கார்க்கி கற்பனைக்குத்தான் முக்கியத்துவம் அளித்து வந்தார். அவருடைய திறமையைக் கண்டு மகிழ்ந்து, அவர் வளர்ச்சியில் உண்மையான அக்கறை காட்டிய இலக்கிய ஆசிரியர் விளாடிமிர் கொரலன்கோ என்பவர் கார்க்கியின் குறைகளைச் சுட்டிக்காட்டி, பயனுள்ள யோசனைகளையும் கூறினார். தான் சந்தித்த மனிதர்களைப் பற்றியும் கண்ட அனுபவங்களைப் பற்றியும்

தனது சொந்த உணர்ச்சிகளை எழுதும்படி கார்க்கிக்கு அந்த ஆசிரியர் சொன்னார். அதன்படி எழுதப்பெற்ற கதைகள்தான் கார்க்கியின் கதைகள்.

கார்க்கி நிறையப்படித்தவர். அதைவிட அதிகமாக அலைந்து திரிந்து அனுபவம் பெற்றவர். விதம் விதமான மனிதர்களைச் சந்தித்துப் பேசிப் பழகினார் அவர். சமுதாயத்தின் அதல பாதாளத்தில் கிடந்து அவதியுற்றவர்களையும், மனிதராக வாழ முடியாமல் மனமுடைந்து சீரழிந்தவர்களையும், இவர்களை ஒத்த பிறரையும் கண்டு, அவர்களின் சிறுமை வாழ்வின் மூல காரணங்களை உணர்ந்து மனம் கசந்து குமைந்தவர் கார்க்கி. ஆகவே, அவர்களைப் பற்றி உணர்ச்சி நிறைந்த இலக்கியம் படைத்தார் அவர்.

"கார்க்கியின் கதைகள் பெரும்பாலானவை சோகமயமாகவே உள்ளன. கசப்பு உணர்ச்சியைத்தான் சித்திரிக்கின்றன. ஆயினும், மனிதவர்க்கத்திடம் பற்றுதலும் நம்பிக்கையும் உடையவர் அவர் என்பதை அவருடைய எழுத்துக்களின் மூலமே நாம் உணர முடியும்." இவ்விதம், ரஷ்ய எழுத்தாளர் ஒருவர் அண்மையில் ஒரு கட்டுரையில் குறிப்பிட்டிருக்கிறார். கார்க்கியின் இலக்கிய கிருஷ்டிகளைப் படித்தவர்கள் இக்கூற்றின் உண்மையை நன்கு உணர்ந்திருப்பார்கள். 'ஆர்லோவ் தம்பதிகள்' முதலிய கதைகளைப் படிக்கிறவர்களும் ஓரளவு உணர முடியும்.

"மனிதன் செய்து முடிக்கும் சாதனைகள் பலவற்றிலும் மிகவும் அற்புதமான அருஞ்செயல் நல்லவனாக வாழ்வது தான். இதைப் புரிந்து கொள்ள நாம் விரும்புவதே இல்லை. பார்க்கப் போனால், மனிதர்கள் நல்லவராக வாழ வேண்டும் என்று வலியுறுத்த உண்மையான காரணம் எதுவுமே கிடையாது. அன்பும் மனிதத் தன்மையும் தகுந்த ஆதரவைப் பெறுவது இல்லை. அவை இயற்கை விதிகளினாலும் ஆதரிக்கப்படுவதில்லை; சமூகவாழ்க்கை அமைப்பு முறைகளாலும் போற்றப்படுவதில்லை. இருப்பினும்,

உங்களுக்கும் எனக்கும், உண்மையாகவே நல்லவர்களான அநேகம் பேரைத் தெரியும். அவர்களை நல்லவராக்கியது எது? அவர்களுடைய சொந்த ஆசையைத் தவிர வேறு எதுவும் அல்ல. மனிதர்கள் தாம் இருக்கிற நிலையிலிருந்து இன்னும் உயர்ந்து திகழவே ஆசைப்படுகிறார்கள்.'' இப்படி கார்க்கி ஒரு கட்டுரையில் குறித்திருக்கிறார்.

மனிதரின் அந்த ஆசையைத் தூண்டி அவர்கள் உயர்நிலை பெறுவதற்குத் துணைபுரிவது தான் இலக்கியத்தின் நோக்கம் ஆக வேண்டும் என்பது கார்க்கியின் கொள்கை.

இத்தொகுதியில் உள்ள நெடுங்கதையில், கதாநாயகனாக வருகிற ஆர்லோவ் உயர வேண்டும் என்று ஆசைப்பட்டான். உழைத்தான். சிறிது உயர்வு அடைந்தான். ஆயினும் அவன் உருப்படவில்லை. காரணம், அவனிடமே அவனுக்கு நம்பிக்கை இருந்ததில்லை. அதனால் அவன் தன் மனைவி மீதும் மற்றவர்கள் மீதும் அவநம்பிக்கை கொண்டு, அமைதி இழந்து, குடித்துக் கெட்டான். ஆர்லோவின் வாழ்வையும் அவன் உள்ளத் துடிப்புகளையும், அவன் மனைவியின் வேதனைகளையும் நன்கு சித்திரிக்கிறது அக்கதை.

வயது முதிர்ந்து விட்ட போதிலும் ஒரு கிழவனும் கிழவியும் யாரோ ஒரு சிறு பெண்ணிடம் கண்ட நல்ல பண்புகளை மறக்க முடியாமல் போற்றி, அரிய பெரிய சாதனை ஒன்றில் ஈடுபட்டு விட்ட பெருமையை 'சின்னஞ் சிறு பெண்' என்ற கதை கூறுகிறது.

'இரண்டு குழந்தைகள்' என்ற சுவாரஸ்யமான கதை குழந்தைப் பண்புகளை மட்டுமே சித்திரிக்கவில்லை. வேறு சில பெரிய விஷயங்களையும் சுட்டிக் காட்டுகிறது.

மனிதர்களைப் பற்றி எழுதிய கார்க்கி இயற்கையின் தன்மைகளையும் அழகுகளையும் கவிதை நயத்தோடு தம் கதைகளில் வர்ணித்

திருக்கிறார். அவருடைய இத்திறமையை இந்தப் புத்தகத்தில் உள்ள கதைகள் மூலமும் நன்கு உணர முடியும்.

கார்க்கியின் நல்ல கதைகளைத் தேர்ந்தெடுத்து தமிழில் வெளியிடும் பயனுள்ள பணியை மேற்கொண்ட நெல்லை பப்ளிஷிங் ஹவுஸினர் போற்றுதலுக்கு உரியவர்கள். அந்த நற்பணியில் எனக்கும் பங்கு அளித்ததற்காகப் பதிப்பகத்தினருக்கு எனது இதய பூர்வமான நன்றியை அறிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் அன்பர்களின் ஆதரவு பதிப்பகத்தாரின் இலக்கிய முயற்சிகளுக்குத் தொடர்ந்து கிட்டி, அவர்களின் ஆர்வத்தை வளர்க்க உதவும் என்று நம்புகிறேன்.

**வல்லிக்கண்ணன்**




# பொருளடக்கம்

# சின்னஞ் சிறு பெண்

*"அவள் சின்னஞ் சிறு பெண் தான், அந்நியனே!"*

இவ் வார்த்தைகளை நான் நினைத்துப் பார்க்கிற போதெல்லாம், வயதாகிச் சோர்ந்து போன இரண்டு ஜோடிக் கண்கள் ஆண்டுகள் பலவற்றையும் கடந்து என்னை நோக்கிச் சிரிக்கின்றன; அன்பும் இரக்கமும் நிறைந்த மென்மையான இனிய புன்சிரிப்புச் சிரிக்கின்றன. கரகரக்கும் இரு குரல்கள் ஒரே தன்மையான தொனியுடன் "சின்னஞ் சிறு பெண் தான்" என்று என் மனசில் பதியும் படி பேசுவதையும் நான் கேட்கிறேன்.

இந்த நினைவுச் சித்திரத்தினால் நான் மகிழ்ச்சியும் நம்பிக்கையும் பெறுகிறேன். எனது தாயகத்தின்—மிகுந்த பரப்பும் துயரமும் பெற்றுள்ள பூமியின் — வளைந்து நெளியும் ரஸ்தாக்களில் நான் நாடோடியாக அலைந்த பத்து மாத காலத்தின் நினைவுகளில் எல்லாம் மிகவும் சிறந்தது அது தான்.

ஸாடன்ஸ்க் எனும் இடத்திலிருந்து வோரோனெஷ் என்கிற ஊருக்குச் செல்லும் பாதையில் இரண்டு யாத்ரிகர்களை நான் கடந்து செல்ல நேர்ந்தது. கிழவன் ஒருவன்;

மற்றது ஒரு கிழவி. இருவருக்கும் வயது நூறுக்கும் அதிகமாகவே இருக்கலாம் என்று தோன்றியது. அவ்வளவு மெதுவாகவும் நின்று நின்றும் அவர்கள் நடந்தார்கள். ரஸ்தாவில் சுட்டுப்பொசுக்கும் புழுதியில் அவர்கள் மிகுந்த வேதனையோடு தங்கள் பாதங்களை எடுத்து வைத்தார்கள். அவர்களுடைய உடைகளிலும் முகங்களிலும் படிந்திருந்த ஏதோ ஒரு மயக்குத் தோற்றம் அவர்கள் வெகு தூரம் நடந்து வந்திருக்கிறார்கள் என்று மற்றவர்களை யூகிக்கும்படி தூண்டியது.

எனது யூகத்தை உறுதிப்படுத்துவது போல் அக்கிழவன் சொன்னான்:

"டொபல்ஸ்காயா கபர்னியாவிலிருந்து இவ்வளவு தூரமும் நாங்கள் நடந்தே வந்திருக்கிறோம். ஆண்டவன் அருள்தான்."

அவன் குறிப்பிட்ட இடம் சைபீரியாவில் ஒரு மூலையில் உள்ளது. ஜார் அரசாங்கம் அரசியல் கைதிகளை நாடு கடத்தி அங்கேதான் அனுப்புவது வழக்கம்.

நாங்கள் சேர்ந்து நடந்த பொழுது, அந்தக் கிழவி அன்பு நிறைந்த கண்களால் என்னைப் பார்த்தாள். அவள் கண்கள் ஆதியில் நீல நிறமாக விளங்கியிருக்கும். அவள் பெருமூச்செறிந்து, கருணை கலந்த புன்னகையுடன் பேசினாள்.

"லிஸாயா கிராமத்தில்உள்ள X பாக்டரியிலிருந்து, என் பெரியவரும் நானும் இவ்வளவு தூரம் வந்திருக்கிறோம்."

"நீங்கள் ரொம்பவும் களைப்படைந்திருப்பீர்கள் இல்லையா?"

"ரொம்ப என்று சொல்வதற்கில்லை. நாங்கள் இன்னும் நடந்து போக முடியும். நகர்ந்து நகர்ந்து போய் விடுவோம். எல்லாம் கடவுள் கிருபைதான்.''

"இப்படி வருவதாக நீங்கள் பிரார்த்தனை செய்து கொண்டீர்களா? அல்லது,வயோதிக கால யாத்திரையா?''

"நாங்கள் பிரார்த்தனை செய்து கொண்டோம்' அந்நியனே. கீவ், ஸோலோவ்கி ஆகிய மடங்களில் உள்ள பரிசுத்த சாதுக்களை வேண்டிக் கொண்டு நாங்கள் பிரார்த் தனை செய்தோம். ஒரு நேர்த்திக்கடன்'' என்று கிழவன் சொன்னான். பிறகு, தன் துணைவியின் பக்கமாகத் திரும்பி, "வா அம்மா. நாம் இங்கே உட்கார்ந்து நம் எலும்புகளுக் குச் சிறிது ஓய்வு கொடுக்கலாம்'' என்றான்.

"அப்படியே செய்வோம்'' என்றாள் அவள்.

ஆகவே நாங்கள் அங்கு பாதை ஓரத்தில் வளர்ந்து நின்ற முதிய **வில்லோ** மரம் ஒன்றின் நிழலில் அமர்ந்தோம். அன்று உஷ்ணம் அதிகமாக இருந்தது. வானத்தில் மேகங் களே இல்லை. எங்களுக்கு முன்னாலும் பின்னாலும், கானல் வெயில் படிந்த தொலைதூரம் நோக்கி அந்த ரஸ்தா வளைந்து சென்றது. அமைதியும் தனிமையும் நிறைந்த இடம் அது. ரஸ்தாவின் இரு புறங்களிலும் **ரை** தானியத்தின் நோய் விழுந்த பயிர்கள் நின்ற வயல்கள் பரந்து கிடந்தன.

கிழவன், தான் பிடுங்கி எடுத்த பயிர்த் தண்டுகள் சிலவற்றை என்னிடம் நீட்டிக் கொண்டே, "இவை நிலம் வறளும்படி உறிஞ்சி விட்டன'' என்று சொன்னான்.

நிலத்தைப் பற்றியும், அதன் கருணையை நம்பி வாழ வேண்டிய கொடுமை பெற்று விட்ட விவசாயிகளைப் பற்றியும் நாங்கள் பேசினோம். எங்கள் பேச்சைக் கேட்டுக்

கொண்டிருந்த கிழவி நெடுமூச்சு உயிர்த்தாள்: தனக்குத் தெரிந்த, புத்திசாலித்தனமான வார்த்தை எதையாவது அவள் அவ்வப்போது கூறி வந்தாள்.

"அவள் உயிரோடு இருந்தால், இது மாதிரி வயல் எதிலாவது தன் மெலிந்த உடல் மேலும் தேய என்ன உழைப்பு உழைப்பாள்!'' என்று கிழவி திடீரென்று சொன்னாள். வயல்களில் வளர்ச்சி குன்றிக் காய்ந்து நின்ற ரை பயிர் வரிசைகளையும், பயிர் எதுவும் வளராமல் கிடந்த பொட்டல்களையும் அவள் பார்த்துக் கொண்டாள்.

"ஆ, ஆமாம். அவள் உடல் தேய்ந்து ஓயும்படி உழைப்பாள்'' என்று கிழவன், தன் தலையை ஆட்டிய வாறே பேசினான்.

பிறகு சிறிது நேரம் அமைதி நிலவியது.

"நீங்கள் யாரைப் பற்றிப் பேசுகிறீர்கள்?'' என்று நான் கேட்டேன்.

கிழவன் நல்லதனமாகச் சிரித்தான். "ஒரு சிறு பெண்ணைப்பற்றி'' என்றான்.

"அவள் எங்கள் பாதுகாப்பில் விடப்பட்டிருந்தாள் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவள்'' என்று கிழவி பெருமூச்சுடன் சொன்னாள்.

உடனே இருவரும் என்னைப் பார்த்தார்கள். பரஸ் பரம் ஒத்துப் பேசிக் கொண்டது போல இரண்டு பேரும் ஒரே குரலில் மெதுவாகவும் துயரத்துடனும் அறிவித் தார்கள்.

"எவ்வளவு சின்னஞ் சிறு பெண் அவள்!''

அவர்கள் அதைச் சொன்ன அசாதாரண முறை என் இதயத்தைத் தொட்டது. நடுங்கும் அவ் இரண்டு குரல்

களாலும் உச்சரிக்கப்பட்ட ஒரு இறுதிச் சடங்கு போல் தான் அவ் வார்த்தைகள் ஒலித்தன. திடீரென்று அந்தக் கிழவனும் கிழவியும் வெகு வேகமாகப் பேசத் தொடங் கினர்கள். அ த ஞ ல் ஒருவர் வாயிலிருந்து மற்றவர் வார்த்தைகளைப் பிடுங்கிக் கொள்வது போல் தோன்றியது. அவர்களுக்கு நடுவே உட்கார்ந்திருந்த நான் இருவரையும் மாறி மாறிப் பார்ப்பதற்காக என் தலையைத் திருப்பிக் கொண்டே இருந்தேன்.

"போலீஸ்காரன் ஒருவன் அவளை எங்கள் ஊருக்கு அழைத்து வந்தான். 'இவளை யாருடைய பாதுகாப்பிலா வது விட்டு வையுங்கள்' என்று சொல்லி, ஊர்ப் பெரியவர் களிடம் ஒப்படைத்தான்."

"அதாவது, அவளுக்கு ஒரு வீடு தேடிக் கொடுங்கள் என்று அர்த்தம்" என்று கிழவன் விளக்கம் கூறினன்.

"அதனுல் அவர்கள் அவளை எங்களிடம் அனுப்பி விட்டார்கள்."

"நீ அவளைப் பார்த்திருக்க வேண்டும்—குளிரினல் உடம்பு பூராவும் சிவப்பேறி நடுநடுங்கிக் கொண்டு."

"அவ்வளவு சின்னஞ் சிறு பெண் அவள்!"

"அவளைப் பார்க்கவும் எங்களுக்கு அழுகை வந்தது."

"கடவுளே, இப்படிப்பட்ட ஒருத்தியை இது மாதிரி இடத்திற்கா அனுப்புவது என்று நாங்கள் நினைத்தோம்."

"என்ன காரணத்திற்காக? என்ன குற்றத்துக்காக?"

"இந்த வட்டாரத்திலிருந்துதான் அவள் வந்திருந் தாள்."

"அதாவது, மேற்கேயிருந்து—"

"முதலில் நாங்கள் அவளை அடுப்பு அமைப்புக்கு மேலே உட்கார வைத்தோம்."

"எங்கள் அடுப்பு மிகவும் பெரியது. கதகதப்பானதும் கூட" என்று கிழவி பெருமூச்சு விட்டாள்.

"அப்புறம் அவளுக்குச் சாப்பாடு கொடுத்தோம்."

"அவள் என்னமாய்ச் சிரித்தாள்!"

"அவளுக்கு மினுமினுக்கும் கரு நிறக் கண்கள் இருந்தன. சுண்டெலிக்கு உள்ளது மாதிரி."

"அவளே ஒரு சுண்டெலி மாதிரித்தான் இருந்தாள். உருண்டையாய், மிருதுவாய்!"

"அவள் கொஞ்சம் தெம்பு பெற்றதும் கூச்சலிட ஆரம்பித்தாள். 'உங்களுக்கு நன்றி, அன்பர்களே' என்று அவள் சொன்னுள்.

"அதன் பிறகு அவள் அந்த வீட்டை எப்படித் தலை கீழாக்கி விட்டாள் தெரியுமா!"

"அங்கிருந்த சாமான்களை எல்லாம் அவள் எப்படிக் கொட்டிக் கவிழ்த்தாள்!" என்று சொன்ன கிழவன் தன் கண்களைச் சுருக்கிக் கொண்டு, களி துலங்க நகைத்தான்.

"பந்து மாதிரித் துள்ளிக்கொண்டு எங்கள் குடிசையில் அங்குமிங்குமாகத் திரிந்தாள்—இங்கே, அங்கே, எல்லா இடத்திற்கும் தான். இதைச் சரியாக வைத்தாள். அதை ஒழுங்காக அடுக்கினுள். 'கூழ் எல்லாம் வெளியே பன்றிக்குப் போய்ச் சேர வேண்டியது' என்கிறுள். கூழ் தொட்டியை அவளே எடுக்கிறுள். அவ்வளவுதான். வழுக்கி

விடுகிறது. பளார்! தோள்பட்டை வரை அவள் கைகள் தொட்டிக்குள்ளேயே போய் விடுகின்றன. அடாடா! ஆகா! என்ன அருமையான காட்சி!''

இருவரும் இருமல் எழுகிற வரை சிரித்தார்கள். பிறகு தங்கள் கண்களில் மல்கிய கண்ணீரை அவர்கள் துடைத்துக் கொள்ள நேர்ந்தது.

"அப்புறம் அந்தப் பன்றிகள்......''

"நேரே அவற்றின் வாய்களில் அவள் முத்தமிட்டாள்!''

"'பன்றிகளும் வெளியே போக வேண்டியது தான்! குடிசை பன்றிகளுக்காக ஏற்பட்ட இடம் அல்ல' என்கிறுள் அவள்.''

"ஒரு வாரம் பூராவும் அவள் ஒழுங்கு படுத்தினுள்.''

"வேர்த்து விறு விறுக்கும்படி எங்கள் இருவரையும் வேலை வாங்கினுள்.''

"சிரித்துக்கொண்டும், கூப்பாடு போட்டுக்கொண்டும், தனது சிறிய பாதங்களால் ஓங்கி மிதித்தும்—''

"அப்புறம் திடீரென்று அமைதியும் ஆசாரமுமாக மாறி விட்டாள்.''

"அவளே சாகப் போவது போல—''

"கண்ணீர் வடித்துக் கொண்டு, அவளுடைய நெஞ்சே விம்மி வெடித்து விடுகிற மாதிரிக் கதறுகிறுள். என்ன விஷயமோ தெரியவில்லையே என்று நான் அவளைச் சுற்றிப் பரபரத்துத் தவிக்கிறேன். மிகவும் அதிசயமான விஷயம் தான். நானும் அழுகிறேன். ஏன் என்று

புரியாமலே அழுகிறேன். நான் என் கைகளால் அவளைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு, இரண்டு பேரும் கண்ணீர் வற்றும்படி அழுகிறோம்—''

''அது இயல்பு தானே. பார்க்கப் போனால், அவள் ஒரு குழந்தையை விடக் கொஞ்சம் பெரியவள்.''

''நாங்களோ தன்னந் தனியாக இருக்கிறோம். ஒரு மகன் ராணுவத்திலும், மற்றொருவன் தங்க வயலிலும் சேர்ந்திருக்கிறார்கள்.''

''அவளுக்குப் பதினேழு வயசுதான்.''

''பதினேழாம்! அவளைப் பார்க்கிற யாருமே பன்னிரண்டு வயசுக்கு அதிகமாக மதிப்பிட மாட்டார்கள்.''

''இந்தா பாரு. அது வேண்டுமென்றே சொல்கிற பேச்சு, அப்பா. பன்னிரண்டு என்பது சும்மா சொல்வதாகும்.''

''அதை விட அதிகம் என்று நீ சொல்வாயா? இப்பொழுது நீ சொல்வாயா?''

''ஏன், அவள் நன்றாகப் பழுத்த சிறு கனிதான். அவள் அவ்வளவு சின்னவளாக இருந்தாள் என்றால், அதற்கு அவள் மீதா பழி சுமத்துவது?''

''நான் அவள் மீது பழி சுமத்துகிறேனா என்ன? சட்—சட்!''

''நீ அப்படிச் செய்யவில்லை'' என்று கிழவி நற்சுபாவத்தோடு ஒத்துக் கொண்டாள்.

அவர்கள் சண்டை தீர்ந்ததும், இருவரும் மௌனமாகி விட்டார்கள்.

"அதற்குப் பிறகு என்ன நேர்ந்தது?" என்று நான் விசாரித்தேன்.

"அதற்குப் பிறகா? ஏன், ஒன்றுமில்லே, அந்நியனே" என்று கிழவன் பெருமூச்சுடன் சொன்னுன்.

"அவள் செத்துப்போனுள். கொடிய காய்ச்சலினுல் செத்து விட்டாள்." கிழவியின் சுருக்கம் விழுந்த கன்னங்களில் இரு துளிக் கண்ணீர் வடிந்தது.

"அவள் செத்துப்போனுள், அந்நியனே. எங்களோடு அவள் இரண்டு வருஷங்கள் தான் வாழ்ந்தாள். அந்த ஊரில் உள்ள எல்லோரும் அவளே அறிவார்கள். ஊர் என்ரு சொன்னேன்? ஏன், அதை விட அதிகமானவர் களுக்கு அவளேப்பற்றித் தெரியுமே.அவள் படித்திருந்தாள். ஊர்ப் பெரியவர்களோடு உட்கார்ந்து அவளும் ஆலோசனே களில் கலந்து கொள்ளுவாள். சில சமயங்களில் அவள் வெடுக்கென்று பேசி விடுவாள். ஆனுலும் யாரும் அதைப் பெரிது படுத்துவதில்லே. அவள் கெட்டிக்காரி."

"ஆ! ஆனுல் அவள் இதயம் தான் முக்கியமானது. ஒரு தேவதையின் இதயம் அவளுக்கு இருந்தது. எங்கள் எல்லோருடைய துயரங்களுக்கும் அவள் உள்ளத்தில் இடம் இருந்தது. அவை அனேத்தையும் அவள் தன்னுடைய வையாக ஏற்றுக்கொண்டாள். பட்டணத்திலிருந்து வருகிற எந்தச் சீமாட்டி போலவும் தான் அவளும் காணப்பட்டாள் வெல்வெட் சட்டை, ரிப்பன்கள், நல்ல பாதரட்சைகள் ஆகியவற்ருேடு தான். அவள் புத்தகங்கள் படித்தாள்; எல்லாம் செய்தாள். என்ருலும், குடியானவர்களாகிய எங்களேப் பற்றி எப்படி புரிந்து கொண்டிருந்தாள் தெரியுமா! எங்களேப் பற்றித் தெரிந்து கொள்ள வேண் டியவை பூராவும் அவளுக்குத் தெரியும். 'அதை எல்லாம் நீ

எப்படி அம்மா கற்றுக் கொண்டாய்?' என்று கேட்டால், 'எல்லாம் புத்தகங்களில் இருக்கின்றன' என்று தான் அவள் சொல்லுவாள். அதை எண்ணிப்பாரேன்! இருந் தாலும், அவள் ஏன் அவ்வளவு அக்கறை காட்ட வேண் டும்? அவள் கல்யாணம் செய்து கொண்டு சீமாட்டியாகவே வாழ்ந்திருக்க வேண்டும். அதற்கு மாருக அவர்கள் அவளை இங்கே அனுப்பி விட்டார்கள். அதனுல் அவள் செத்துப் போனுள்.''

''ஒவ்வொருவருக்கும் அவள் பாடம் சொல்லிக் கொடுப்பதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. இவ் வளவு போல இருந்த ஒருத்தி மிகவும் கர்ம சிரத்தையாக எல்லோருக்கும் உபதேசித்தாளே. 'நீ இதைச் செய்யக் கூடாது; நீ அதைச் செய்யக் கூடாது,—''

''ஓ, அவளிடம் படிப்பு இருந்தது. உண்மையாகவே அவள் படித்தவள் தான். ஒவ்வொன்றைப் பற்றியும், ஒவ்வொருவரைப் பற்றியும் அவள் எவ்வளவு கவலைப் பட்டாள்! யாருக்காவது சீக்கு வந்தது என்ருல், அவனைக் குணப்படுத்த அவள் உடனடியாக ஓடுவாள். யாராவது ஒருவருக்கு'—''

''அவள் சாகிற சமயத்தில் அவளுடைய மனம் எங்கோ அலைந்து திரிந்தது. 'அம்மா – அம்மா' என்று சொல்லிக் கொண்டிருந்தாள். ரொம்பவும் துயரத்தோடு சொன்னுள். நாங்கள் பாதிரியாருக்கு ஆள் அனுப்பினேம். அவர் அவளை மீட்டு எங்களிடமே தந்து விடுவார் என்று நினைத்தோம். ஆனுல் அவர் வருகிற வரை அவள் காத் திருக்கவில்லை. எங்கள் கண்மணி எங்களை விட்டுப் பிரிந்து போய் விட்டாள்.''

கிழவியின் முகத்தில் கண்ணீர் பெருகி ஓடியது. அக் கண்ணீர் முழுவதும் எனக்காகவே சிந்தப்படுவது போல்

தோன்றியது. இந்த உணர்வினுல் பிறந்த பேரின்பம் என்னை ஆட்கொண்டது.

"ஊர் பூராவும் எங்கள் வீட்டில் வந்து கூடிவிட்டது. முற்றத்திலும், பாதை நெடுகிலும் பரவி நின்றது. 'என்ன? இப்படி நடக்குமா?' என்று எல்லோரும் பேசிக் கொண்டார்கள். எல்லோருக்கும் அவளிடம் அவ்வளவு பிரியம்."

"அது மாதிரி ஒரு பெண்ணை வேறு எங்கே காண முடியும்?" என்று பெரு மூச்சு விட்டான் கிழவன்.

"எல்லா மக்களும் கூடி அவளுக்கு உரிய இறுதிச் சடங்குகளைச் செய்தார்கள். நாற்பது தினங்கள் முடிந்த போது தான் எங்களுக்கு இந்த எண்ணம் வந்தது. அவள் ஆத்மாவின் நலத்திற்காகப் பிரார்த்தனை புரிய நாம் ஏன் யாத்திரை போகக் கூடாது என்று எண்ணினேம். அக்கம் பக்கத்தில் இருந்தவர்களும், நீங்கள் ஏன் போகக்கூடாது என்று கேட்டார்கள். 'போங்கள். நீங்கள் சுதந்திரம் உடையவர்கள். உங்களை இங்கே கட்டிப் போட்டிருக்கும் பிணைப்புகள் பிடிப்புகள் எதுவுமே கிடையாது. ஒரு வேளை உங்கள் பிரார்த்தனை அவளுக்கு நன்மை புரியக்கூடும்' என்று அவர்கள் சொன்னுர்கள். ஆகவே நாங்கள் கிளம்பினேம்."

"அவளுக்காகத்தானு நீங்கள் இந்த யாத்திரை செய்கிறீர்கள்? அப்படியா?" என்று நான் கேட்டேன்.

"அவளுக்காகத்தான். அருள் பெற்ற அந்தக் குழந்தைக்காகத்தான். நாங்கள் பாபிகளாக இருக்கலாம். இருந்தாலும் கூட, அன்புக்குரிய ஆண்டவன் எங்கள் பிரார்த்தனைகளுக்கு இரங்கி, அவளை அவளது பாபத்திலிருந்து விடுவித்து விடுவார். 'நாற்பது நாள் உபவாச'த்தின் முதல் வாரத்தில் நாங்கள் புறப்பட்டோம். அன்று செவ்வாய்க் கிழமை—"

"அவளுக்காக!" என்று நான் திரும்பவும் கூறினேன்.

"அவளுக்காகத்தான், அந்நியனே" என்று கிழவன் சொன்னான்.

அந்தப் பெண்ணின் ஆத்மா உய்வதற்காகவே அவ் விருவரும் ஆயிரக் கணக்கான மைல்கள் நடந்து வந்திருக் கிறார்கள் என்று அவர்கள் திரும்பத் திரும்பச் சொல் வதைக் கேட்க விரும்பினேன் நான். நம்ப முடியாத அளவு அதிசயமான விஷயம் என்று தான் அது எனக்குப் பட்டது. "அவளுக்காகத் தான்", கரு நிறக் கண்கள் பெற்றிருந்த சிறு பெண்ணுக்காகத்தான், அவர்கள் இந்த அற்புதமான காரியத்தைச் செய்தார்கள் என்று என்னை நானே உறுதிப்படுத்திக் கொள்ளத் தவித்தேன். அதனால், நியாயமாகத் தோன்றக் கூடிய வேறு பல காரணம் எதுவும் இல்லை என்று அவர்கள் திட்டமாக எனக்கு அறிவுறுத்தினார்கள். அது எனக்குப் பெரும் மகிழ்ச்சியே தந்தது.

"இவ்வளவு தூரமும் நீங்கள் நடந்து நடந்துதானா வந்தீர்கள்?"

"ஐயோ, அப்படி இல்லை! சில சமயங்களில் நாங்கள் வண்டிகளில் வந்தோம். ஒரு நாள் சவாரி. பிறகு ஒரு நாள் நடை. கொஞ்சம் கொஞ்சமாக, சிரமப்பட்டு நடந்து வந் தோம். வழி பூராவும் நடந்து போக முடியாதபடி நாங்கள் கிழடுகள் ஆகி விட்டோம். எங்களுக்கு எவ்வளவு வயதாகி விட்டது என்பது கடவுளுக்கே தெரியும். அவளைப் போல் எங்களுக்கும் இளமை இருந்தால், நிலைமை வேறு விதமாக இருக்கும்."

அவளைப் பற்றி—வீட்டையும் தாயையும் பிரிந்து, தொலை தூரத்தில் உள்ள ஒரு மூலையில் போய், கொடிய காய்ச்சலினால் சாகவேண்டும் என்று விதி பெற்று விட்ட

ஒரு சிறு பெண்ணைப்பற்றி—பேச வேணும் என்கிற ஆர்வம் அவர்களுக்கு இருந்தது. அதனால் அவர்கள் மறு படியும் ஒருவர் பேச்சில் மற்றவர் குறுக்கிடலானார்கள்.

  

இரண்டு மணி நேரத்திற்குப் பிறகு நாங்கள் எழுந்து எங்கள் வழியே போனோம். எனது எண்ணங்கள் எல்லாம் அந்தப் பெண்ணைப் பற்றியே இருந்தன. எனினும், நான் எவ்வளவு தான் முயன்று பார்த்த போதிலும் அவள் உருவத்தை என்னால் கற்பனை செய்ய முடியவே இல்லை. எனது கற்பனைத்திறனின் பலவீனத்தை உணரவும் எனக்கு வேதனை தான் ஏற்பட்டது.

நல்லதையும் அழகானதையும் கற்பனை செய்வது எப் பொழுதுமே ஒரு ரஷ்யாக்காரனுக்குக் கஷ்டமான காரிய மாகத்தான் இருக்கிறது...

வண்டி ஓட்டிச் செல்லும் உக்ரேனியவாசி ஒருவன் விரைவில் எங்களைக் கடந்து முன்னேறினான். அவன் எங்களைச் சோகத்தோடு பார்த்து,எங்கள் வணக்கத்திற்குப் பதில் வணக்கமாகத் தன் குல்லாயை உயர்த்திக் கொண் டான்.

"வண்டியில் ஏறிக்கொள்ளுங்கள். உங்களை நான் பக்கத்து ஊரில் கொண்டு போய் விடுகிறேன்" என்று அவன் அக் கிழத்தம்பதிகளை அழைத்தான்.

அவர்கள் வண்டியில் ஏறினார்கள். உடனேயே புழுதிப் படலம் அவர்களை விழுங்கி விட்டது. தன் பால் அன்பு காட்டும்படி அவர்களைத் தூண்டி விட்ட சின்னஞ் சிறு பெண் ஒருத்தியின் ஆத்ம நலனுக்காகப் பிரார்த்தனை செய் வதற்கு என்று பல ஆயிரம் மைல்கள் கடந்து வந்த அந்தக் கிழவனையும் கிழவியையும் சுமந்து சென்ற அந்த வண்டியைப் பார்த்துக் கொண்டே, நான் புழுதியினூடே நடந்தேன். *(1895)*

# இரண்டு குழந்தைகள்

## ( ஒரு கிறிஸ்துமஸ் கதை )

வருஷத்துக்கு ஒரு தடவை, கிறிஸ்துமஸ் கதைகளில் அநேகம் சிறு பையன்களேயும் பெண்களேயும் குளிரிஞல் சாகடிப்பது வழக்கமாகி விட்டது. போற்றுதலுக்குரிய கிறிஸ்துமஸ் கதையில் வருகிற ஏழைச்சிறுவன் அல்லது ஏழைச்சிறுமி வழக்கமாக பெரிய மாளிகை ஒன்றின் ஜன் னலுக்கு வெளியே நின்று, அற்புதமான பெரிய அறையில் தகதகத்துக் கொண்டிருக்கும் கிறிஸ்துமஸ் மரத்தைப் பார்த்து அதிசயிப்பதும், பிறகு மனம் கசந்தும் ஏக்கம் அடைந்தும் பனியில் விறைத்துச் சாவதும் சகஜம்.

அவர்கள் சிறு கதாநாயகர்களேயும் கதாநாயகிகளேயும் தீர்த்துக்கட்டுகிற கொடுமையான முறை எனக்குப் பிடிக் காத போதிலும், அவ் ஆசிரியர்களின் நல்ல நோக்கத்தை நான் போற்றுகிறேன். பணக்காரச் சிறு குழந்தைகளுக்கு, அவ் ஏழைச் சிறு பிள்ளேகளேப் பற்றி நினேவு படுத்துவதற் காகவே அந்த ஆசிரியர்கள் அவர்களேக் குளிரிஞல் சாகும் படி செய்கிருர்கள் என்பதை நான் அறிவேன். ஆயினும், அத்தகைய ஒரு உயர்ந்த நோக்கத்திற்காகக் கூட ஒரு

ஏழைச் சிறுவனேயோ அல்லது எளிய சிறுமி ஒருத்தியையோ பனியில் விறைத்துச் சாகும்படி செய்வதற்கு எனக்கு மனம் வருவதில்லை.

நான் கூட எக்காலத்திலும் குளிரினுல் விறைத்துப் போனதில்லை; அப்படி விறைத்து மாண்டு போன ஒரு ஏழைச் சிறுவன் அல்லது ஏழைச் சிறு பெண் யாரையும் பார்த்ததுமில்லை. ஆகவே, குளிரினுல் செத்துக் கொண்டிருக்கும் பரபரப்பான காட்சியை நான் வர்ணிக்க முயன்ருல், என்னைப் பார்த்து மற்றவர்கள் கேலி செய்யக்கூடும் என்று அஞ்சுகிறேன். அதுவும் போக, உயிர் வாழும் ஒரு ஜீவனுக்கு நினைவுறுத்துவதற்கு என்று உயிருள்ள மற்ருெரு ஜீவனைக் கொல்லுவது கொஞ்சம் மதி கேடான காரியமாகத்தான் தோன்றுகிறது.

அதனுல் தான், குளிரில் விறைத்துச் செத்துப் போகாத ஒரு சின்னப் பையனையும் ஒரு சிறு பெண்ணையும் பற்றிய கதையை நான் சொல்ல விரும்புகிறேன்.

கிறிஸ்துமசுக்கு முந்திய நாள் சாயங்காலம். அப்பொழுது மணி ஆறு தான். பனியை மேகங்களாக வாரி இறைத்தபடி காற்று வீசிக் கொண்டிருந்தது. ஒளி ஊடுருவிச் செல்லும்படி அமைந்து கிடந்த குளிர்ச்சியான அம் மேகங்கள் சிதைவுற்ற சல்லாத் துணி போல் மென்மையாகவும் லலிதமாகவும் தோன்றின. அவை எங்கும் சுற்றிச் சுழன்றன. நடந்து செல்கிறவர்களின் முகங்களில் மோதிப் புரண்டன; பனிக்கட்டியினுல் செய்த ஊசிகளைப் போல் கன்னங்களில் குத்தின; குதிரைகளின் தலைகள் மீது பனியைத் தெளித்தன. குதிரைகள் தங்கள் தலைகளை மேலும் கீழுமாக அசைத்து, பலமாகக் கனைத்துக் கொண்டு நாசிகள் வழியாக நீராவிப் படலங்களை நெடு மூச்சாகச் சிதறின. கனத்த உறை பனி, கம்பிகளை நன்ருக மூடி

அவை வெள்ளை நாடாக்கள் போல் தோன்றும்படி மாற்றி விட்டன. வானம் தெளிவாய் நட்சத்திரங்கள் நிறைந்து காணப்பட்டது. விசேஷ நாளை உத்தேசித்து யாரோ பித்தளை-பாலிஷ் போட்டு அவற்றைத் தேய்த்து விளக்கியது போல் நட்சத்திரங்கள் பிரகாசமாக மின்னின. ஆனல் அப்படிச் செய்வது சாத்தியமில்லையே!

வீதிகள் அதிகமான ஆள் நடமாட்டத்துடனும் சந்தடியோடும் விளங்கின. குதிரைகள் ரஸ்தாக்களில் குதித்துக் குதித்துச் சென்றன. மனிதர்கள் நடை மேடைகளின் மேல் நடந்து போனுர்கள். அவர்களில் சிலர் அவசரமாகப் போனுர்கள்; மற்றவர்கள் மெதுவாக நடந்தார்கள். முன்னவருக்குக் கவலைகளும் பொறுப்புகளும் இருந்தன; கதகதப்பான மேல் அங்கிகள் இல்லை; ஆகவே அவர்கள் வேகமாக நடந்தார்கள். மெது நடை நடந்தவர்களுக்கோ கவலைகள் இல்லை; பொறுப்புகளும் இல்லை. அவர்கள் மேலே கதகதப்பான கோட்டுகள் கிடந்தன. மிருதுவான ரோமச் சட்டைகள் கூட அணிந்திருந்தார்கள் அவர்கள்.

இப்பேர்ப்பட்ட, கவலைகள் இல்லாத, மிருதுவான ரோமக் கோட்டு போட்டிருந்த—அதிலும் வெகு அழகான கழுத்துப்பட்டி அணிந்திருந்த-ஒருவரின் கால்களுக்குள்ளே தான் நேராக வந்து உருண்டன இரண்டு சிறு பந்துகள். அந்தக் கனவான் மிகவும் ஒழுங்காக நடந்து போய்க்கொண்டிருந்தார். பழந் துணிகள் கந்தல் ஆகியவற்றினுல் உருட்டி எடுத்த அந்த இரண்டு பந்துகளும் அவர் கூடவே ஓடின. அதே சமயம் இரண்டு சிறு குரல்களும் எழுந்தன.

“அன்புள்ள ஐயா...” என்று சிறு பெண் குரல் ஒன்று இழுத்தது.

"மிகவும் பெருமை பொருந்திய கனவானே..." என்று ஒரு சிறு பையனின் குரல் இசைத்தது.

"ஏழைகளான எங்களுக்கு நீங்கள் ஏதோ கொஞ்சம் உதவக் கூடாதா?"

"ரொட்டிக்காக ஒரு கோப்பெக்கு. உல்லாச நாளுக்காக" என்று இரு குரல்களும் இணைந்து பேசின.

அவர்கள் தான் என் கதையின் நாயகனும் நாயகியும் ஆவர். சிறு ஏழைக் குழந்தைகள் தான். பையன் பெயர் **மிஷ்கா பீரைஷ்,** சிறுமியின் பெயர் **காட்கா ரியபாயா.**

அந்தக் கனவான் நிற்காததனால், அக் குழந்தைகள் அவர் கால்களுக்குள் புகுந்தும் முன்னால் குறுக்கிட்டும் தொடர்ந்தார்கள். காட்கா ஆவலுடன் எதிர் பார்த்தவாறே, "ஏதாவது கொஞ்சம், ஏதாவது கொஞ்சம்" என்று முனங்கிக் கொண்டிருந்தாள். அந்தச் சீமானின் பாதையில் குறுக்கிட்டுக் கொண்டிருப்பதற்குத் தன்னால் இயன்ற வரை மிஷ்கா பாடு பட்டான்.

இதை எல்லாம் பொறுக்கும் மட்டும் பொறுத்துப் பார்த்த கனவான் முடிவில் தனது மிருதுவான ரோம அங்கியைத் திறந்து, பணப் பையை வெளியே எடுத்தார். அதைத் தன் மூக்குக்கு நேராக உயர்த்தி, அதனுள் கனமாய் மூச்சு விட்டுக் கொண்டே, ஒரு நாணயத்தை வெளியே எடுத்தார். தன்னை நோக்கி நீண்டு நின்ற, மிக அதிகமாக அழுக்குப் படிந்திருந்த, கரங்கள் ஒன்றில் அதை அவர் திணித்தார்.

உடனடியாக, இரண்டு கந்தல் மூட்டைகளும் அந்தச் சீமானின் பாதையிலிருந்து விலகி ஓடி, ஒரு வீட்டின் வெளி வாசலில் வந்து ஓய்வு பெறத் துணிந்தன. ஒரு கணம் அந்த

இருவரும் ஒன்றும் பேசாமல் தெருவை மேலும் கீழுமாகப் பார்த்தவாறே ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு நின்றனர்.

"அந்தக் கிழட்டுப் பிசாசு நம்மைப் பார்க்கவே இல்லை" என்று ஏழைச் சிறுவன் விஷமத்தனமாக வெற்றிக் குரலில் ரகசியம் பேசினுன்

"அந்த மூலையைத் திரும்பி அவர் அந்தப் பக்கமாகப் போய் விட்டார்" என்று அறிவித்து சிறுமி கேட்டாள்: "அந்தப் பணக்கார ஆசாமி எவ்வளவு தந்தார்?"

"பத்து கோப்பெக்குகள்" என்று மிஷ்கா அலட்சியமாகப் பதில் சொன்னுன்.

"அப்படியென்ருல் எவ்வளவு?"

"ஏழு பத்துகளும் ஏழு கோப்பெக்குகளும்."

"அவ்வளவு ஆச்சுதா? அப்ப நாம் சீக்கிரமாக வீடு திரும்பி விடலாம். இல்லையா? ரொம்பவும் குளிர்கிறதே."

அவளை பயப்படுத்தும் முறையில் மிஷ்கா பேசினுன்: "அதற்கு இன்னும் எவ்வளவோ நேரம் கிடக்கிறது. நீ கவனமாக இரு. எல்லோருக்கும் தெரியும்படியாக வேலை செய்யாதே. போலீஸ்காரன் பார்த்தால் உன்னைப் பிடித்து கொண்டு போவான்; சரியானபடி உதையும் கொடுப்பான். இதோ ஒரு படகு வருகிறது. நாம் போகலாம் வா."

ரோம உடை போர்த்த பருமனன மாது ஒருத்தி தான் அந்தப் படகு. இதிலிருந்து மிஷ்கா ரொம்பவும் கெட்ட பையன், முரடன், முதியோரிடம் மரியாதை இல்லாதவன் என்பது புரியும்.

"அன்பான பிராட்டியே..." என்று அவன் புலம்பினுன்.

"பரிசுத்த கன்னியின் பெயரால்..." என்று காட்கா வும் ஒத்துப் பாடினாள்.

"சே! மூன்று கோப்பெக்குகளுக்கு அதிகமாகத் தர முடியவில்லையே அவளால். நாசமாய்ப் போகிற கிழட்டுப் பெண் பன்றி!" என்று ஏசிக்கொண்டே, மிஷ்கா மறுபடியும் வீட்டு வாசலை நோக்கி ஓடினான்.

தெருவில் மேலும் கீழுமாகப் பனி இன்னும் சுழன்று கொண்டுதான் இருந்தது. காற்று மேலும் வலுப்பெற்று வந்தது. தந்திக் கம்பிகள் ரீங்காரம் செய்தன. சறுக்கு வண்டிகளின் சட்டங்களுக்கு அடியில் பனிக் கட்டி கிரீச்சிட்டது. வீதியின் கீழோரத்தில் எங்கோ எழுந்த ஒரு பெண்ணின் கல கலச் சிரிப்பொலி காற்றில் மிதந்து வந்தது.

காட்கா தன் தோழனுக்குப் பக்கத்தில் மிக நெருங்கி உட்கார்ந்து கொண்டு, "**அன்பிசா** அத்தை இன்று ராத்திரியும் நிறையக் குடித்து விடுவாள் என்று நீ நினைக்கிறாயா?" என்று கேட்டாள்,

"நான் அப்படித் தான் நினைக்கிறேன். அவளைக் குடிக்க விடாமல் தடுப்பதற்கு என்ன இருக்கிறது? அவள் குடிக்கத்தான் செய்வாள்" என்று மிஷ்கா உறுதியாகக் கூறினான்.

வீட்டுக் கூரைகளில் படிந்திருந்த பனியை வீசி அடித்துக் கொண்டு காற்று கிறிஸ்துமஸ் கீதம் ஒன்றைச் சீட்டி அடித்த வாறே சுழன்றது. ஏதோ ஒரு கதவுக்கு அண்டை கொடுத்திருந்த கனமான பொருள் ஒன்று தடாலென்று விழுந்தது. அதைத் தொடர்ந்து கண்ணாடிக், கதவுகள் அறைந்து மூடும் ஓசை எழுந்தது. யாரையோ அழைக்கும் கனத்த குரல் ஒன்றும் ஒலித்தது.

“நாம் வீட்டுக்குப் போகலாமே” என்று காட்கா சொன்னாள்.

வெகு நேரமாகக் கேட்டு அலுத்துப் போன மிஷ்கா வெடுக் கென்று பேசினான்: “பழைய பாட்டேதான். நீ எதற்காக வீட்டுக்குப் போக வேண்டும் என்று ஆசைப் படுகிறாய்?”

“அங்கே கதகதப்பாக இருக்கும்” என்று காட்கா சுருக்கமாக விளக்கினாள்.

“கதகதப்பு!” என்று கேலியாகச் சொன்னான் மிஷ்கா. “அங்கே எல்லோருமாகக் கூடிக் கொண்டு உன்னை ஆட்டி வைக்கிற போது உனக்கு எப்படி அம்மா இருக்கும்? அல்லது, வோட்கா மதுவை உன் தொண்டைக் குள் ஊற்றி விட, நீ போன தடவை செய்தது போல் கொப்புளிப்பதைப் பார்த்துச் சிரித்தால்? வீடாவது வீடு! பே!”

தனது மதிப்பை உணர்ந்த—தன்னுடைய அபிப்பிரா யங்களின் தவறாத தன்மையில் நம்பிக்கை உடைய—ஒருவனைப் போல் அவனும் தன் தோள்களை முன்னுக்குத் தள்ளிக் கொண்டான். காட்கா இழுப்புடன் கொட்டாவி விட்டு, வாசலின் ஒரு மூலையில் சுருண்டு விழுந்தாள்.

“நீ சும்மா பேசாமல் இரு. குளிராக இருந்தால், பற் களைக் கடித்துக் கொண்டு அதைச் சகித்துக்கொள். அது தானாகவே போய் விடும். நீயும் நானும் என்றாவது ஒரு நாள் நன்றாகக் கத கதப்பு பெற்று விடுவோம். எனக்குத் தெரியும். நான் விரும்புவது என்ன வென்றால்—”

இந்த இடத்தில் அவன் தனது அன்பான தோழி யின் ஆவலைத் தூண்டி விடும் நோக்கத்தோடு தன் பேச் சைப் பாதியில் நிறுத்தினான். ஆனால் அவளோ கொஞ்சம்

கூட ஆர்வம் காட்டாமல், தரையில் சுருண்டு முடங்கினுள். ஆகவே, மிஷ்கா சிறிது கவலேயுடன் அவளே எச்சரித்தான்.

"நீ தூங்கி விடாமல் கவனித்துக் கொள். இல்லா விட்டால் குளிரில் விறைத்துச் செத்து விடப் போகிருய். ஏய், காட்கா!"

"உனக்கு அந்தப் பயம் வேண்டாம். நான் சாக மாட்டேன்" என்று காட்கா சொன்னுள். அவள் பற்கள் ஒன்ருேடு ஒன்று அடித்துக் கொண்டு நடுங்கின.

மிஷ்கா இல்லேயென்ருல், காட்கா உண்மையாகவே குளிரில் விறைத்துச் செத்துவிடக் கூடும். ஆனுல், கிறிஸ்து மசுக்கு முந்திய நாள் மாலே வேளேயில் அவள் அப்படி ஏதாவதொரு அல்பமான செயலேச் செய்து விடாதபடி தடுத்தே தீருவது என்று விஷயம் அறிந்த அந்தச் சின்னப் போக்கிரி திட வைராக்கியம் கொண்டு விட்டான்.

"எழுந்திரு. நீ கீழே கிடப்பது மிகவும் மோசமாகும். எழுந்து நிற்கிற பொழுது நீ பெரியவளாகி விடுகிருய். அப்பொழுது குளிர் உன்னே அணுகுவதற்குச் சிரமப்படும். பெரியவற்றை பொதுவாகக் குளிர் ஒன்றும் செய்ய முடியாது. ஏனெனில் குளிரை விட அவை பெரியவை. உதாரணத்துக்கு, குதிரைகளே எடுத்துக் கொள். அவை குளிரில் அடிபட்டுச் சாவதே கிடையாது. மனிதர்கள் குதிரைகளே விடச் சிறியவர்கள் அதனுல் தான் அவர்கள் சதா குளிரினுல் விறைத்துப் போகிருர்கள். எழுந்திரு. நான் சொல்லிக் கொண்டே இருக்கிறேன். நீ என்ன! நம்மிடம் முழுசாக ஒரு ரூபிள் சேரட்டும். நாம் விழா கொண்டாடுவோம்."

காட்கா உடல் முழுவதும் நடுநடுங்க எழுந்து நின்ருள்.

"ரொம்ப... ரொம்பவும் பயங்கரமாகக் குளிர்கிறது" என்று அவள் முணு முணுத்தாள்.

நிஜமாகவே குளிர் மிகவும் அதிகமா யிருந்தது. பனிப் படலங்கள் கொஞ்சம் கொஞ்சமாக கனத்து பனிச் சூறை யாக வளர்ந்து விட்டன. இங்கொரு இடத்தில் தூண் களாக உருவெடுத்தன அவை; அங்கொரு இடத்தில் வைரங்கள் பொதிந்த நீண்ட திரைச் சீலைகளாக மாறித் திகழ்ந்தன.தெரு விளக்குகளைச் சுற்றி அவை அலை பாய்ந்த போது, அல்லது பிரகாசமான ஒளி நிறைந்த கடைச் சாள ரங்களைக் கடந்து வேகமாக ஓடிய போது அவை அழகான காட்சியாக இலங்கின. எண்ணற்ற வர்ண ஜாலங்களோடு அவை பளபளத்தன. அவற்றின் கூரிய குளிர்ந்த ஜொலிப்பு கண்களைக் கூச வைத்தது.

ஆனால் இவை அனைத்தின் அழகும் எனது சிறிய நாயகன் நாயகிக்குச் சிரத்தை அளிக்கவே இல்லை.

மிஷ்கா தானிருந்த பொந்திலிருந்து மூக்கை வெளியே நீட்டிக் கொண்டு "ஓகோ!" என்று கத்தினான். "இங்கே ஒரு மந்தை அப்படியே வருகிறது. எழு, காட்கா, அவர் கள் மீது சாடு!"

"அன்பான கனவான்களே..." என்று நடுங்கும் குரலில் நீட்டி இழுத்தவாறு அச் சிறுமி வீதியில் பாய்ந் தாள்.

"ரொம்பக் கொஞ்சமாக இருந்தாலும் பரவாயில்லை ஐயா" என்று மிஷ்கா கெஞ்சினான். பிறகு,"ஓடு, காட்கா" எனக் கூவினான்.

"துஷ்டர்கள்! நான் மட்டும் உங்கள் மீது கை வைக் கட்டும். அப்புறம் பாருங்கள்!" என்று, திடீரென்று அங்கு வந்து சேர்ந்த போலீஸ்காரன் ஒருவன் கூச்சல் போட்டான்.

ஆனால் அவர்களை அங்கு காணவேயில்லை.சடைபற்றிய அவ்விரு துணிப் பந்துகளும் வேகமாக ஓடி, பார்வையிலிருந்து மறைந்து விட்டன.

“போயே போய் விட்டன. குட்டிப் பிசாசுகள்” என்று போலீஸ்காரன் சொன்னான். நல்ல தன்மையோடு புன் முறுவல் புரிந்து கொண்டே அவன் தெருவில் அப்படியும் இப்படியும் கவனித்தான்.

குட்டிப் பிசாசுகள் தங்கள் மதிப்பைக் காப்பாற்றிக் கொள்வதற்காக சிரித்துக் கொண்டே ஓடின. காட்காவின் பாதம் துணிக் கிழிசலில் சிக்கி விட அவள் அடிக்கடி கீழே விழுந்து கொண்டிருந்தாள்.

“கடவுளே! மறுபடியும் விழுந்து விட்டேன்!” என்று அவள், எழுந்து நிற்க முயற்சிக்கும் வேளையிலேயே, சொல்லிக் கொள்வாள். பயத்தோடு திரும்பித் திரும்பிப் பார்ப்பாள். தன்னையும் மீறிச் சிரிப்பாள். “அவன் எங்கே வருகிறான்?” என்பாள்.

மிஷ்கா சிரிப்பு தாங்காமல் தன் விலாப்புறங்களைப் பிடித்தபடி, போவார் வருவார் மீது இடித்து மோதிக் கொண்டிருந்தான்.அந்தக் குற்றத்திற்காக அவன் வாங்கிக் கட்டிக்கொண்ட அடிகளுக்கும் குறைவு கிடையாது.

“ஏய் நிறுத்து... உன்னைப் பிசாசு விழுங்கட்டும்... அவளைப் பாரேன்! ஏ அப்பாவி, ஏய்! ஹாய், அதோ மறுபடியும் ஆரம்பித்து விட்டாளே. இப்படிச் சிரிக்க அதில் ஏதாவது வேடிக்கை இருந்ததா என்ன?”

காட்கா விழுந்து விழுந்து எழுந்தது அவனுக்கு அதிக உற்சாகம் அளித்திருந்தது.

“இனிமேல் அவன் நம்மைப் பிடிக்க முடியாது. நாம் மெதுவாகப் போகலாம். இன்னொருவன் இருந்தானே,

விசில் ஊதினுனே அவன்தான்—ஒரு தடவை நான் ஓடிக்கொண்டே இருந்தேன். திடீரென்று என்ன ஆச்சு? படார்! இரவு நேரக் காவல்காரனின் தொந்திக்கு நேரே போய் மோதி விட்டேன். அவன் தன் தடியினுல் என் மண்டையில் ஓங்கி அறைந்தான்.''

“எனக்கு நினைவு இருக்கிறது. இவ்வளவு பெரிசாக வீக்கம் ஏற்பட்டு விட்டதே'' என்று காட்கா சொன்னுள். உடனேயே குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கலானுள்.

“அது சரி. இவ்வளவு போதும்'' என்று மிஷ்கா அமைதியோடு சொன்னுன். “நான் சொல்வதைக் கவனமாகக் கேள்.''

கம்பீரமும் ஆவலும் நிறைந்து விளங்க அவர்கள் இருவரும் அருகருகே நடந்தார்கள்.

“நான் அப்பொழுது அங்கே உன்னிடம் பொய் சொன்னேன். அந்தப் பணக்கார ஆசாமி என்னிடம் இருபது கோப்பெக்குகள் தந்தான். பத்து அல்ல. அதற்கு முன்பு கூட நான் பொய் சொன்னேன். வீட்டுக்குப் போக வேண்டும் என்று நீ சொல்லாமல் இருப்பதற்காகத்தான் நான் அப்படிச் செய்தேன். இன்று ரொம்ப நல்ல நாள். நமக்கு எவ்வளவு கிடைத்திருக்கிறது தெரியுமா? ஒரு ரூபிளும் அஞ்சு கோப்பெக்குகளும். அது ரொம்ப நிறையத்தான்!''

“இல்லையா பின்னே!'' என்று பெரு மூச்சு விட்டாள் காட்கா. “அவ்வளவு பணத்தையும் கொண்டு ஒரு ஜதை பூட்சு கூட வாங்கலாமே. பழஞ்சாமான்கள் விற்கும் சந்தையிலேதான்.''

“பூட்சா? ஹும்ம். உனக்காக நான் ஒரு ஜதை பூட்சு திருடித் தருவேன். கொஞ்சம் பொறுத்திரு.

கொஞ்ச காலமாகவே நான் ஒரு ஜதை மீது கண் வைத்திருக்கிறேன். நீ சும்மா இரு. நான் அவற்றை அடித்துக் கொண்டு வந்து விடுவேன். ஆனால் இப்போ நாம் செய்ய வேண்டியது—எல்லோரும் சாப்பிடுகிற பொது விடுதிக்குப் போவோம். என்ன, போகலாமா?''

''நம்ம அத்தை மறுபடியும் கண்டுபிடித்து விடுவாள். போன தடவை செய்தது போலவே இப்பொழுதும் நமக்குச் சரியானபடி பூசைக்காப்பு கொடுப்பாள்'' என்று காட்கா பயந்து கொண்டே சொன்னாள். ஆயினும், விடுதிக்குச் சென்று அங்குள்ள உஷ்ணத்தில் சுகம் பெறலாம் எனும் ஆசையின் தூண்டுதலுக்கு அவள் இணங்கி விடுவாள் என்ற உண்மையை அவளுடைய குரலே எடுத்துக் காட்டியது.

''நமக்குக் கொடுப்பாளா? அவள் செய்ய மாட்டாள். நாம்-நீயும் நானும்தான்—தகுந்த விடுதி ஒன்றைத் தேடிப் பிடிப்போம். நாம் யார் என்கிற விஷயம் அங்கே இருக்கிறவர்களில் ஒருவருக்குக் கூடத் தெரியாது.''

''அப்படிச் செய்யலாமா?'' என்று காட்கா நம்பிக்கையோடு பேசினாள்.

''ஆகவே நாம் செய்யப் போவது இதுதான்—முதன் முதலாக, மசாலையிட்ட இறைச்சி அரை ராத்தல் வாங்குவோம். அதற்கு எட்டு கோப்பெக்குகள். வெள்ளை ரொட்டி ஒரு ராத்தல்—அஞ்சு கோப்பெக்குகள். ஆக, பதின்மூன்று. அப்புறம், ஒன்று மூன்று கோப்பெக்குகள் வீதம் இரண்டு இனிப்பு பன் வாங்குவோம். அதற்கு ஆறு கோப்பெக்கு. மொத்தம், பத்தொன்பது ஆயிற்று. அதன் பிறகு ஒரு பானைத் தேநீர்—ஆறு கோப்பெக்கு. இப்போ, கால் ரூபிள் காலி. அதை எண்ணிப் பாரு. அதன் பிறகு நம்மிடம் மீதம் இருக்கக்கூடியது—''

மிஷ்கா தடுமாறினன். அதனல் மௌனமானன். காட்கா ஆழ்ந்த கேள்விக் குறியுடன் அவனைப் பார்த்தாள்.

'அப்படி யென்ருல் ஏகப்பட்ட பணம் செலவாகுமே'' என்று அவள் மெலிந்த குரலில் பேசத் துணிந்தாள்.

''வாயை மூடு. சும்மா இரு. அது அவ்வளவு பிரமாத மில்லை. உண்மையில் அது மிகவும் கொஞ்சம்தான். இன்னும் எட்டு கோப்பெக்கு பெறுமானம் தின்பண்டம் தின்போம். ஆக மொத்தம் முப்பத்து மூன்று. நாம் ஏதாவது செய்வதானல், அதைச் சரியாகச் செய்வோம். இன்று கிறிஸ் துமஸ் இல்லையா? ஆகவே, நம்மிடம் மிச்சம் இருக்கக் கூடியது ... கால் ரூபிள் என்ருல் ... எட்டு பத்துக் கோப் பெக்குகள் போச்சு ... முப்பத்து மூன்று ஆனல் ... ஏழு பத்துக் கோப்பெக்குகளும் இன்னும் ஏதோ கொஞ்சமும் ஆகும். எவ்வளவு என்று பார்த்தாயா? அந்த நாசமாய்ப் போகிற கிழட்டுச் சூனியக்காரி இதை விட அதிகமாக என்னத்தை எதிர்பார்க்க முடியும்? ஓடி வா. சீக்கிரமாக வா!''

கையோடு கை கோத்துக்கொண்டு அவர்கள் நடை மேடை மீது தத்தியும் தாவியும் மூன் சென்ருர்கள். பனி அவர்கள் கண்களுக்குள் வீசி அவர்களைக் குருடாக்கியது. அவ்வப்பொழுது பனிப்படலம் ஒன்று அவர்கள் மேலே கவிந்து, மெல்லிய போர்வையினுல் அவர்களின் சிறு உரு வங்களை மூடி மறைத்தது. உணவும் உஷ்ணமும் பெறும் ஆர்வத்தால் அவர்கள் அம் மூடாக்கை வேகமாகக் கிழித்து விட்டு ஓடிக் கொண்டிருந்தார்கள்.

அப்படி ஓடியதால் மூச்சு வாங்க, காட்கா சிரமத் துடன் பேசினுள்: ''கவனித்துக்கொள். நீ என்ன நினைக் கிருய் என்று நான் கவலைப்படப் போவதில்லை .... ஆனல், அவள் கண்டுபிடித்து விட்டால் ... நான் சொல்லிப்போடு

வேன் ... எல்லாம் உன் வேலைதான் என்பேன் ... எனக்குக் கவலை இல்லை. எப்பொழுது பார்த்தாலும் நீ ஓடிவிடுகிறாய் ... நான்தான் வாங்கிக்கட்ட வேண்டியிருக்கிறது ... சதா அவள் என்னைத்தான் பிடித்துக் கொள்கிறாள்.... உன்னை அடிப்பதை விட மிக மோசமாக என்னை அடிக்கிறாள். நான் சொல்லப் போவது அதுதான். ஞாபகம் வைத்துக்கொள்.''

“இப்பவே போய் நேரடியாகச் சொல்லி விடு. அவள் என்னை அடித்தால் நான் பட்டுவிட்டுப் போகிறேன். உடனே போ ... நீ சொல்ல விரும்புவதைச் சொல்லேன்'' என்று மிஷ்கா கூறினான்.

பெரிய வீரன் போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டிருந்தது. அதனால் அவன் தலை நிமிர்ந்து, வாயினால் சீட்டி அடித்துக்கொண்டே நடந்தான். அவன் முகம் ஒட்டிப் போயிருந்தது. கண்களில் குறும்புத்தனம் மின்னியது. அவனுடைய வயசுக்கு மீறிய ஒரு வித உணர்ச்சி பாவம் சதா அம் முகத்தில் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. அவன் மூக்கு கூர்மையாகவும் கொஞ்சம் வளைந்தும் காணப்பட்டது.

“இதோ ஒரு விடுதி. இரண்டு கூட. நாம் எதற்குப் போகலாம்?''

“சிறுசுக்குள்ளே தான். ஆனால் முதலில் நாம் பலசரக்குக் கடைக்குப் போகலாம், வா.''

தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை வாங்கிக் கொண்டதும் அவர்கள் சிறிய விடுதிக்குள் நுழைந்தார்கள்.

அங்கே புகையும் ஆவியும் அழுத்தமான புளிப்பு வாடையும் மண்டிக் கிடந்தன. நாடோடிகளும் போர்

வீரர்களும் இருண்ட நிழல்களில் உட்கார்ந்திருந்தார்கள். மிகவும் அசிங்கமான ஏவலாளர்கள் மேஜைகளுக்கு ஊடாக அலேந்து திரிந்தனர். அந்த இடத்தில் உள்ள ஒவ்வொன்றும் கூச்சலிட்டுக் கொண்டும், பாடிக் கொண்டும், வசை பொழிந்து கொண்டும் இருந்ததாகத் தோன்றியது.

ஒரு மூலேயில் காலியாகக் கிடந்த மேஜை ஒன்றை மிஷ்கா கண்டான். விரைவாக அங்கு போய்ச் சேர்ந்தான். தனது மேல் சட்டையைக் கழற்றி விட்டு அவன் சரக்குகள் விற்கும் இடத்திற்குப் போனுன். தன்னைச் சுற்றிலும் கூச்சத்துடன் பார்த்துக் கொண்டே காட்காவும் தனது மேலங்கியைக் கழற்றத் தொடங்கினுள்.

மிஷ்கா, அங்கு முன்னுலிருந்த பலகை மீது தன் முஷ்டிகளால் லேசாகத் தட்டியவாறு, அங்கே நின்ற ஆளிடம், "எனக்குக் கொஞ்சம் டீ தருகிறீர்களா மிஸ்டர்?" என்று கேட்டான்.

"டீயா? நிறைய உனக்கு வேண்டிய மட்டும் குடி. முதலில் கொஞ்சம் வெந்நீர் எடுத்து வா, போ. சாமான்கள் எதையும் உடைத்து விடாதே, ஜாக்கிரதை. உடைத்தே, அப்புறம் நான் உனக்கு நல்ல பாடம் கற்பித்து விடுவேன்."

ஆனுல் மிஷ்கா தண்ணீர் கொண்டு வர ஓடிப் போய் விட்டான்.

இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு, அவன் தனது தோழியின் அருகில் மிடுக்காக உட்கார்ந்து, அன்றைய வேலேயைச் சிறப்பாகச் செய்து முடித்த கூலிக்காரனின் தோரணேயோடு தனக்காக ஒரு சிகரெட் தயாரிப்பதில் முனேந்து விட்டான். காட்கா வியப்பு நிறைந்த விழிகளால் அவனேயே பார்த்துக்கொண்டிருந்தாள். பொது இடத்தில்

அவன் சங்கோசம் இல்லாமல் சகஜமாகப் பழகும் தன்மையைக் கண்டு அவள் திகைப்புற்றிருந்தாள். பலரும் வந்து-போகிற பொது விடுதியில், காது செவிடு படும்படி நிலவிய சந்தடிக்கு மத்தியில், அவளால் அமைதியாய் சகஜ பாவத்தோடு இருக்கவே முடியாது. தங்கள் காதைத் திருகி எந்த நேரத்திலும் வெளியே தள்ளிவிடக் கூடும் என்ற பயம் அவளுக்கு இருந்தது. இன்னும் பெரிய பயங்களும் அவள் மனதைக் கலக்கின. ஆயினும் தன் எண்ணங்களை மிஷ்கா ஊகித்து உணர்வதைக் கூட அவள் விரும்பவில்லை. ஆகையினுல் அவள் தனது கூந்தலை இழுத்து விட்டுச் சரிப்படுத்திக் கொண்டு, தன்னைச் சுற்றிலும் சாதாரணமாகவும் அலட்சிய பாவத்தோடும் பார்க்க முயற்சி செய்தாள். அவ்விதம் அவள் செய்த முயற்சியினுல், அழுக்குப் படிந்திருந்த அவளது கன்னங்கள் மிகுதியான ரத்தமேற்றுச் சிவந்தன. அவள் தன்னுடைய குழப்பத்தை மறைத்துக் கொள்வதற்காகத் தனது நீல விழிகளைச் சுழற்றிக் கொண்டிருந்தாள். அதே சமயம் மிஷ்கா சிரத்தையோடு அவளுக்குப் போதித்துக் கொண்டிருந்தான். அதற்காக அவன் தனக்குத் தெரிந்த **சிக்னி** என்ற கூலிக்காரன் ஒருவனின் குரலையும் வார்த்தைப் பிரயோகங்களையும் அனுஷ்டித்தான். அந்தக் கூலியாள் குடிகாரனுக இருந்தாலும், திருடி விட்டு மூன்று மாத காலம் சிறையில் அடைபட்டுக் கிடந்து வெளியே வந்திருந்த போதிலும், மிகவும் உணர்ச்சி ஊட்டக் கூடிய ஆசாமி என்பதை மிஷ்கா கண்டு பிடித்திருந்தான்.

“ஆகவே சும்மா உதாரணத்திற்காக எடுத்துக் கொள்வோம். நீ பிச்சை எடுக்கிருய். எப்படி நீ பிச்சை எடுக்கிருய்? ‘அன்பு காட்டுங்கள். இரக்கம் காட்டுங்கள்’ என்று சொல்லிக் கொண்டிருப்பதில் ஒரு எழவு பிரயோசனமும் கிடையாது. அது சரியான வழி அல்ல. நீ செய்ய

வேண்டியது என்னவென்ருல், அந்த ஆசாமியின் காலுக் குள்ளே போய் விழு. உன் மேலே விழுந்து விடுவோமோ என்று அவனை பயப்பட வைக்கணும்.''

''இனி அவ்விதமே செய்கிறேன்'' என்று காட்கா தாழ்மையுடன் அறிவித்தாள்.

அவளுடைய தோழன் அதை அங்கீகரித்து,''நல்லது!'' என்று தலையசைத்தான். ''அது தான் விஷயம். அடுத்த படியாக, உதாரணத்துக்கு அன்பிசா அத்தையை எடுத் துக் கொள்வோம். அன்பிசா அத்தை யார்? முதலாவதாக, அவள் குடியினுல் மந்தமாகி விட்ட ஒரு பெண்பிள்ளை. அது தவிர.........''

அது தவிர அன்பிசா அத்தை வேறு என்ன என்பது பற்றி மிஷ்கா பாராட்டத் தகுந்த வெள்ளை மனசோடு எடுத்துச் சொன்னுன்.

தங்கள் அத்தையைப் பற்றிய அவனுடைய மதிப் பீட்டை அப்படியே ஏற்றுக் கொண்டு காட்கா தலையை ஆட்டினுள்.

''நீ அவளுக்குக் கீழ்ப்படிவது கிடையாது. அது சரி அல்ல. நீ சொல்ல வேண்டியது என்னவென்ருல்,உதாரண மாகப் பேசுவோமே: 'நான் நல்ல பெண்ணுக நடப்பேன் அத்தை. நீ சொல்கிற படியே செய்வேன்...' இப்படி அவளை தாஜாப் பண்ணு. அப்புறம் உன் இஷ்டம் போல் காரியங்களை நடத்து. அதுதான் சரியான வழி.''

மிஷ்கா பேச்சை நிறுத்தி விட்டுத் தன் வயிற்றை எடுப்பான முறையில் சொரிந்து கொண்டான். பிரசங்கம் செய்து முடித்த பிறகு சிக்னி எப்பொழுதும் அப்படித் தான் செய்வான். அடுத்தாற் போல் வேறு விஷயம் எதுவும் அவன் மூளையில் உதயமாக வில்லை. ஆகையால்

அவன் தலையை லேசாக ஆட்டி விட்டு, "நல்லது. நாம் சாப்பிடலாமே" என்றான்.

அது வரை, முன்னால் உள்ள ரொட்டியையும் மசாலை யிட்ட இறைச்சியையும் பசியோடு பார்த்துக்கொண்டு பொறுமையோடு இருந்த காட்கா "சாப்பிடலாம்" என்று ஆமோதித்தாள்.

இப்படியாகத்தானே, போதுமான வெளிச்சம் இல் லாத பொது விடுதியின் ஈரக் கசிவும் நாற்றமும் நிறைந்த மறைவிடத்தில் அமர்ந்து, அசிங்கமான பாட்டுக்களும் கடுமையான வசவுகளும் பின்னணி இசையாக ஒலிக்க, அவர்கள் தங்கள் இரவுச் சாப்பாட்டை சாப்பிட ஆரம் பித்தார்கள். அவர்கள் இருவரும் உணர்ச்சியோடும், தேர்ந்து ஆராயும் பண்போடும், சிறு சிறு இடை வேளை களுடனும்,தேர்ச்சி பெற்ற சாப்பாட்டு ரசிகர்கள் போலவே சாப்பிட்டு மகிழ்ந்தார்கள். தனது ஒழுங்கு முறையை மறந்து விட்டு காட்கா, கன்னங்கள் துருத்திக் கொண்டு நிற்க, கண்கள் பிதுங்க, பேராசையோடு எதையாவது கடிப்பதைப் பார்த்து விட்டால், அமைதி நிறைந்த மிஷ்கா தயையுள்ள குரலில் சொல்வான். "வேகம் அதிகமாகி விட் டது. இல்லையா, அம்மணி?"

அதைக் கேட்டதும் அவள் அப்படிக் கடித்த துண்டை விழுங்கி விட அவசரப்பட்டு அதன் காரணமாக விக்கித் திணறுவாள்.

இது தான் என்னுடைய கதையின் முடிவு ஆகும். தங் களுடைய கிறிஸ்துமசுக்கு முந்திய நாள் மாலை வேளை நிகழ்ச்சியை உல்லாசமாகக் கொண்டாடி முடிக்கும்படி அக் குழந்தைகளை விட்டு வைப்பதில் எனக்கு எவ்வித மன வேதனையும் கிடையாது. அவர்கள் குளிரினால் மாண்டு விடக் கூடிய ஆபத்து எதுவும் இல்லை என்பதை

நீங்கள் நிச்சயமாக நம்பலாம். அவர்கள் தங்களுடைய சுய உணர்வோடு நல்லபடியாக இருக்கிறார்கள். இந்தப் பரந்த உலகத்திலே நான் ஏன் அவர்களைக் குளிரினால் செத்துப் போகும்படி செய்ய வேண்டும்?

மிகவும் எளிய, சாதாரணமான விதத்தில் தங்கள் வாழ்க்கை முடிவை நிச்சயமாக அடையப் போகிற குழந்தைகளைக் குளிரில் விறைத்துச் சாகும்படி செய்வது அறியாமையின் சிகரமேயாகும் என்று நான் உணருகிறேன்.

*[1894]*

# ஆர்லோவ் தம்பதிகள்

அநேகமாக ஒவ்வொரு சனிக்கிழமை சாயங்காலமும், மாலைப் பிரார்த்தனைக்கு முன்னதாக, அந்தக் கூச்சல் எழுவது வழக்கம். குப்பை கூளம் சிதறிக் கிடக்கிற–கும்பல் மிகுந்த சிறிய முற்றத்தில், காலத்தால் பழுதுற்று விளங்கிய மர வீடுகள் சூழ்ந்த இடத்தில், நெடுகிலும் பரவும் அது. வியாபாரி **பெடுன்னிக்கோ**வுக்குச் சொந்தமான, அழுக்குப் பிடித்த பழைய வீடு ஒன்றின் கீழ்த்தளத்தில் உள்ள இரண்டு ஜன்னல்கள் வழியாக மேலெழுந்து ஒலிக்கும் அக் கூவல், பெண் ஒருத்தியின் மூர்க்கமான அலறலாகும்.

"நில்! குடிகாரப் பிசாசே, நில்!" என்று அந்தப் பெண் தனது தொண்டை கிழியும்படியான குரலில் கத்துவாள்.

"என்னை வெளியே போக விடு!" என்று ஒரு ஆணின் கடுமையான தொனியில் பதில் குரல் கிளம்பும்.

"நான் விடமாட்டேன், மிருகமே!"

"நீ விடமாட்டாயா? விடமாட்டாயாக்கும்? அதைத் தான் பார்ப்போமே!"

"நீ என்னைக் கொன்றாலும் சரிதான், விடமுடியாது."

"நீ விடமாட்டாய்; இல்லையா, நீலி?"

"கடவுளே, இவன் என்னைக் கொல்லுகிறானே, கடவுளே!"

"நான் சொல்கிறேன்; நிச்சயமாக நீ விட்டுவிடுவாய்-"

முதல் கூச்சல் எழுந்தவுடனேயே, வீடுகளுக்கு வர்ணம் பூசும் ஸச்கோவின் உதவியாள் **ஸென்கா சிஷிக்** வெளியே ஓடி வருவான். முற்றத்தில் உள்ள ஒரு கொட்டகையில் அமர்ந்து நாள் பூராவும் வர்ணங்களைக் கலந்து வைப்பது தான் அவன் வேலை. சுண்டெலியின் கண்களைப் போன்ற அவனுடைய கரிய கண்கள் மினு மினுக்க, அவன் உரத்த குரலெடுத்து ஓலமிடுவான்:

"ஆர்லோவ் தம்பதிகள் சண்டை போடுகிறார்கள். ஓகோய்!"

பரபரப்பான விஷயங்களில் எப்பொழுதுமே ஸென்காவுக்குத் தனி உற்சாகம்தான். **ஆர்லோவ்** வீட்டின் ஜன்னல்களின் பக்கம் அவன் வேகமாகப் பாய்வான். அங்கே தரையில் முகம் படியக் குப்புற விழுந்து, சிக்குப் படிந்த தலை முடி ஜன்னல் விளிம்பில் புரளும்படி படுத்துக் கொண்டு கவனிப்பான். சிவப்பு வர்ணமும் மஞ்சள் சாயமும் குழம்பிக் காணப்படும் அவனுடைய குறும்புக்கார முகத்திலிருந்து பிதுங்கி விழுந்து விடுவன போல் கண்கள் அங்குள்ள இருண்ட சாளரத்தினூடே நோக்கும். கீழேயிருந்து பூஞ்சக்காளம், செம்மான் மெழுகு, அழுகல் தோல் முதலியவற்றின் நாற்றம் மண்டி எழுந்து நாசியைத் தாக்கும்.

அந்தத் துவாரத்தின் அடியில் இரண்டு பேர் சண்டையிட்டுக் கொண்டிருப்பதை, அம் முயற்சியில் உறுமிக் கொண்டும் ஏசிக் கொண்டும் திணறுவதை, காண முடியும்.

“நீ என்னைக் கொன்று விடுவாய்'' என்று அந்தப் பெண் சிரமத்தோடு சொன்னாள்.

“பயமே வேண்டாம்'' என்று அவள் கணவன், கூட்டித் திரட்டிய விஷயத்தை சொற்களிலே சேர்த்து அவளைத் தேற்றினான்.

தொடர்ந்து, மென்மையான எதன் மீதோ கனத்த ஊமை அடிகள் விழும் ஓசை வந்தது. அப்புறம் கீச் சொலிகள், முனகல்கள், பெரும் சுமை ஒன்றைத் தூக்கு கிறவன் வெளியிடுவது போல யாரோ சிரமமாக மூச்சு விடும் சத்தம் எல்லாம் கேட்டது.

“ஓ ஓ! கடைசியாக அதை எடுத்து அவன் அவளுக்கு ஒரு அறை கொடுத்தானே பார்க்கணும்!'' என்றான் சென்கா. கீழே அடித்தள அறையில் நடைபெறுவதைக் கவனித்து, வெளியில் தன்னைச் சுற்றிலும் கூடி நின்ற சிறு கும்பலுக்கு விவரித்துச் சொல்லிக் கொண்டிருந்தான் அவன்.

இரண்டு மேஸ்திரிகள், லெவ்செங்கோ எனும் பெயருள்ள வேலைக்காரன் ஒருவன், **கிஸ்லியகோவ்** என்கிற வாத்தியக்காரன், இலவச வேடிக்கை காண்பதில் ஆர்வமுள்ள இன்னும் சிலர் ஆகியவர்களே வழக்கமாக அங்கே கூடி நிற்பார்கள். அவனிடம் அடிக்கடி கேள்விகள் கேட்டுக் கொண்டும், பொறுமை இழந்தவர்களாய் அவன் கால்களையும், வர்ணம் ஊறிப் போயிருந்த கால் சட்டையையும் இழுத்து இழுத்தும் அவர்கள் அவசரப் படுத்துவார்கள்.

"இப்போது அவன் அவள் முதுகில் சவாரி செய்கிருன். அவள் மூஞ்சியைத் தரையோடு தரையாக மோதுகிருன்."—அவன் அனுபவிக்கும் உணர்ச்சிகளினுல் பரவசமுற்ற சென்காவின் தேகத்தில் புல்லரிப்பு ஏற்பட்டிருந்தது.

மற்றவர்களும், கீழே நிகழும் கோரக் காட்சிகளை ஒன்று விடாமல் தங்கள் கண்களால் காண வேண்டும் எனும் ஆசை பிடித்துத் தள்ள, சாளரத்தை ஒட்டிக் குனிந்தார்கள். **கிரிகரி ஆர்லோவ்** தன் மனைவியுடன் நடத்துகிற சண்டையில் கையாளும் உத்திகளை எல்லாம் அவர்கள் இதற்கு முன்பே நன்ருக அறிந்து வைத்திருந்த போதிலும், இப்பொழுதும் அவர்களால் அதிசயிக்காமல் இருக்க முடியாது.

"ஊய்! பிசாசுப் பயல்! அதை அடியோடு முறித்து விட்டானு?"

"அது பூராவும் ரத்த மயமாக இருக்கிறதே. ஊற்று மாதிரி அல்லவா ரத்தம் பீரிட்டு அடிக்கிறது."

"ஐயோ கருணையுள்ள கடவுளே!" என்று பெண்கள் முனங்கினுர்கள். "நெஞ்சில் இரக்கம் இல்லாத வெறியன்" என்ருர்கள்.

ஆண்களின் விமரிசனம் முற்றிலும் செயலோடு ஒட்டியதாகவே ஒலிக்கும்.

"அவன் அவளை ஒழித்துக் கட்டி விடுவான். இது நிச்சயம்" என்ருர்கள் அவர்கள்.

"நான் தான் சொல்கிறேனே, அவன் கத்தியை அவள் உடம்பிலே பாய்ச்சி விடுவான்" என்று வாத்தியக்காரன்

சோதிடம் கூறினுன். "என்றைக்காவது ஒரு நாள் அவளுடைய பாட்டுகள் அவனுக்கு அலுத்துப் போகும். உடனே அவன் எல்லாவற்றுக்கும் முடிவு கட்டி விடுவான்.''

"ஆட்டம் முடிந்தது!'' என்று ரகசியக் குரலில் ஒலி பரப்பிக் கொண்டே சென்கா துள்ளி எழுந்தான்; தூரத்து மூலையில் உள்ள ஒதுக்கிடம் ஒன்றில் பதுங்கி நின்று கவனிப்பதற்காகப் பாய்ந்து ஓடினுன். இனி எந்த நேரத்திலும் ஆர்லோவ் வெளியே கிளம்பி விடுவான் என்பது அவனுக்குத் தெரியும்.

ஆங்கார ரூபனுன செம்மானின் கண்களில் படாமல் தப்புவதற்காக எல்லோரும் வேகமாகக் கலைந்து போனுர்கள். அந்தச் சமயத்தில் அவனைச் சந்திப்பது ஆபத்தானது. அதுவுமன்றி, சண்டை தீர்ந்து போனதால் அவர்கள் அவ்விவகாரத்தில் கொண்ட உற்சாகத்தை இழந்து விட்டார்கள்.

பொதுவாக, ஆர்லோவ் வெளியே தலை காட்டுகிற வேளையில் அங்கே அந்த முற்றத்தில் சென்காவைத் தவிர வேறு யாரும் இருக்க மாட்டார்கள். சிரமத்தோடு மூச்சு விட்டுக் கொண்டு, கிழிந்த சட்டையும் குத்திட்டு நிற்கும் தலை முடியுமாய், கிளர்ச்சியுற்ற முகத்தில் நகக் கீறல்களும் வேர்வையும் நிறைந்து தோன்ற, அவன் காட்சியளிப்பான். ரத்தம் பாய்ந்த விழிகளால் அந்த முற்றம் முழுவதையும் நோக்குவான். தனது கைகளை முதுகுப் புறத்தில் கட்டிக் கொண்டு மெதுவாக நடந்து, அங்கு வெளிப் புற வீடு ஒன்றின் ஓரத்தில் கவிழ்த்துப் போடப்பட்டிருந்த சறுக்கு வண்டி அருகே போவான். சில சமயங்களில், பெடுன்னிகோவ் வீட்டில் குடியிருக்கிற எல்லோரையுமே வம்புச் சண்டைக்குஇழுக்க ஆசைப்படுகிறவன் மாதிரி, கம்பீரமாக சீட்டி அடித்துக் கொண்டே நடப்பான் அவன். பிறகு

சறுக்கு வண்டியின் சட்டத்தில் அமர்ந்து, தனது முகத்தில் வழியும் வேர்வையையும் ரத்தத்தையும் சட்டைத் துணியினுல் துடைப்பதில் ஈடுபடுவான். அது முடிந்ததும், களைத்து விட்டவன் போல் ஓய்ந்து போய் உட்கார்ந்து, அழுக்கு முட்டிப்போன வீட்டுச் சுவரையும், காரை உதிர்ந்து விட்ட பகுதியையும், பலரக வர்ணங்களும் கலந்து கிடக்கும் கோலத்தையும் அவன் வெறித்து நோக்கியவாறு உட்கார்ந்திருப்பான்.

ஸச்கோவிடம் வேலை பார்க்கும் வர்ணம் பூசுகிறவர்கள் அலுவல் முடிந்து வீடு திரும்பியதும் தங்கள் பிரஷ்களை அவ்வீட்டின் மூலைச்சுவரில் தான் துடைப்பது வழக்கம்.

ஆர்லோவுக்கு வயசு முப்பதுக்குள் தான் இருக்கும். உணர்ச்சி மயமான அவனுடைய முகத்தின் நேர்த்தியான அமைப்புகள் சிறிய கரிய மீசையினுல் அதிக அழகு பெற்று விளங்கின. உருண்ட செந்நிற உதடுகளின் மீது மீசையின் கருநிழல் படிந்து கிடக்கும். எடுப்பான மூக்குக்கு உயரே குவிந்து கூடுவன போல் அடர்ந்த புருவங்கள் அமைந்திருந்தன. அப் புருவங்களின் அடியிலிருந்து கூரிய பார்வை எறியும் கரிய விழிகள் சதா அமைதியின்மையினுல் கனன்று கொண்டிருப்பது போல் தோன்றும். சதைப்பிடிப்பும் சக்தியும் நிறைந்த உடல். நடுத்தரமான வளர்ச்சி பெற்றிருந்த அவன், ஓயாத உழைப்பு காரணமாக ஓரளவு கூனி வளைந்து காணப்பட்டான். அவன் அந்தச் சறுக்கு வண்டி மீது பிரமை பிடித்தவன் மாதிரி வெகு நேரம் உட்கார்ந்து இருப்பான். வர்ணக்கோடுகள் நிறைந்த சுவரை வெறித்து நோக்கியும், தனது அகன்ற கபில நிற மார்பினுள்ளே நிறையக் காற்றைச் செலுத்துவதற்காக ஆழ்ந்த மூச்சுகள் உயிர்த்தும் பொழுது போக்குவான்.

சூரியன் அஸ்தமித்து விட்டது. எனினும் முற்றத்தில் புழுக்கம் குறையாமலிருந்தது. அங்குள்ள காற்றில் வர்ணங்கள், கீலெண்ணெய், கெட்டுப்போன முட்டகோசு, மற்றும் பல அழுகல்கள் ஆகியவற்றின் வாடை நிலவி நின்றது. வீட்டின் இரண்டு தளங்களிலும் உள்ள எல்லா ஜன்னல்களிலிருந்தும் பாட்டுச் சத்தமும் சண்டையின் கூச்சலும் வந்து கொண்டிருந்தன. அவ்வப்போது ஏதாவது ஒரு சாளரத்தினூடே, மந்த சுபாவம் பெற்ற முகம் ஒன்று ஆர்லோவை உறுத்து நோக்கும் ஒரு கணம்; பின், சிறுசிரிப்புடன் மறைந்து விடும்.

வர்ணம் பூசும் தொழிலாளிகள் வேலே முடிந்து வீடு திரும்புகிறபொழுது, ஆர்லோவின் பக்கமாகச் செல்கையில் அவன் மீது ஓரக்கண் பார்வை வீசி விட்டு, தங்களுக்குள் கண்ணைச் சிமிட்டிக் கொள்வார்கள். அவர்களுடைய பேச்சொலி முற்றம் முழுவதும் உயிர்த் துடிப்புடன் நிறைந்து விடும். அவர்களில் சிலர் குளிக்கக் கிளம்புவார்கள். மற்றவர்கள் குடிக்க மதுக்கடை நோக்கிச் செல்வார்கள். தையல்காரர்கள் — மெலிந்த உடலும், வளைந்த கால்களும், அரைகுறையான உடைகளும் பெற்ற கூட்டம்—இரண்டாவது தளத்தில் உள்ள தங்கள் அறைகளிலிருந்து ஊர்ந்து வந்து கீழ் முற்றத்தை அடைவார்கள்; காய்ந் தபட்டாணிக்கடலைகளைத் துப்பவதுபோல, வர்ணத்தொழிலாளிகள் வார்த்தைகளை உச்சரிப்பதற்காகக் கேலிசெய்யத்தொடங்குவார்கள். அங்கே கூச்சலும் கிண்டலும், கேலிச் சிரிப்பொலியும் கூடிக் கலகலப்பு நிறைந்து விடும்.

ஆனல் ஆர்லோவ் யார் பக்கமும் திரும்பிப் பார்க்காமல் மௌனியாகவே உட்கார்ந்திருப்பான். அவனை அணுக எவரும் முன்வரமாட்டார்கள். அவனைச் சாட்டிக்கேலிகள் பேசிக் களிக்கவும் ஒருவரும் துணியார். அத்தகைய சந்தர்ப்

பங்களில் அவன் மிகவும் மூர்க்கமாக இருப்பான் என்பதை அங்குள்ள அனைவரும் அறிவர்.

மந்தமான ஒருவித ஆத்திரம் உள்ளத்தைக் கவ்வி மூச்சுத் திணறும்படி பற்றிக்கொண்டிருக்க, அவன் அதே இடத்தில் உட்கார்ந்திருப்பான். அவனது நாசிகள் துடிக்கும். உறுதியான பெரிய மஞ்சள் நிறப் பற்களின் இரு வரிசைகளும் வெளியே தெரியும்படி அவன் உதடுகள் மடிந்து சுருளும். இருண்டு உருவமற்று எழும் ஏதோ ஒன்று அவனுக்குள்ளே குமுறிக்குமையும். அவன் கண்களின் முன்னால் செம்புள்ளிகள் மிதக்கும். கடுந் துயரமும் வோட்கா மது தேவை என்ற வெறியும் அவனது அங்கங்களைக் கவ்வி உறிஞ்சும். குடிதான் தனக்கு ஆறுதல் அளிக்கும் என்பது அவனுக்கு நன்ருகத் தெரியும். ஆனுல் இன்னும் இருள் பரவவில்லை. அவனிருந்த அலங்கோலமான அவல நிலையோடு வீதிகளின் வழியே நடந்து போக அவன் வெட்கமுற்ருன். ஏனெனில் அவனை—கிரிகரி ஆர்லோவை—அறியாதவர் எவருமிலர்.

ஊராரின் பெருஞ் சிரிப்புக்கு ஆளாக அவன் விரும்ப வில்லை. ஆனுலும் வீட்டினுள் சென்று, முகத்தைக் கழுவி, வேறு ஆடைகள் அணிந்து கொண்டு கிளம்பவும் அவன் மனம் ஒருப்பட வில்லை. அவன் அடித்து உதைத்த அவனுடைய மனைவி அங்கே தரையில் விழுந்து கிடந்தாள். அவ்வேளையில் அவள் சகல தன்மைகளிலும் வெறுத்து ஒதுக்கப்பட வேண்டியவளாகத்தான் அவனுக்குத் தோன்றினுள்.

அவள் அங்கே அழுது கொண்டே கிடந்தாள். தனது கட்சிதான் சரி; தான் அவனிடம் குற்ற மற்ற பலியாக அகப்பட்டு அவதியுற நேர்ந்தது என்பது அவளுக்கு நன்கு தெரியும். அதை அவனும் அறிவான். அவள் கட்சிதான்

சரி; தான் செய்வது தப்பு என்பது அவனுக்குத் தெரியும். இந்த உணர்வு அவனுக்கு அவள் மீதிருந்த வெறுப்பை அதிகப்படுத்தியது. ஏனெனில், அவனுக்குள் அவனது உள்ளத்தின் ஆழத்திலே இருண்ட ஆத்திரம் ஒன்று கொந்தளித்துக் கொண்டிருந்தது. சரி அல்லது தப்பு என்பது பற்றிய அவனுடைய ஞானத்தைவிட மிகவலுவாகத் திகழ்ந்தது அது. அவனது உணர்ச்சிகள் அனைத்தும் தெளிவற்றும் துயரோடு அழுத்துவன வாகவுமே இருந்தன. அவற்றை இன்னதென்று புரிந்து கொள்ள இயலாமல், அவற்றின் பாதக சக்திகளால் அமுக்கப் பெற்றுத் திணறுவதை அவனால் தவிர்க்க முடியவில்லை. ஆயினும் ஒரு கோப்பை வோட்கா மது தான் வேதனைகளிலிருந்து தனக்கு விடுதலை அளிக்கும் என்பது மட்டும் அவனுக்குத் தெளிவாகத் தெருந்திருந்தது.

**கிஸ்லியகோவ்** என்கிற வாத்தியக்காரன் அப்பொழுது அங்கு வந்து சேர்ந்தான். சிவப்பு நிறப் பட்டுச் சட்டையும், வெல்வட் மேல் அங்கியும் அணிந்திருந்தான் அவன். அவனது அகன்ற கால் சட்டைகள் நேர்த்தியான பூட்ஸின் மேல் பாகத்தினுள் திணிக்கப்பட்டிருந்தன. அவனுடைய இசைக் கருவியை பச்சை நிறத் துணிப் பையில் வைத்துத் தன் கைக்குக் கீழ் பற்றியிருந்தான் அவன். அவன் மீசை அம்பு மாதிரி ஒரே கோடாகத் திருகி விடப்பட்டிருந்தது. அவனது குல்லாய் ஒரு காதின் புறமாகச் சரிந்து எடுப்பாக விளங்கியது. அவன் முகத்தில் உற்சாகம் பிரகாசித்தது. அவனுடைய உல்லாச குணம், இசைத் திறமை, உற்சாகம் நிறைந்த மனோபாவம் ஆகியவைகளுக்காக ஆர்லோவ் அவனிடம் அன்பு காட்டி வந்தான். கவலையற்ற அவன் வாழ்க்கையை எண்ணிப் பொறாமையும் கொண்டிருந்தான்.

"சமரினில் வெற்றி பெற்ருய் வாழ்க நீ கிரிகரி
கண்ணிலொரு வீக்கம் பெற்ருய், வாழ்கவே!''

இந்தப் பரிகாசத்தினுல் ஆர்லோவ் கோபம் அடைந்து விடவில்லை. இதே கேலிச் சொற்களை குறைந்தது ஐம்பது தடவைகளாவது அவன் கூறக் கேட்டிருந்தான். அந்தப் பாடகனின் எண்ணத்தில் நஞ்சு இல்லை என்பதை ஆர்லோவ் அறிவான். அவன் தனது சிறு தமாஷை அனுப வித்து மகிழ்கிருன்; போகட்டுமே!

கிஸ்லியகோவ், செம்மானின் முன்னுல் ஒரு கணம் தயங்கி நின்றவாறே விசாரித்தான்: "என்ன, மற்றுமொரு கோர யுத்தமா? ஒரே குழப்பமாக இருக்கிறதோ? தலை பூராவும் அவியல் ஆகி விட்டதாக்கும்? வாருமையா, எல்லா மனிதரும் போகிற போக்கிலே நாமும் போவோம். நீரும் நானும் சேர்ந்து கொஞ்சம் மதுவை உள்ளே தள்ளுவோம்.''

ஆர்லோவ் தலை நிமிர்ந்து பாராமலே, "இன்னும் கொஞ்சம் நேரம் ஆகட்டும்'' என்று சொன்னுன்.

"உனக்காக நான் அங்கே காத்திருப்பேன். துயருடன் தனித்திருப்பேன்.''

அவனைப் பின்பற்றிச் செல்ல ஆர்லோவ் அதிகத் தாமதம் செய்வதில்லை. அவன் போன உடனே, கட்டு மஸ்தான சிறு உருவ மங்கை ஒருத்தி, பாதுகாப்பாகச் சுவர்களைப் பிடித்துக்கொண்டே கீழ்த் தளத்திலிருந்து ஏறி மேலே வந்து சேருவது வழக்கம்.

அவள் தலையை ஒரு போர்வையினுல் மூடி இறுகச் சுற்றியிருப்பாள். அந்த முக்காட்டின் ஊடாக ஒரு கண்ணும், கன்னத்தின் சிறு பகுதியும், நெற்றியும் வெளியே எட்டிப் பார்க்கும். அவள் தள்ளாடி நடந்து

முற்றத்தைக் கடந்து, தனது கணவன் முன்பு உட்கார்ந்து இருந்த சறுக்கு வண்டியை அடைந்து அதில் அமருவாள்.

**மேட்ரோனு**வைக் கண்டதும் யாரும் ஆச்சரியம் அடையமாட்டார்கள். அவளுடைய கணவன் போனதுமே அவள் வெளியே வந்து விடுவதை அவர்கள் கண்டு கண்டு பழக்கப்பட்டிருந்தார்கள். கிரிகரி குடித்து விட்டு வருந்தும் உள்ளத்தோடு மதுக் கடையிலிருந்து திரும்பி வருகிற வரையில் அவள் அதே இடத்தில் உட்காந்திருப்பாள் என்பது அவர்களுக்குத் தெரியும். அவள் முற்றத்திலேயே உட்கார்ந்திருப்பது ஏனென்ருல், கீழே குடியிருக்கும் அறையில் ஒரே புழுக்கமாக இருக்கும். அது மட்டுமல்ல; குடிபோதையில் திரும்புகிற கணவன் படிக்கட்டில் பத்திர மாக இறங்குவதற்கு அவள்தான் துணே புரிய வேண்டும். படிக்கட்டு செங்குத்தாகவும் பழுது பட்டும் இருந்தது. ஒரு தடவை கிரிகரி படிகளில் தடுக்கி விழுந்து உருண்டு புரண்டதில், கை மணிக்கட்டு பிசகி விட்டது. அதனுல் இரண்டு வார காலம் அவன் வேலே எதுவும் செய்ய முடியாமல் போய் விட்டது. அவர்களிடமிருந்த கொஞ்ச நஞ்ச உடைமைகளேக் கூட சாப்பாட்டுச் செலவுக்காக அவள் அடகு வைக்க வேண்டியது அவசியமாயிற்று.

அன்று முதல் மேட்ரோனு அவனுக்காகக் காத்திருப் பதை வழக்கமாக்கிக் கொண்டாள்.

பக்கத்து வீட்டுக்காரர்களில் யாராவது ஒருவர் சில சமயம் அவள் அருகே சென்று பேச்சுக்கொடுப்பது உண்டு. ஓய்வு பெற்ற உத்தியோகஸ்தரான **லெவ்செங்கோ** தான் வழக்கமாக அப்படிச் செய்வார். அமைதியான சுபாவமும் நுண்ணறிவும் பெற்றிருந்த உக்ரேனிய வாசி அவர். தொங்கு மீசையும், வழுக்கைத் தலேயும், சிவந்த மூக்கும் அவருக்கு இருந்தன.

அவர் அவளுக்குப் பக்கத்தில் உட்காரும் பொழுது கொட்டாவி விட்டுக்கொண்டே, "என்ன, மறுபடியும் சண்டையா?" என்று கேட்பார்.

"அதைப் பற்றி உனக்கென்ன? என்று எரிந்து விழு வாள் மேட்ரோனு.

"ஒரு மண்ணுமில்லே தான்" என்பார் அந்த உக்ரேனிய வாசி. அப்புறம் நீண்ட அமைதி.

அவள் மூச்சு விடும்பொழுது அவளுடைய மார்பினுள் வெகு ஆழத்தில் கிடக்கிற ஏதோ ஒன்று கரகரத்த ஓசை எழுப்பும்.

"நீங்கள் இரண்டு பேரும் எதைப் பற்றி ஓயாது சண்டை போடுகிறீர்கள்? உங்கள் இருவருக்கு மிடையே உள்ள தகராறு தான் என்ன?" என்று லெவ்செங்கோ அமைதியான சிந்தனைக்குப் பிறகு, ஆரம்பிப்பார்.

"அது எங்கள் சொந்த விஷயம்."

"அதில் என்ன சந்தேகம்" என்று தலையை ஆட்டிக் கொண்டே ஆமோதிப்பார் லெவ்செங்கோ.

"பின்னே நீ ஏன் அநாவசியமாகத் தலையிடுகிறே?"

"என்ன பெண்பிள்ளையடா இவள்! இவளிடம் ஒரு வார்த்தை கூடப் பேசக் கூடாதாம்! நீயும் கிரிகரியும் சரியான ஜோடிதான்—நான் உறுதியாகச் சொல்லுவேன். உனக்குத் தேவையானது என்ன தெரியுமா? தினசரி இரண்டு வேளையும் சரியான பூசைக் காப்பு தான்— காலை யிலே ஒரு தடவை; சாயங்காலம் ஒரு தடவை. அதுதான் உன்கிட்டே இருக்கிற முறைப்பு பூராவையும் போக் கடிக்கும்!"

இதைச் சொல்லி விட்டு, குறைபட்ட தோரணையில் எழுந்து அவர் அங்கிருந்து போய் விடுவார். அவளும் அதைத்தான் விரும்புவாள். ஏனெனில், சமீபத்தில் சில காலமாக அந்த முற்றத்தில் வதந்திகள் உலாவி வந்தன. உக்கிரேனியாக்காரர் அவளிடம் வீணுக்கு உறவு கொண்டாடவில்லை என்று தான்! இது அவளுக்கு அவர் மீது ஆத்திரம் ஏற்படச் செய்தது. பொதுவாக, அவரவர் அலுவலைக் கவனிப்பதோடு மட்டும் நின்று விடாத எல்லோர் மீதுமே அவளுக்கு ஆத்திரம் தான்.

உக்கிரேனியாக்காரர் முறுக்காக ராணுவ நடை நடந்து முற்றத்தின் மறு பக்கத்துக்குப் போவார். அவருக்கு நாற்பது வயது ஆகி விட்ட போதிலும் நடையில் தளர்ச்சி தென் படுவதில்லை.

திடீரென்று சென்கா எங்கிருந்தோ வந்து குதிப்பான்.

மேட்ரோனு இருக்கிற பக்கம் தலையாட்டிக்கொண்டே அவன் லெவ்செங்கோ காதில் ரகசியம் பேசுவான்: "அவள் இருக்கிருளே அந்த ஆர்லோவ் பெண்பிள்ளை, அவள் சரியான மிளகாய்ப் பழம் தான்."

"மிளகாய்ப் பழம் எப்படியிருக்கும் என்பதை நான் உனக்குக் கற்றுக்கொடுக்கிறேனடா பயலே!" என்று லெவ்செங்கோ உறுமினர். ஆனுலும் அவர் தனக்குத் தானே சிரித்துக் கொண்டார். துடிப்பு நிறைந்த சென்காவிடம் அவருக்குப் பிரியம் உண்டு. அவன் சொல்ல விரும்புவதை எல்லாம் அவர் சிரத்தையோடு கேட்டு வந்தார்.ஏனென்ருல் முற்றத்து ரகசியங்கள் எல்லாம் சென்காவுக்குத் தெரியும்.

சென்கா, அவருடைய மிரட்டலை அலட்சியப்படுத்திய வாறே, தனது பேச்சைத் தொடர்ந்தான்: "விஷம

விளையாட்டு எதுவும் அவளிடம் பலிக்காது. வர்ணத் தொழிலாளி மாக்ஸிம் அப்படி முயற்சி பண்ணிப் பார்த் தான். அவள் அவனுக்காக அவனுடைய மூஞ்சியைப் பதப் படுத்தி அனுப்பிவைத்தாள். அதை நானே பார்த்தேன். அவள் அவன் மூஞ்சியிலே மத்தளத்தை இடிப்பது போல குத்து கொடுத்தாளே பார்க்கணும்!''

உயிர்ப்பும் உணர்ச்சித் துடிப்பும் நிறைந்த சென்கா, பன்னிரண்டு வயதானவன் தான் என்றாலும், பாதிக் குழந்தையும் பாதிப் பெரிய ஆள் ஆகவும் வளர்ந்திருந் தான். கடல் பஞ்சு தண்ணீரை உறிஞ்சுவது போல் அவன் தன்னைச் சுற்றிலும் காணப்படுகிற ஆபாசங்கள் அபத்தங் களைப் பற்றி அக்கறையாகச் சிந்திப்பது உண்டு என்பதை விளம்பரப்படுத்துவது போல், இதற்குள்ளாகவே அவன் நெற்றியில் அழகிய கோடு ஒன்று நீண்டு கிடந்தது.

இப்பொழுது முற்றப் பகுதியில் நன்றாக இருட்டி விட்டது. அதற்கு மேலே சிறு சதுர வடிவமாகக் கருநீல வானம் நட்சத்திரங்கள் மினுமினுக்க ஒளி மயமாக விளங் கியது. உயரே நின்று பார்க்கும்பொழுது, நெடிது உயர்ந்த கட்டிடங்களால் வேலியிடப் பெற்ற ஆழமான படுகுழி போல் அந்த முற்றம் காட்சி அளிக்கும். அந்தக் குழியின் ஒரு மூலையில் சிறிய மங்கை ஒருத்தி தனது கணவனிடம் பட்ட அடிகளின் வேதனையிலிருந்து தேறிக்கொண்டிருந் தாள். குடிக்கச் சென்ற கணவன் வீடு திரும்புவதை எதிர் நோக்கிக் காத்திருந்தாள்.

ஆர்லோவ் தம்பதிகளுக்குக் கலியாணமாகி ஏறக் குறைய நான்கு வருஷங்களிருக்கும். அவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்திருந்தது. ஆனால் பதினெட்டு மாதங்கள் வாழ்ந்து விட்டு அது செத்துப் போயிற்று. அவர்கள்

இருவரும் அந்த இழப்பை எண்ணிப் பெரிதும் துயர் உற்றார்கள். ஆயினும் விரைவில் வேறொரு குழந்தையைப் பெற்றுவிடலாம் என்ற நம்பிக்கையினால் அவர்கள் ஆறுதல் அடைந்தார்கள்.

அவர்கள் வசித்த அறை நீளமாய், இருளடைந்து இருந்தது. மேலே குவிந்த கூரை பெற்றிருந்தது. கதவு தவிர, ஜன்னல்களுக்கு எதிர்த்தாற் போல, பெரிய ரஷ்ய அடுப்பு ஒன்றும் அங்கே இருந்தது. அடுப்புக்கும் சுவருக்கும் இடையே குறுகலான வழி ஒன்று காணப்பட்டது. சதுர வடிவமான திறந்த பகுதி ஒன்றில் வந்து சேர்ந்தது அது. முற்றத்தின் புறமாக அமைக்கப்பட்டிருந்த இரண்டு சாளரங்கள் வெளிச்சம் பரவ வகை செய்தன. அவற்றின் மூலம், சாய்ந்த ஒளிக் கற்றைகளாக உள்ளே புகுந்த வெளிச்சம் தெளிவின்றிக் கனத்து விழுந்தது. அந்த ஒரு அறை ஈரம் கசிந்து, பழமை படிந்து, மற்ற எதனுடனும் தொடர்பு இல்லாமல் வெட்டி விலக்கப்பட்டு விட்டது போல் தோன்றியது. மேலே வாழ்க்கையின் இயக்கங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. ஆயினும் இங்கே, தரை மட்டத்திற்குக் கீழே ஆர்லோவ் தம்பதிகள் குடியிருந்த பொந்தினுள், அதன் சின்னங்களாக வந்து சேர்ந்தவை விவரணையற்ற மந்தமான ஓசைகளும், தூசியும், வர்ண பேதங்கள் இல்லாத ஒளிக்கற்றைகள் மட்டுமே யாகும். சுவர் அருகே அடுப்பை அடுத்து, பெரிய மரப் படுக்கை ஒன்று கிடந்தது. மஞ்சள் பரப்பில், வெளிறிய சிவப்பு நிறப் பூக்கள் அணி செய்யும் துணித்திரைகள் அந்தப் படுக்கையைச் சுற்றித் தொங்கின. படுக்கைக்கு எதிரே கிடந்த மேஜையில் தான் செம்மானும் அவன் மனைவியும் காலை உணவு சாப்பிடுவார்கள். படுக்கைக்கும் தூரத்திலுள்ள சுவருக்கும் நடுவே உள்ள இடத்தில் தான் அவர்கள் வேலை செய்வார்கள். ஒளித் தூண்கள் இரண்டும் சரிந்து விழுந்ததும் அந்த இடத்தில் தான்.

பாச்சைகள் பெருந்தோரணையோடு சுவர்களில் மேலும் கீழுமாக ஊர்ந்து கொண்டிருந்தன. சஞ்சிகைகளிலிருந்து கத்திரித்து எடுக்கப்பட்ட படங்களை சுவர்களில் ஒட்டி வைப்பதற்காக உபயோகித்திருந்த கறுப்பு ரொட்டிமாவின் பொருக்குகளை அவை தின்று களித்தன. சோம்பேறி ஈக்கள் அலுப்புத் தரும்படியான ஒரே ரக இரைச்சலைப் பரப்பியவாறு எங்கும் மிதந்தன. ஈக்கள் மண்டிய படங்கள் அழுக்குப் படிந்த சுவர்களின் பகைப் புலனில் கரிய கரிய திட்டுகளாக அமைந்து கிடந்தன.

ஆர்லோவ் தம்பதிகளின் தினசரி நியதி இதுதான்: காலை ஆறு மணிக்கு மேட்ரோனு விழித் தெழுவாள். உடலைக் கழுவி விட்டு, ஸமோவாரில் தீ மூட்டுவாள். சண்டையில் அடிபட்டு, அங்கு மிங்கும் தகரப் பற்றுகள் பிடிக்கப்பட்டு விளங்கிய உருப்படி அது. ஸமோவாரில் தண்ணீர் கொதிப்பதற்காகக் காத்திருக்கிற வேளையில் அவள் அறையைச் சுத்தப்படுத்துவாள்; கடைக்குப் போய் வருவாள். பிறகு தன் கணவனை எழுப்புவாள். அவன் எழுந்து, தன்னைச் சுத்தம் செய்து கொள்வதற்குள், ஸமோவார் மேஜை மீது இரைந்து கொண்டிருக்கும். காலை உண்டியை ருசிப்பதற்காக அவர்கள் அமருவார்கள். தே நீரும் வெள்ளை ரொட்டியும் — இரண்டு பேருக்கும் சேர்த்து ஒரு ராத்தல்—தான் அவர்கள் காலை ஆகாரம்.

கிரிகரி செருப்பு தைப்பதில் நன்கு தேர்ந்தவன். அதனுல் எப்பொழுதும் அவனுக்கு நிறைய வேலை இருந்தது. காலையில் சாப்பிடும் சமயத்திலேயே, அன்று பகற் பொழுதில் செய்தாக வேண்டிய அலுவல்களைக் கணக்கிடுவான். தேர்ச்சி பெற்றவனின் திறமை தேவை என்று தோன்றக் கூடிய வேலைகளை எல்லாம் அவனே கவனிப்பான். இரண்டாம் பட்சமான அலுவல்களை—நூலுக்கு

மெழுகிடுதல், செருப்புகளின் உட்புறப் பகுதிகளைப் பொருத்துதல், புதிய குதி கால் பகுதிகளுக்கு ஆணி அடித்தல் போன்றவற்றை — மேட்ரோனுவிடம் ஒப்படைத்து விடுவான்.

மத்தியானச் சாப்பாட்டுக்கு என்ன என்ன செய்யலாம் என்பது பற்றியும் அவர்கள் காலை ஆகாரத்தின் போதே விவாதித்து முடிவு கட்டி விடுவார்கள். குளிர் காலத்தில்—அவர்கள் நிறையச் சாப்பிடும் பருவம் அது— இந்த விஷயம் சுவையான விவாதத்துக்கு வகை செய்யும். கோடை காலத்தில் அவர்கள் சிக்கனத் திட்டத்தை அனுஷ்டிப்பார்கள். ஞாயிற்றுக் கிழமை தோறும் தான் அடுப்பு பற்ற வைப்பார்கள். ஒரு சில ஞாயிறுகளில் அடுப்பு புகையாமல் இருந்து விடுவதும் உண்டு. ஆகவே, அவர்களுடைய முக்கிய உணவு குளிர்ந்த சூப்பு தான். வெங்காயத்தையும் கருவாட்டுத் துண்டுகளையும் அதில் கலந்து கொள்வார்கள். சில சமயங்களில், பக்கத்து வீட்டாரின் அடுப்புகளில் சமைத்து எடுத்த மாமிசத்தையும் சேர்த்துக் கொள்வது உண்டு. காலைச் சாப்பாடு முடிந்ததும், அவர்கள் இருவரும் வேலை செய்ய உட்காருவார்கள். ஒரு பக்கம் கீறல் விழுந்த ஊறுகாய் தொட்டி ஒன்றைக் குப்புறப் போட்டு அதன் மீது கிரிகரி உட்கார்ந்து கொள்வான். அவனுக்கு அருகில் தணிந்த ஸ்டூல் ஒன்றில் அவன் மனைவி இருப்பாள்.

முதலில் அவர்கள் மௌனமாக வேலை செய்வார்கள். பேசுவதற்குத்தான் விஷயம் ஏது? வேலை சம்பந்தமாக ஒரு சில வார்த்தைகள் பரிமாறிக் கொள்ளலாம். ஆனால், மறுபடியும் பேசாமல் வேலை செய்வார்கள். இந்த மௌனம் அரை மணி நேரமோ, அல்லது அதற்கும் அதிகமாகவோ நீடித்திருக்கும். டப் – டப் என்று சுத்தி ஒலி செய்யும். தோலினூடாகப் புகுந்து இழுபடும் நூல் 'விஷ் – விஷ்'

என சப்திக்கும். சமயாசமயங்களில் கிரிகரி விடுகிற நெடுங் கொட்டாவி கர்ஜனையாகவோ உறுமலாகவோ முடியும். மேட்ரோனா பெருமூச்செறிவாள். கிரிகரி பாடினாலும் பாடுவான். அவனுடைய குரலில் கரகரப்புத் தட்டும். ஆயி னும் அவன் நன்றாகப் பாடுவான். பாட்டின் வார்த்தைகள் முட்டி மோதிக் கொண்டு சோக நாதமாக நீண்டு கிரிகரி யின் தொண்டையிலிருந்து வேகமாகப் புரண்டு வரும். அவற்றில் ஏதாவது வார்த்தைகள் வெளிப்படாமலே நின்று விடுமோ என்று பயந்து கொண்டு அவை ஓடி வரு வது போல் தோன்றும். துயர நிறைவுகளுடன் ஒன்றாகத் தோய்வுற்று நீண்டு, 'எக்' எனும் ஒலிப்பும் கூடிக் கலக்க, சோகமாய் உரத்து ஜன்னல் வழியாக மிதந்து முற்ற வெளியை அடையும். மேட்ரோனா தனது இனிய வளமான மென் குரலைத் தன் கணவனின் கரகரத் தொனியுடன் இணைய விடுவாள். அவ் இருவரின் முகங்களும் சோக மயமாய் சிந்தனை நிறைந்து திகழும். கிரிகரியின் கரிய கண்கள் நீர் மல்கி விளங்கும். சங்கீதம் மேட்ரோனாவை மயக்குவது போல் தோன்றும். அவள் ஒரு விதப் பரவச நிலையிலே முன்னும் பின்னுமாக அசைவாள்; திடீரென்று உணர்ச்சி மிகுதியினால் பாட்டைப் பாதியிலேயே நிறுத்து வாள்; பிறகு மீண்டும் சேர்ந்து பாடுவாள். அவர்கள் பாடும் பொழுது அவரவர் இருண்ட வாழ்வின் மந்தத் தன்மையையும் வெறுமையையும் மற்றவர் வார்த்தை களில் கூட்டிக் கலக்க முயலும் போது, தத்தமது உள்ளத் தில் அரை குறையாக உருவாகிய எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் வெளிப்படுத்தும் முயற்சியில் முனைந் திருக்கும் பொழுது, ஒருவரைப் பற்றிய பிரக்ஞை மற்ற வருக்கு இருப்பதே யில்லை.

சில வேளைகளில் கிரிகரி இவ்விதம் இட்டுக் கட்டிப் பாடுவான்:

ஆ, என்னே எந்தன் வாழ்வு!
மும்முறை பாழாம் எந்தன் வாழ்வு!
ஆ, என்ன துயரம்! பொல்லாத் துயரம்!
என்னை விட்டு அகலாத் துயரம்!

இத்தகைய இட்டுக் கட்டுதல்களை மேட்ரோனு அங்கீ கரிப்பதில்லை.

“ஊளையிடுவதை நிறுத்து. யாராவது சாவதற்கு முந்தி நாய் ஊளையிடுமே அது மாதிரி ஒலிக்கிறது நீ கத்துவது.”

இது எப்பொழுதும் அவனுக்குக் கோபமே தரும்.

“போடி, வெருளிப் பொம்மையே! ஏதோ ரொம்பவும் தெரிந்து விட்டவள் மாதிரித்தான்! உப்பி வடியும் மொந்தை மூஞ்சிக்காரி!”

“ஊளையிடுவதை நிறுத்தி விட்டுக் குரைக்க ஆரம் பித்து விட்டது!”

“வாயை மூடிக் கொண்டு உன் வேலையைக் கவனி. நான் யார்? நீ வைத்த ஆளா; நான் என்ன செய்ய வேணும் என்று நீ அதிகாரம் பண்ணுவதற்கு?”

அவன் கழுத்து நரம்புகள் புடைத்து வருவதையும், அவன் கண்களில் விகாரமான ஒளி படிந்து விட்டதையும் கவனித்ததும், மேட்ரோனு தனது வாயை மூடிக் கொள் வாள்; வெகு நேரம் வரை மூடியே வைத்திருப்பாள்; தன் கணவனின் கேள்விகளை எல்லாம் வேண்டுமென்றே அலட் சியம் செய்து விடுவாள். அவனுடைய கோபம் கொதித் தெழுந்த வேகத்திலேயே அடங்கியும் விடும் என்பது அவளுக்குத் தெரியும்.

சமாதானத்தை வேண்டியும், அவள் புன்னகையை எதிர் நோக்கியும் அலையும் அவன் கண்களை அவள் புறக் கணித்து விடுவாள். இவ்விதம் அவனுடைய உணர்ச்சி களோடு விளையாடுவது அவன் கொதிப்பைக் கிளறிக் கோபத்தை விளைவிக்கும் என்ற பயத் துடிப்பு அவள் உள்ளத்தில் நிறைந்து விடும். ஆனாலும், அதே சமயத்தில் அவள் அவனோடு கோபம் கொள்வதிலும், அவன் சமாதானமாகி விடுவதற்குச் செய்யும் முயற்சிகளைக் கவனிப் பதிலும் மிகுந்த திருப்தியே அடைந்தாள். அதன் மூலம் அவள் வாழ்கிறாள், உணர்கிறாள், சிந்திக்கிறாள் என்ற நிறைவாவது ஏற்படுகிறதே!

அவர்கள் இருவரும் வாலிபமாகவும் வலிமையுடனும் இருந்தார்கள். பரஸ்பரம் அவர்கள் காதலித்தார்கள். ஒரு வரைப் பற்றி மற்றவர் பெருமையும் கொண்டிருந் தனர். கிரிகரி ஆற்றல் நிறைந்தவன்; ஆர்வம் மிகுந்தவன்; அழகானவன். மேட்ரோனா இனியள்; சதைப் பிடிப்பு உடையவள். அவளுடைய சாம்பல் வர்ண விழிகளிலே தனி ஒளி மின்னியது. முற்றத்து ஆசாமிகள் பாஷையிலே 'அருமையான குட்டி' அவள். அவர்கள் ஒருவரை ஒருவர் காதலித்தார்கள். ஆயினும் வாழ்க்கை அவர்களுக்கு அலுப்பு மயமாகத் தோன்றியது. பரஸ்பரம் ஒருவரிட மிருந்து மற்றவர் விடுதலை பெறவும், சிந்திக்க வேண்டும் உணர வேண்டும் என்று இயல்பாக எழுகிற மனித ஏக்கத்தை நிறைவு செய்வதற்கும்—சுருக்கமாகச் சொன்னால், வாழ்க்கையை வாழ்வதற்கு—அவர்களிடம் வேறெவ்விதமான சிரத்தையுமில்லை; புதிய மனோபாவங் களும் இல்லை. அவர்களுக்கு வாழ்க்கையில் ஏதேனும் ஒரு பற்றுதல் தேவை. அது காசுகாசாகச் சேர்த்து பணத்தைப் பாதுகாக்கும் பண்பாக இருந்தால் கூடப் பரவாயில்லை.

ஆனால், அவர்களிடம் அது தான் இல்லை,

சதா அவர்கள் ஒன்றாகவே வசித்ததனால், ஒருவருக் கொருவர் மிகவும் பழகிப் போனார்கள். ஒவ்வொருவருடைய தனித் தனி வார்த்தையும் அங்க அசைவும் அவர்களுக்குப் பழகிப் போயின. ஒவ்வொரு நாளும் அவர்களுக்கிடையே எவ்விதமான மாறுதலையும் கொண்டு சேர்க்காமல், கழிந் தது. விடுமுறை தினங்களில் சில சமயம் அவர்கள் நண்பர்களைக் காணச் செல்வார்கள். அந்த நண்பர்களும் அவர்களைப் போலவே உணர்வினால் வறியவர்கள் தான். சில சமயம் நண்பர்கள் பாடிக் களிக்கவும், குடித்து மகிழவும்—ஏன், சண்டை போட்டு ஆரவாரிக்கவும் கூட—இவர்களைத் தேடி வருவதும் உண்டு. பிறகு மீண்டும் நாட்கள் விசேஷமற்ற வகையில், கண்ணுக்குப் புலனாகாத ஏதோ ஒரு சங்கிலியின் கனத்த கரணைகளைப் போல, அதனதன் வேலை சுமையாய் அழுத்த, பரஸ்பர அலுப்பும் அர்த்த மற்ற கோபமும் உராய, ஒவ்வொன்றாக ஊர்ந்து செல்லும்.

வேளா வேளைகளில் கிரிகரி முணமுணத்துக் கொள்வான்:

"வாழ்க்கை வெறும் அவிசாரி நாய்! அதனிடம் எனக்கு என்ன ஆகவேண்டிக் கிடக்கிறது? உழைப்பதும் ஒப்பாரி வைப்பதும்... ஒப்பாரி வைப்பதும் உழைப்பதும் தான்." கொஞ்ச நேரம் சும்மா இருந்து விட்டு அவன் தன் கண்களை கட்டிட முகட்டுக்கு உயர்த்துவான். உதடுகளில் புன்னகையின் சாயை நிழலாட அவன் பேசுவான்: "ஆண் டவனின் அருளுக்கு இணங்க என் அம்மா என்னை இந்த உலகத்தில் கொண்டு சேர்த்தாள். அதற்கு எதிராக நான் எதுவும் சொல்ல முடியாதுதான். அப்புறம் நான் என் தொழிலைக் கற்றேன். ஆனால் அது எதற்காக

என்பதுதான் கேள்வி. உலகத்திலே போதுமான அளவு செம்மான்கள் இல்லையா என்ன? போகட்டும். நான் செம்மான் ஆகி விட்டேன். அதனுல் எனக்கு என்ன நன்மை ஏற்படுகிறது? வெறுமனே இந்தப் பொந்தில் உட்கார்ந்து ஓயாது உழைக்க வேண்டியது. அப்புறம் சாக வேண்டியது தான். காலரா வேகமாகப் பரவி வருவதாகச் சொல்கிருர்கள். அது பாட்டுக்கு வரட்டும். முன்னெரு காலத்தில் கிரிகரி ஆர்லோவ் என்று ஒரு செம்மான் வசித்தான்; அவன் காலராவினுல் செத்துப் போனுன் என்று ஏற்படட்டுமே. இதில் ஏதாவது அர்த்தம் இருக்கிறதா? நான் வாழ்ந்தேனு, செருப்பு தைத்தேனு, செத்தேனு இல்லையா என்பது பற்றி யாருக்கு அக்கறை?''

தனது கணவனின் வார்த்தைகளில் என்னவோ பயங்கரம் கலந்து கிடப்பதாக உணர்ந்து மேட்ரோனு எவ்விதமான குறிப்புரையும் கூற மாட்டாள். அவன் அம்மாதிரி எல்லாம் பேசக் கூடாது; ஏனெனில் அவை கடவுளுக்கு விரோதமானவை. மனிதர்களின் வாழ்க்கையை எப்படி அமைக்க வேண்டும் என்பதுபற்றி அவருக்கு மிக நன்ருகத் தெரியும் என்று அவள் எப்பொழுதாவது சில சமயங்களில் சொல்வதும் உண்டு. அல்லது, அவளும் தன் வயம் இழந்து பொறுமையின்றி இருந்தால், குத்தலாக மொழிவாள்:

“நீ குடிப்பதை நிறுத்தி விட்டால் வாழ்க்கையில் அதிக ஆனந்தம் காண்பாய். அப்பொழுது இம்மாதிரியான எண்ணங்கள் உன் மண்டைக்குள் புகவே புகாது. மற்றவர்கள் சும்மா முணுமுணுத்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக பணத்தை மிச்சப் படுத்துகிருர்கள்; தொழிற்கூடங்களை சொந்தமாக வாங்கிக் கொள்கிருர்கள். அப்புறம் சீமான்கள் மாதிரி வாழ்க்கை நடத்துகிருர்கள்.''

"உன் வார்த்தைகள் வெறும் சலசலப்புதான். நீ சுத்த முட்டாள் தான். நீ உன் மூளையை உலுக்கிச் சரி செய்து விட்டு உன்னையே கேட்டுப்பார்—இந்த வாழ்க்கையில் நான் பெறுகிற ஒரே இன்பம் அதுவாக இருக்கையில் நான் குடிப்பதை எப்படி விட்டு விட முடியும்? மற்ற வர்களாம் மற்றவர்கள்! ரொம்பப் பேரைப் பற்றி நீ நிறைய அறிந்து விட்டாயாக்கும்! கலியாணம் ஆவதற்கு முந்தி நான் இப்படியா இருந்தேன்? உண்மையைச் சொல்லப் போனால்,என்னை வறள உறிஞ்சி,என் வாழ்க்கை யில் உள்ள சந்தோஷத்தை எல்லாம் பாழாக்கி விட்டது நீ தான். ஹூம்ப், நீ சரியான தேரைத் தவளை!"

மேட்ரோனா வேதனை அடைவது இயல்புதான். எனினும் தன் கணவனின் சொற்களில் உள்ள உண்மையை அவள் மறுக்க முடியாது. அவன் குடித்த வேளைகளில் எல்லாம் உற்சாக மாகவும் அவளிடம் பிரியம் உள்ளவனாகவும் நடந்து கொள்வான். 'மற்ற மனிதர்கள்' உண்மையில் அவளுடைய கற்பனையில் உதித்த வர்கள் தான். அவர்களுக்குக் கலியாணம் நிகழ்வதற்கு முன்பு கிரிகரி உற்சாகம் மிகுந்தவனாகவும், இரக்க சித்தம் உள்ளவனாகவும், வேடிக்கை நிறைந்தவனாகவும் தான் விளங்கினான்.

"இது ஏன் என்று தான் நானும் அதிசயிக்கிறேன். உண்மையிலேயே நான் இவனுக்கு ஒரு சுமையாகி விட் டேனோ?" என்று அவள் தன்னைத் தானே கேட்டுக் கொள்வாள்.

இந்த நினைப்பினால் அவள் திடுக்கிட்டாள்; தங்கள் இருவருக்காகவும் வருத்தப்பட்டாள், அவன் அருகில் சேர்ந்து, ஆசையோடு அவனது கண்களுக்குள் கூர்ந்து நோக்கியவாறே அவள் அவனுடைய மார்பில் துவண்டு அவனைத் தழுவுவாள்.

"இதோ இவள் தன் நாக்கினுல் என்னை நக்க ஆரம்பித்து விடுவாள். நல்ல பசு மாடு தான்" என்று உற்சாகம் அற்ற முறையில் முனங்கி, கிரிகரி அவளை ஒதுக்கித் தள்ளுவது போல் கை அசைப்பான். ஆனுல் அவளோ, அவன் தன்னை வெறுத்து ஒதுக்க மாட்டான் என்ற உறுதியோடு, மேலும் நெருக்கமாக அழுந்தி அவன் மீது புரளுவாள்.

அப்புறம் என்ன! அவன் கண்களில் சுடரொளி கனலும். கையிலிருக்கும் அலுவலை அவன் அப்படியே போட்டு விடுவான். மனைவியை எடுத்துத் தனது கால் முட்டுகள் மீது அமர்த்தி.அவளை முத்தமிடுவான். திரும்பத் திரும்ப முத்தமிடுவான். ஆழ்ந்த மூச்சுகள் உயிர்த்து, முத்த மிட்டுக் கொண்டே, வேறு யாராவது கேட்டு விடுவார்களே என்று பயப்படுவது போல், மிக மெதுவாக முணு முணுக் குரலில் அவளிடம் சொல்வான்:

"எக், மேட்ரோனு, நீயும் நானும் வாழ்கிற இந்த வாழ்க்கை இருக்கிறதே, அது மகா கேவலமானது. நாம் ஒருவருக்கொருவர் காட்டு மிருகங்கள் மாதிரி விழுந்து பிடுங்குகிறோம். அது ஏன்? ஏனென்ருல் என் விதி அப்படி. ஒவ்வொருவரும் ஒவ்வொரு நட்சத்திரத்திலே பிறக்கிருர்கள். அந்த நட்சத்திரம் தான் அவரவர் விதி ஆகும்."

ஆனுலும் இந்த விளக்கம் அவனுக்கே திருப்தி தராது. அவன் தன் மனைவியை இறுக அணைத்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்து விடுவான்.

நெடு நேரம் அவர்கள் இப்படியே, அழுக்குப் படிந்த அந்த அறையின் கெட்ட நாற்றங்களுக்கு மத்தியில் உட்கார்ந்திருப்பார்கள். அவள் பெரு மூச்செறிவாள்; ஒன்றும் பேசமாட்டாள். ஆனுல், சில சமயம், இத்தகைய இன்பகரமான இனிய வேளைகளில், அவள் அவனிடம் பெற்ற

அவமரியாதைகளையும் அடி உதைகளையும் பற்றி நினைத்துப் பார்ப்பாள். உடனே அவளுக்கு அழுகை வந்து விடும். மெதுவாக அழுது கொண்டு குறை கூறுவாள் அவள். அவளது மென்மையான குறை கூறல்களினால் உள்ளக் கிளர்ச்சி பெற்று அவன் மேலும் தீவிரமாக அவளைக் கொஞ்சுவான். அதனால் அவள் இன்னும் அதிகமாகக் கண்ணீர் வடிப்பாள். இறுதியில் இது அவனுக்கு எரிச்சலையே தரும்.

"சரி சரி. உன் ஒப்பாரியை நிறுத்து. நான் உன்னை அடிக்கிற போது அது உனக்கு எவ்வளவு வலி உண்டாக்குகிறதோ, அதை விட ஆயிரம் மடங்கு வேதனை எனக்கு ஏற்படக் கூடும்; தெரியுமா? அதனாலே நீ உன் வாயை மூடிக் கொண்டிரு. பெண் ஒருத்திக்கு ஒரு அங்குல இடம் கொடுத்தால் போதும்; அவள் ஒரு மைல் பிடுங்கிக் கொள்வாள். இந்த மாதிரிப் பேச்சை விட்டு விடு. வாழ்வதிலே அலுப்புக் கொண்டு சாவைத் தேடுகிற ஒருவனிடம் சொல்வதற்கு என்ன இருக்கிறது?"

இதர வேளைகளில், அவளுடைய அமைதியான கண்ணீர்ப் பெருக்கினாலும், உணர்ச்சி நிறைந்த குறை கூறல்களினாலும் அடங்கிப் போவான் அவன். உடனே வருத்தத்தோடு விஷயங்களை விளக்கிச் சொல்வதற்காக அவன் பெரும்பாடு படுவான்.

"என்னைப் போன்ற ஒரு மனிதனோடு என்ன தான் செய்ய முடியும்? நான் சதா உன்னைக் காயப் படுத்துகிறேன். இதை நானே அறிவேன். ஆனால் எனக்கு இருப்பது நீ ஒருத்தி தான் என்பதையும் நான் அறிவேன். உண்மைதான்; சில சமயங்கள் நான் அதை மறந்து விடுகிறேன். சில நேரங்களில் உன் பக்கம் பார்க்கக் கூட சகிக்கவில்லை எனக்கு. மேட்ரோனா, அதை நினைத்துப் பார்!

உன்னை அளவுக்கு அதிகமாக ருசித்து விட்டது போன்ற உணர்ச்சிதான். அப்போதெல்லாம் என் இதயத்தினுள் ஒரு வெறி புகுந்து விடுகிறது. உன்னை துண்டு துண்டாகப் பிய்த்து எறிய வேண்டும் என்கிற வெறி. என்னையும் கூடக் கிழித்து விட வேணும் என்ற துடிப்பு. எவ்வளவுக்கு எவ்வளவு உன் பங்கில் நியாயம் இருக்கிறதோ, அவ்வளவுக்கு அதிகமாக நான் உன்னைக் காயப் படுத்த விரும்புகிறேன்.''

அவனை அவள் நன்ருகப் புரிந்து கொள்ள முடியாமல் இருக்கலாம். ஆயினும் அவனுடைய துக்க மயமான மென் குரலினுல் அவள் வெகுவாக ஆறுதல் அடைவாள்.

"ஆண்டவன் அருள் இருந்தால், நாம் இதைச் சமாளித்து விடுவோம். நாம் ஒருவருக் கொருவர் பழகிப் போவோம்'' என்று அவள் சொல்லுவாள். இதற்கு முன்பிருந்தே வெகு காலமாக அவர்கள் இருவரும் பரஸ்பரம் பழகிப் போனது மட்டு மல்ல; சலிப்பும் கொண்டு விட்டார்கள் எனும் உண்மையை உணராமலே அவள் பேசுவாள்.

"நமக்கு ஒரு குழந்தை மட்டும் பிறந்திருக்குமாளுல், நிலைமை வேறு விதமாக அமைந்திருக்கும். நம்மை சந்தோஷப்படுத்தவும், நாம் அக்கறை காட்டுவதற்கும் ஏற்ற ஒரு சாதனமாகிவிடும் அது'' என்று கூறி நெடுமூச்சு எறிவாள் அவள்.

"சரிதான். பின்னே நீ ஏன் குழந்தை பெறவில்லை?''

"என் வயிற்றில் பிள்ளை தங்குவது கஷ்டம். நீ அடிக்கிற விதம் தான் காரணம். எப்பொழுது பார்த்தாலும் நீ என் வயிற்றிலும் விலாவிலும் தான் கடுமையாகத் தாக்குகிருய். நீ மட்டும் உன் கால்களால் உதைக்காமல் இருந்தால்.,....''

எதிர்பாராத இக் கூற்றினால் திடுக்கிட்டவனாய் கிரிகரி முனங்கினான்: "உம்ம். அது மாதிரி நேரங்களில் எங்கே எப்படித் தாக்க வேண்டும் என்று யாருக்குத் தெரிகிறது? நான் பிசாசு இல்லையே. நான் சும்மா வேடிக்கையாக அப்படிச் செய்யவில்லை. மிகுதியான துயரம் தான் என்னை அதற்குத் தூண்டி விடுகிறது."

"அது எங்கே யிருந்து வருகிறது—அதுதான், உன்னுடைய துயரம் தான்?" என்று மகிழ்ச்சி இல்லாதவளாய் மேட்ரோனா விசாரித்தாள்.

"அது என் விதி, மேட்ரோனா" என்று வேதாந்தம் பேசினான் கிரிகரி. "என் விதியும் என்னுடைய இயல்பும் தான். என்னைப் பார். மற்றவர்களை விட நான் மோசமானவனா? உதாரணமாக, அந்த உக்ரேனியாக்காரனை விட நான் என்ன மட்டமா? இருந்தாலும் துயரம் ஒரு பொழுதும் அவனை அணுகுவதில்லை. அவன் தன்னந்தனியாகத் தான் இருக்கிறான்—மனைவி இல்லை; யாருமே இல்லை. எனக்கு நீ கிடைக்காமலிருந்தால் நான் செத்துப் போயிருப்பேன். ஆனால் அவன் கவலைப்படுவதாகவே தோன்றவில்லை. சும்மா உட்கார்ந்து புகை பிடித்துக் கொண்டு புன்னகை புரிந்தபடி, புகை பிடிப்பதற்கு ஒரு குழாய் இருக்கிறதே என்ற திருப்தியோடு, காணப்படுகிறான். வலுத்த பயல் அவன். ஆனால் நான் அப்படி இல்லை. உள்ளத்தில் சஞ்சலத் தன்மையோடு தான் நான் பிறந்தேன். அது என் சுபாவம். நான் உருக்கினாலான வில் விசை மாதிரி. இலேசாகத் தொட்டாலும் போதும். அது துடிக்க ஆரம்பித்து விடும். உதாரணத்துக்குச் சொல்கிறேனே: நான் உலாவப் போகிறேன். இதையும் அதையும் இன்னும் எதை எல்லாமோ பார்க்கிறேன். எனக்கு என்று எதுவுமின்றி நான் இருப்பதை உணர்கிறேன். அது என்னை வெறியனாக்கி விடுகிறது. அந்த

உக்ரேனியன் இருக்கிருனே, அவன் அதைப் பெரிதுபடுத்து வதில்லை. எதுவுமே இல்லாமல் அவன் வாழ முடிகிறது. அவன் தாடி நாசமாய்ப் போக! அவன் கூட என்னை வெறியன் ஆக்குகிருன். ஏனென்ருல் அவன் எதுவும் இல்லாமலே வாழ முடிகிறது. ஆனால், எனக்கோ—நான் விரும்பாத பொருள் எதுவுமே இல்லை. ஆனாலும் நான், எனக்கென்று குறிப்பிடுவதற்கு ஒன்றுமே இல்லாமல், இங்கே இந்தப் பொந்தில் உட்கார்ந்து நாள் பூராவும் உழைத்துக் கொண்டேயிருக்கிறேன். அல்லது, உன்னையே எடுத்துக் கொள்வோம். நீ என் மனைவி தான். இருந் தாலும் என்ன? நீயும் மற்ற எல்லோரையும் போல் சாதாரணமான ஒரு பெண்பிள்ளை. ஒரு பெண்ணுக்கு வேண்டிய சகல உடைமைகளையும் பெற்றவள். அவ்வளவு தானே! உன்னைப் பற்றித் தெரிந்து கொள்ளக் கூடிய அனைத்தையும் நான் அறிந்து கொண்டேன். நாளை நீ எப்படித் தும்முவாய் என்பது கூட எனக்குத் தெரியும். ஏனெனில், குறைந்த பட்சம் ஆயிரம் தடவைகள் நீ தும்மியதை நான் கேட்டிருக்கிறேன். ஆகையால் ஊக்க மும் உற்சாகமும் பெறுவதற்கு என்ன இருக்கிறது? ஒரு எழவுமே இல்லை. அதனுலே நான் மதுக் கடையைத் தேடிப் போகிறேன். ஏனென்ருல் அங்கே மகிழ்ச்சியாவது கிடைக்கிறதே.''

"கலியாணம் செய்து கொள்ளும்படி உன்னைத் தூண்டியது எது?'' என்று மேட்ரோனு கேட்டாள்.

சிறு சிரிப்புச் சிதறினுன் கிரிகரி.

"சைத்தானுக்குத்தான் தெரியும். உண்மையைச் சொல் வதானுல், நான் கலியாணம் செய்திருக்கவே கூடாதுதான். நான் ஒரு நாடோடியாக வாழ்ந்திருக்க வேண்டும். அவ் வாறிருந்தால் நான் பட்டினியாக அலைய நேரினும்

நேரலாம். எனினும், என் விருப்பம்போல் எந்த இடத்துக்கு வேண்டுமானாலும் போகக்கூடிய சுதந்திரமாவது எனக்கு இருக்குமே. இந்த உலகத்தின் இறுதி முனைகள் வரை நான் சுற்றித் திரிய முடியுமே'' என்றான் அவன்.

“இப்பொழுது வேண்டுமானாலும் நீ போகலாம். என்னையும் சுதந்திரமாகப் போகவிடு'' என்று மேட்ரோனா சொன்னாள். அவள் கண்களில் நீர் பொங்கி நின்றது.

“நீ கூடவா? நீ எங்கே போக ஆசைப்படுகிறாய்?'' என்று கிரிகரி கடுகடுப்போடு கேட்டான்.

“அது என் சொந்த விஷயம்.''

“எங்கே என்று என்னிடம் சொல்லு!''

அவன் கண்கள் அச்சுறுத்தும் வகையில் ஜொலித்தன.

“கத்தாதே. நீ என்னை பயமுறுத்த முடியாது.''

“ஓகோ, நீ வேறு யார் மீதோ கண்வைத்து விட்டாய். இல்லையா? அதைச் சொல்லி விடு!''

“என்னைப் போக விடு!''

“எங்கே போவாய்?'' என்று உறுமினான் கிரிகரி.

அவன், கைக்குட்டையை உதறித் தள்ளி விட்டு, அவள் கூந்தலைப் பற்றி இழுத்தான். அவனுடைய பலாத்காரம் அவள் கோபத்தைக் கிளறி விட்டது. கோபம் அவளுக்கு மிகுந்த திருப்தியை உண்டாக்கி, அவள் உள்ளத்தின் ஆழம் வரையில், ஓர் கிளுகிளுப்பை ஏற்படுத்தியது. ஆகவே, அவனது பயத்தை போக்கடிக்கக்கூடிய வார்த்தையைச் சொல்வதற்குப் பதிலாக, அவள் அவனை நேருக்கு

நேராகப் பார்த்துக்கொண்டே அர்த்தம் நிறைந்த சிரிப்பு சிரித்து, அவனுடைய கோபத் தீயை விசிறி விட்டாள். அவன் தன்னிலை இழந்தான்; அவளை அறைந்தான்; இரக்கம் சிறிதுமின்றி அடித்தான்.

பிறகு இரவு நேரத்தில், அவள் மகா மோசமாகக் காயம் பட்டும் மனம் முறிந்தும் படுக்கையில் அவன் பக்கத்தில் கிடந்து முனங்குகிற போது, அவன் தனது கடைக் கண்ணுல் அவளைக் கவனித்து ஆழ்ந்த பெரு மூச்செறிந்தான். அவன் துயரமுற்று தன் மீதே வெறுப்பு கொண்டான். அவனது மனச் சாட்சி அவனுக்கு வேதனை தந்தது. ஏனெனில், அவன் பொருமைப் படுவதற்கு அவசியமே கிடையாது; எவ்விதக் காரணமும் இல்லாமலே அவன் அவளை அடித்துவிட்டான் என்பதை அவனே அறிந்தான்.

"சரி சரி. அவ்வளவு போதும். என் பேரில்தான் குற்றம் என்று நினைக்கிறேன். ஆனுல் நீயும் நல்ல ஆள்தான். என்னைக் குத்திக் குத்திக் கோப மூட்டியதைத் தவிர நீ ஏன் வேறு எதுவும் சொல்லவில்லை? நீ ஏன் அப்படிச் செய்ய வேண்டும்?" என்று அவன் கஷ்டத்தோடு சொன்னுன்.

அவள் பதில் பேச வில்லை. ஏன் என்று அவள் அறிவாள். இப்பொழுது, காயம் பட்டு ரத்தம் வடித்துக் கொண்டு தான் கிடக்கும் நிலையிலே, அவனுடைய அன்புத் தழுவுதல்கள்—இராசியாகப் போவதற்காக அவன் காட்டும் மென்மையும் உணர்ச்சிப் பெருக்கமும் கலந்த கொஞ்சுதல்கள் — தனக்குக் கிடைக்கும் என்பதை அவள் அறிவாள். அதற்காக மட்டிலுமே அவள் தனது வாழ்வின் ஒவ்வொரு நாளும் அடிபட்டு நொறுங்கிய உடலின் வேதனையைச் சகித்துக் கொள்ளத் தயாராக இருந்தாள்.

அவளது கணவன் அவளை இலேசாகத் தொடுவதற்கு முன்னரே, அவள் ஆனந்தத்தை எதிர்பார்த்த நிலையி லேயே கண்ணீர் வடித்தாள்.

"வா, வா, மேட்ரோனு. வா என் சின்னப் புருவே. அழாதே. என்னை மன்னித்து விடு, அன்பே" என்றுன் அவன். அவள் கூந்தலை வருடினுன். அவளை முத்த மிட்டான். தனது உள்ளம் உடல் பூராவிலும் நிறைந்து வழிந்த ஒரு கசப்பு உணர்ச்சியைத் தடுப்பதற்காக அவன் தனது பற்களைக் கடித்துக் கொண்டான்.

அவர்கள் வீட்டு ஜன்னல்கள் திறந்தே கிடந்தன. ஆனுல் வான வெளி பார்வையில் படாதபடி செங்கல் சுவர் ஒன்று தடுத்து நின்றது. எப்பொழுதும் போல. அவர்களுடைய அறை இருண்டு, காற்ருேட்ட மின்றிப் புழுங்கியே கிடந்தது.

"எக் என்ன வாழ்க்கை இது! நாய் வாழ்க்கை!" என்று, கிரிகரி முனங்கினுன். தான் அனுபவித்த வேதனை முழு வதையும் சொல் மூலம் வெளியிட அவனுல் இயலவில்லை. "நாம் குடியிருக்கிருேமே இந்தப் பொந்து, அது தான் காரணம், மேட்ரோனு. நமது காலக் கெடு முடிவதற்கு முன்னரே நம்மை மண்ணுக்குள் போட்டுப் புதைத்து விட்ட மாதிரி அல்லவா தோன்றுகிறது."

அவன் வார்த்தைகளை அப்படியே ஏற்றுக் கொண்ட மேட்ரோனு, தன் அழுகையினூடே, அறிவித்தாள், "நாம் வேருெரு புதிய இடத்துக்குப் போய் விடலாமே" என்று.

"நான் சொல்வது அதுவல்ல. நாம் மேல் மாடி எதற் காவது குடிபோனுலும் கூட உண்மையில் ஒரு பொந்துக் குள் வசிப்பது போல் தான் ஆகும். ஏனெனில், பூமிக்கு

அடியில் உள்ள இந்த அறை பொந்து அல்ல. நமது வாழ்க்கையே அப்படி இருக்கிறது.''

மேட்ரோஞ ஒரு கணம் யோசனை செய்தாள். ''கடவுள் கிருபை புரிந்தால், நம் நிலைமை இதை விட நல்லதாக மாறி விடும்'' என்று தனது பல்லவியை மறுபடியும் சொன்னுள்.

''எல்லாம் சரிப்பட்டுப் போகும் — இதைத்தான் நீ ஓயாது சொல்லிக் கொண்டிருக்கிருய், ஆனல் காரியங்கள் எல்லாம் நல்லதாக மாறுவதற்குப் பதில் மோசமாய் போய்க் கொண்டிருப்பதாகத் தான் தோன்றுகிறது. நாம் முன்னை விட அதிகமாகவும் அடிக்கடியும் சண்டை போடுகிறோம்.''

அது உண்மை தான். வர வர அவர்களுடைய சண்டைகளுக்கு இடையே சமாதான காலம் குறுகிக் கொண்டே வந்தது. ஒவ்வொரு சனிக்கிழமையும் கிரிகரி காலையில் துயில் நீங்கி எழும் போதே தன் மனைவி மீது பகைமை உணர்ச்சி உள்ளத்தில் கனிந்து திகழும் நிலையில் தான் கண் விழித்தான்.

''இன்று ராத்திரி மூக்கு முட்டக் குடிப்பதற்காக நான் பால்டியின் மதுக் கடைக்குப் போவேன்'' என்று அறிவிப்பான் அவன்.

மேட்ரோஞ தன் கண்களைச் சுருக்கிக் கொள்வாள். ஒரு வார்த்தை கூடப் பேச மாட்டாள்.

''என்ன, சொல்வதற்கு ஒன்றுமில்லையா? அதுதான் சரி. உனக்கு நல்லது எது என்று நீ தெரிந்து கொண்டால், உன் வாயை நீ மூடியே தான் வைத்திருப்பாய்.''

அன்றைய பகற் பொழுதில், தனது நோக்கத்தை அநேக தடவைகள் அவளுக்கு அவன் நினைவுபடுத்துவான். சாயங்காலம் நெருங்க நெருங்க அவனுடைய விஷம் அதிகரிக்கும். தன் பேச்சு அவளைப் புண்படுத்துகிறது என்பதை அவன் உணர்ந்து கொள்வான். அவனது அறிவிப்பை அவள் பிடிவாதமான மௌனத்தோடு ஏற்றுக் கொள்வதும், அவனைத் தாக்குப் பிடித்துச் சமாளிக்க தான் தயார் என்று கூறுவது போல் அவள் கண்களில் வீசுகிற கூரிய ஒளியும் அவன் கோபத்தைக் கிளறி விடும்.

அப்புறம், சாயங்காலம், அவர்களுடைய துயரங்களை ஒலி பரப்பும் தூதுவனான சென்கா சண்டை பற்றி வர்ணிப்பதும் நிச்சய நிகழ்ச்சியாகி விடும்.

தன் மனைவியை அடித்து நொறுக்கிய பிறகு, கிரிகரி மறைந்து போவான். அநேகமாக இரவு நேரத்தில் மாத்திரம்—சில சமயம் ஞாயிறு பூராவும் கூட—அவன் தலை மறைவாகி விடுவான். அவன் திரும்பி வந்ததும், மேட்ரோனா, உடல் முழுவதும் காயங்கள் நிறைந்து தோன்ற, உற்சாகமற்று மௌனமாக அவனை வரவேற்பாள். ஆயினும், கந்தலும் அழுக்குமாக, ரத்தம் ஏறிய கண்களும் மோசமாக அடிபட்ட உடலுமாய் தன்னை நாடித் திரும்பி வந்துள்ள அந்த மனிதனிடம் ஏற்படும் அந்தரங்கமான இரக்கம் அவள் உள்ளத்தில் நிரம்பிவிடும்,

அவன் சோர்ந்து போயிருப்பான் என்பதை உணர்ந்து. அவன் மனநிலையைச் சரிப்படுத்துவதற்கென்றே அவள் ஒரு புட்டி மது தயாராக வைத்திருப்பாள். இது அவனுக்கும் தெரியும்.

"எனக்கு ஏதாவது கொடு" என்று கூறுவான் அவன். இரண்டு அல்லது மூன்று கிளாசு நிறைய உள்ளே தள்ளியதும், அவன் வேலை செய்ய உட்காருவான்.

அன்று பூராவும் அவன் மனச் சாட்சியின் குத்துதல்களினுல் அவதியுறுவான். அடிக்கடி அவ்வேதனை தாங்க முடியாத அளவுக்கு வலியதாகி விடும். அதனுல் அவன் தனது வேலையை ஒதுக்கித் தள்ளி விட்டு, பயங்கரமான வசைமொழிகளைக் கக்கிய வாறே அந்த அறையில் அங்குமிங்குமாகப் பாய்வான். அல்லது படுக்கையில் 'விழுந்து புரளுவான். அத்தகைய நிலைமையை அவன் சமாளித்து முடிக்கிற வரை மேட்ரோஞ பொறுத்திருப்பாள்; பிறகு அவர்கள் இராசி உடன்படிக்கையில் ஈடுபடுவார்கள்.

அவர்களுக்குக் கலியாணமாகியிருந்த புதுசில், சமாதானமாகப் போக உதவுகிற இத்தகைய சந்தர்ப்பங்கள் இனிமையும் நுண்மையும் நிறைந்த சுக அனுபவ மிகுதியோடுவிளங்கின. ஆனுல், நாளடைவில் அவை சர்வசாதாரணம் ஆகிவிட்டன. பிறகு, மறு சனிக்கிழமை வரை உள்ள ஐந்து நாள் இடைக்காலத்தில் ஒருவருக்கு ஒருவர் பேசாமல் பொழுது போக்குவது மிகவும் அசௌகரியமாக இருந்ததனுல் தான் அவ்விருவரும் சமாதானம் செய்து கொண்டார்கள்.

"நீ குடித்துக் குடித்து சாகத்தான் போகிருய்'' என்று மேட்ரோஞ பெருமூச்சோடு சொன்னுள்.

"அப்படித் தான் ஆகும்'' என்று கிரிகரி உறுதி கூறுவான். தான் சாகும்படியாகக் குடிப்பது அல்லது குடிக்காமல் இருப்பது எல்லாம் ஒன்றுதான்; எதிலும் தான் சிறிதளவு பேதம் கூடக் காணவில்லை என்று உணர்ந்துவிட்டவன் மாதிரி அவன் ஒரு மூலையை நோக்கிக் காறித்துப்புவான். "நீ என்னை விட்டுவிட்டு ஓடிப் போவாய்.'' தான் காணும் எதிர்காலச் சித்திரத்துக்கு அதிகப்படியான அம்சமாக இதையும் அவன் சேர்த்து விடுவான். அப்படிக் கூறும் பொழுதே அவன் கூரிய பார்வையினுல் அவளை ஆராய்வான்.

அவள் தன் விழிகளை தாழ்த்திக் கொள்ளுவாள். முன்பெல்லாம் அவள் இப்படிச் செய்ததில்லை. இதைக் கவனித்ததும், கிரிகரி தன் புருவங்களை நெரித்துக்கொண்டு பற்களைக் கடிப்பான். தன் புருஷனிடம் சொல்லிக் கொள்ளாமல், அவள் சோதிடர்களையும் மந்திரக்காரிகளையும் தேடிப்போவாள். மந்திரிக்கப்பட்ட வேர்கள் அல்லது கரித்துண்டுகளை வாங்கி வருவாள். அவை பலன் தரவில்லை எனக்கண்டதும், மதத்திற்காக உயிரிழந்த மகாத்தியாகியான புனித போனிபேஸ் திருமுன் பிரார்த்தனை நடத்த ஏற்பாடு செய்தாள். பிரார்த்தனை வாசிக்கப்பட்ட நேரம் பூராவும், அவள் முட்டு மண்டியிட்டு நின்று, துடிக்கும் உதடுகளை மௌனமாக அசைத்தபடி, ஏராளமாகக் கண்ணீர் வடித்தாள்.

அடிக்கடி அதிகம்அதிகமாக அவளுக்குத் தன்கணவன் மீது கூரிய கொடுமையான வெறுப்பு ஏற்பட்டு வந்தது. அது தீய எண்ணங்களைப் பிறப்பித்தது. மூன்று ஆண்டுகளுக்கு முன்பு எவனுடைய உல்லாசச் சிரிப்பும் மென்மையான வார்த்தைகளும் அவளுடைய வாழ்வை ஒளிமயமாக்கினவோ, அந்த மனிதனுக்கு எதிராய் படிப்படியாக அவள் இதயம் கடுமை பெற்று விட்டது.

இந்த விதமாக, அவ்விருவரும்—உள்ளத்தால் தீயவர் அல்லாத இரண்டு பேரும்—ஒவ்வொரு நாளையும் கழித்து வந்தார்கள். தங்கள் வாழ்வின் விபரீதமான போக்கு அளித்துவரும் வேதனைக்கு முடிவுதர ஏதாவது நிகழாதா என்று எதிர்பார்த்தபடி அவர்கள் வாழ்ந்தார்கள்.

* * * *

ஒரு திங்கட்கிழமை காலை நேரத்தில், ஆர்லோவ் தம்பதிகள் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, போலீஸ்காரன் ஒருவனின் மிடுக்கான உருவம் அவர்களுடைய

இருண்ட வீட்டின் வாசலில் வந்து நின்றது. ஆர்லோவ் குதித்தெழுந்தான். சென்ற சில தினங்களின் நிகழ்ச்சிகள் பற்றிய நினைவைத் தனது குழம்பிய மூளையில் கொண்டு வந்து நிறுத்துவதற்கு அவன் அதி தீவிர முயற்சி செய்தான். அவனுடைய ஒளியற்ற கண்கள் அந்த அதிதி மீது நிலைத்து விட்டன. மகா பயங்கரமான சம்பவங்களை எதிர்பார்த்துக் கலக்கமுற்ருன் அவன்.

"இந்த வழியே, இந்த வழியே" என்று, வெளியே நின்ற யாரையோ அழைத்தான் அந்தப் போலீஸ்காரன்.

"பாதாளக் கிடங்கு மாதிரி இங்கே ஒரே இருட்டாக இருக்கிறதே. வியாபாரி பெடுன்னிக்காவை பிசாசு விழுங் கட்டும்!" என்று இளமையும் உற்சாகமும் நிறைந்த குரல் உள்ளே வந்தது. மறுகணம் அறைக்குள் வந்து சேர்ந்தான் வெண்மையான கல்லூரி உடுப்பு அணிந்த மாணவன் ஒருவன். அவன் தன் குல்லாயைக் கையில் பற்றியிருந் தான். அவனுடைய தலை முடி ஒட்ட வெட்டி விடப் பட்டிருந்தது. உயர்ந்து தோன்றிய அவன் நெற்றி சூரிய ஒளியினுல் காய்ந்து சிவந்திருந்தது. அவனது கபில நிறக் கண்கள் கண்ணுடிகளுக்குப் பின்னுல் களிதுலங்க மின்னின.

"வணக்கம்" என்று அழுத்தமான குரலில் சொன்னுன் அவன். "என்னை நானே அறிமுகப்படுத்திக் கொள்கிறேன். நான் தான் சுகாதார அதிகாரி. நீங்கள் எப்படி வசிக்கிறீர்கள் என்பதைப் பார்க்க வந்திருக் கிறேன். நீங்கள் சுவாசிக்கிற காற்றை சுவாசித்துப் பார்க்கிறேன்—உண்மையிலேயே ரொம்ப மோசமான காற்று தான்."

ஆர்லோவ் புன்னகை புரிந்தான். நிம்மதி அடைந்து நெடு மூச்செறிந்தான் அவன். உடனடியாகவே அவனுக்கு

அந்த மாணவனைப் பிடித்து விட்டது. கன்னங்களில் செம்மயிர் படிந்து, மோவாய் ரொம்பவும் சிவந்து, அவன் முகம் உருண்டு திரண்டு காணப் பட்டது. அவன் விசேஷமான உல்லாசம் கலந்த தனி வகையில் சிரித்தான். ஆர்லோவ் தம்பதிகள் வசித்த அடித்தள அறை கூட அந்தச் சிரிப்பினுல் அதிகப் பிரகாசமும் அதிகமான குதூகலமும் பெற்று விட்டதாகத் தோன்றியது.

அவன் நிறுத்தாமல் பேசிக் கொண்டே போனுன்: "எனது அருமை மக்களே, இனி மேல் நீங்கள் அடிக்கடி கழிவு குப்பைகளை வெளியே கொண்டு கொட்டி விட வேண்டும். குப்பைக் கழிவு தான் இந்த துர் நாற்றத்தைப் பரப்புகிறது. வீட்டு அம்மா, நீ அடிக்கடி பாத்திரத்தைக் கழுவி சுத்தப்படுத்த வேண்டும் என்று சொல்ல விரும்பு கிறேன். ஐயா, நீ ஏன் உன் முகத்தை இப்படித் தொங்கப் போட்டுக் கொண்டு நிற்கிருய்?'' இதைச் சொல்லி விட்டு அவன் ஆர்லோவின் கையைப் பிடித்து நாடி பார்த்தான்.

அந்த மாணவனின் கலகலப்பான சுபாவம் ஆர்லோவ் தம்பதிகளுக்கு சங்கோசம் உண்டாக்கியது. மேட்ரோனு குழப்ப நிலையில் புன்னகை புரிந்து, எதுவும் பேசாமல் அவனையே கவனித்துக் கொண்டிருந்தாள். கிரிகரியின் சிரிப்பில் நம்பிக்கையின்மை கலந்திருந்தது.

"உங்கள் வயிறெல்லாம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டான் அம் மாணவன். "கூச்சப்பட வேண்டாம். நம் எல்லோருக்குமே வயிறு இருக்கிறது. உங்கள் வயிறு உங்களுக்கு ஏதாவது தொல்லை கொடுத்துக் கொண்டிருந் தால், அதுக்கு முடிவு கட்ட நாங்கள் பலவிதமான கசப்பு மருந்துகள் கொடுப்போம்.''

கிரிகரி லேசாகச் சிரித்தபடி பதில் அளித்தான்; "நாங்கள் நன்ருகத் தான் இருக்கிருேம். குறை கூறு

வதற்கில்லே. நான் ஒரு மாதிரியாகத் தோன்றுவதற்குக் காரணம்—உங்களிடம் உள்ளதைச் சொல்லி விடுகிறேனே, நான் கொஞ்சம் குடித்திருந்தேன்.'',

''வாஸ்தவம் தான். நீ நேற்று ராத்திரி கொஞ்சம், உண்மையில், மிகவும் கொஞ்சமான ஒரு துளி, குடித்திருந் தாய் என்பதை என் மூக்கே எனக்குச் சொல்லிவிட்டது.''

இதை அவன் வேடிக்கையாகச் சொன்ன தினுசும், அவலட்சணமாக முகத்தைச் சுளித்ததும் சேர்ந்து கிரிகரியை வாய்விட்டுச் சிரிக்க வைத்தன. மேட்ரோனுவும் கூட, தனது வாயை மேல் துணியினுல் மூடி மறைத்துக் கொண்டே, சிரித்தாள். அவர்கள் எல்லோரையும் விட உரத்தும் பலமாகவும் சிரித்தவன் மாணவன் தான். முதலாவதாகச் சிரிப்பை நிறுத்தியவனும் அவனே. அவனது தடித்த உதடுகளேயும் கண்களேயும் சுற்றிப் படிந்திருந்த சிரிப்பின் சுருக்கங்கள் ஒடுங்கி மறைந்ததும் அவனுடைய கபடமற்ற முகம் மேலும் அதிகமாக தெளிவுடன் பிரகா சித்தது.

''உழைக்கிறவன் குடிக்க வேண்டியதுதான். அது நியாயம்தான். ஆனுல் எப்பொழுது நிறுத்த வேண்டியது என்பதையும் அவன் தெரிந்து கொள்ள வேணும். ஆனுல் காலம் இருக்கிற நிலேமையில் இப்போதெல்லாம் குடிக்கா மல் இருப்பது எவ்வளவோ நல்லது. இந்த ஊரில் பரவி வருகிற நோய் பற்றி நீங்கள் கேள்விப்பட்டீர்களா?''

காலரா பற்றியும் அதைத் தடுக்கும் முறைகளேப் பற்றியும் அவன் மிகுந்த கருத்தோடு எளிய வார்த்தை களில் எடுத்துச் சொன்னுன். அப்படிப் பேசும் பொழுதே அவன் அறையைச் சுற்றிலும் நடந்து, சுவர்களேப் பரிசீலனே செய்தான்; தொட்டியும் வடிநீர் வாளியும் இருந்த மூலேயைக் கவனித்துப் பார்த்தான். அடுப்புப் பொங்

தினுள் குனிந்து நோக்கி, மூக்கினுல் உறிஞ்சி, அதனுள் இருந்து வருகிற நாற்றம் என்னவாக இருக்கலாம் என்று ஆராய்ந்தான். அவனுக்கிருந்த பூரண ஊக்கம் காரணமாக, அவனுடைய ஆழ்ந்த குரல் அவ்வப்போது கனத்த இசை ஒலிகளாக வெடித்துக் கொண்டிருந்தது. அவன் உபயோகித்த எளிய பதங்கள் தாமாகவே ஒழுங்கு பட்டு, கேட்பவர்களின் நினைவுப் பரப்பில், ஒன்றின் பின் ஒன்ருகப் பதிந்து விட்டன. கேட்பவர்கள் அவற்றை நினைவில் நிறுத்திக் கொள்வதற்கு சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டியதே இல்லை. தான் சேவை புரியும் பணியில் அவன் காட்டிய ஊக்கம் அவனது தேகம் எங்கும் உயிர்ப்புடன் துடித்தது; அவன் கண்களில் ஒளியாக மின்னியது.

அவனைக் கவனித்தபடி யிருந்த கிரிகரியின் முகத்தில் புதுமையை உணர்வதால் எழும் புன்னகை விளையாடியது. மேட்ரோனு தனது நாக்கைக் கொட்டிக்கொண்டே இருந்தாள். போலீஸ்காரன் மறைந்து போய் விட்டான்.

“ஆகவே சுத்தப் படுத்துகிற வேலையை இன்றைக்கே ஆரம்பித்து விடுங்கள். இதே தெருவில் புதுசாக ஒரு வீடு கட்டிக் கொண்டிருக்கிருர்கள். அதனுல் உங்களுக்குத் தேவையான சுண்ணும்பு அங்கே கிடைக்கும். அங்குள்ள கொத்து வேலைக்காரர்கள் ஐந்து கோப்பெக்குகளுக்கு நிறையவே தருவார்கள். ஐயா, நீ குடிப்பதை நிறுத்தி விடு. உம், சரி—இப் போதைக்கு விடை பெறுகிறேன். நான் விரைவில் மறுபடியும் இங்கு வருவேன்.”

அவன் வந்தது போலவே சட்டென மறைந்து போனுன். அவனது சிரிக்கும் கண்களின் நினைவு, ஆர்லோவ் தம்பதிகளின் முகங்களில் நிலவிய ஆனந்தப் புன்னகையில் பதிவாகியிருந்தது. இருளடைந்த தங்கள் வாழ்க்கையில் வலிய வந்து புகுந்த பயன் நிறைந்த சக்தியைக் கண்டு அவர்கள் குழப்பம் அடைந்து விட்டனர்.

"உம்-ம்" என்று கிரிகரி தலையை ஆட்டிக் கொண்டே இழுத்தான். "இவர் தான் ரசாயன சாஸ்திரியாக்கும். இவர்கள் எல்லோரும் மக்களுக்கு விஷம் கொடுத்து வருவதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். அது மாதிரி முகம் பெற்றுள்ள ஒரு ஆசாமி அப்பேர்ப்பட்ட காரியத்தைச் செய்வானா என்ன? ஒருக்காலும் நடவாது. அவர் இங்கே ஒளிவு மறைவு இல்லாமல் வந்தார். இதோ நான் இருக்கிறேன்; நீங்கள் பார்க்கிறபடியே காணப்படுகிறவன் தான் என்று சொல்வது போல் வந்து நின்றார். சுண்ணாம்பு—அது தீங்கு செய்யும் என்று நீ எங்காவது கேள்விப்பட்டது உண்டா? ஸிட்ரிக் ஆஸிட்—அது என்ன? சும்மா வெறும் ஆஸிட் என்று தான் நான் யூகிக்கிறேன். ஆனால் மிக முக்கியமான விஷயம், சுத்தமாக வைத்திருப்பது—சுத்தமான தரை, சுத்தமான காற்று, சுத்தமான கழிவுத் தொட்டி. மக்களுக்கு விஷம் கொடுப்பதாவது! எஹஹ, அவர் ஜாலியான ஆசாமிதான். உழைக்கிறவன் குடிக்க வேண்டியது அவசியம் தான்; ஆனால் எப்ப நிறுத்துவது என்பதை அறிந்திருக்க வேண்டும் என்று சொல்கிறார். அதை நீ கேட்டாயா மேட்ரோனா? அப்படியானால் எனக்கு ஒரு கிளாஸ் நிரப்பித் தருவது தானே? ஏதாவது இருக்கிறதா இல்லையா?"

அவள் எங்கிருந்தோ எப்படியோ ஒரு புட்டியை எடுத்து கிளாசில் பாதி அளவு மது ஊற்றி அவனுக்கு மகிழ்ச்சியோடு கொடுத்தாள்.

"அவர் உண்மையிலேயே நேர்த்தியானவர் தான். யாரும் அவரை விரும்பாமல் இருக்க முடியாது" என்றாள் அவள். அந்த மாணவனின் முகம் நினைவில் எழவும் அவள் புன்னகை புரிந்தாள். "மற்றவர்கள் எப்படியோ—யார் கண்டது? உண்மையில் அவர்கள் கூலிக்கு அமர்த்தப் பட்டு......"

எதற்காகக் கூலிக்கு அமர்த்தப் படுகிறுர்கள்? யார் அவர்களைக் கூலிக்கு அமர்த்துகிறுர்கள்?'' என்று கிரிகரி குறுக்கிட்டான்.

''மக்களைக் கொல்வதற்காகத்தான் கூலிக்கு அமர்த்தப் படுகிறுர்கள். ஏழை எளியவர்கள் மிக நிறைய இருக்கிறுர்கள் என்றும், அதிகப்படியானவர்களை அகற்றி விட உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருப்பதாகவும் சொல்லிக்கொள்கிறுர்கள்.''

''யார் அப்படிச் சொல்வது?''

''எல்லோரும்தான். வர்ணம் பூசுகிறவர் வீட்டுச் சமையல் காரியும் இன்னும் பலரும் தான்.''

''அப்படிச் சொல்கிறவர்கள் முட்டாள்கள் தான். அது மாதிரிக் காரியத்திலைலே யாருக்கு என்ன லாபம்? நீயே யோசித்துப் பார்: சீக்காளிகளைக் கவனிக்கணும்—அதுக்குக் கொஞ்சம் பணம் செலவாகும். ஆகாதா பின்னே? அப்புறம் அவர்களைப் புதைக்க வேணும். அதற்கு சவப் பெட்டி, புதை குழி இன்னும் எவ்வளவோ இல்லையா? அதற்காகும் செலவெல்லாம் கஜாணுவிலிருந்து தான் வரணும். அபத்தப் பேச்சுதான். நிஜமாகவே அவர்கள் மக்களை அகற்றி விட விரும்பினுல், எல்லோரையும் சைபீரியாவுக்கு அனுப்பி விடுவார்களே. அங்கே தான் எல்லோருக்கும் காணும்படி ஏகப்பட்ட இடம் கிடக்கிறதே. அல்லது எங்காவது ஒரு தீவாந்தரத்துக்கு அனுப்பி விட்டுப் போகிறுர்கள். அங்கே மக்களிடம் வேலையும் வாங்கலாம். அப்படிச் செய்வதால் அதிகப்படியானவர்களை அகற்றியதாகவும் ஆச்சு; வெகு லாபகரமான திட்டமாகவும் அமையும். கஜாணு கண்ணும் கருத்துமாக இருப்பது லாபத்தைத் தவிர வேறு எதிலுமல்ல. ஆகவே, மக்களைக் கொன்று தன் சொந்தச் செலவில் அவர்களைப் புதைக்க

அது முன்வரப் போவதில்லை. அந்த மாணவர் வந்தாரே, அவர் தொல்லை கொடுப்பவர் தான். அது யாருக்கும் புரிந்து விடும். ஆனால் அவர் செய்கைகளின் நோக்கம் மற்றவர்களுக்கு உயர்வு அளிப்பது தான். மக்களைக் கொல்கிற விஷயத்தில்-பணத்துக்காகவோ அல்லது ஆசைக்காகவோ அதைச் செய்யும்படி அவரை இணங்க வைக்க முடியாது. அப்படிப்பட்ட காரியம் எதையும் செய்ய மாட்டார் என்பதை அவர் முகத்தைப் பார்த்ததுமே சொல்லிவிட முடியாதா என்ன? அதற்கு வேண்டிய மூஞ்சி அவரிடம் இல்லை.''

அன்று முழுவதும் அந்த மாணவனைப் பற்றியும், அவன் சொன்ன விஷயங்களைப் பற்றியுமே அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அவன் முகத்தையும், அவன் சிரித்த விதத்தையும் நினைத்துப் பார்த்தார்கள். அவனது மேற்சட்டையில் ஒரு பொத்தான் இல்லை என்ற உண்மை அவர்களுக்கு அப்பொழுது தோன்றியது. சட்டையின் எந்தப் பக்கத்துப் பொத்தான் தவறிப் போயிருந்தது என்ற விஷயம் பற்றி அவர்களுக்குள் சண்டையே வந்துவிடும் போலிருந்தது. வலது புறத்தில் உள்ளதுதான் என்று மேட்ரோனா திடமாகச் சொன்னாள். அவள் கணவனோ இடது பக்கத்துப் பொத்தான் என்று சொல்லி, அவளை இரண்டு தடவைகள் மனமார வசைபாடித் தீர்த்தான். ஆனால், அவள் தனக்கு மது ஊற்றிக் கொடுத்த போது புட்டி முழுவதையும் காலி செய்து விடவில்லை எனும் விஷயம் நினைவில் உறைக்கவும், அவன் அவளுக்கு விட்டுக் கொடுத்தான். மறு நாள் அந்த அறையைச் சுத்தப்படுத்தி விடுவது என்று அவர்கள் தீர்மானித்தார்கள். உடனேயே சுத்தமான காற்றைப்போல தங்களை நாடி வந்த புதிய அனுபவம் தந்த உற்சாக மிகுதியினால், அவர்கள் மீண்டும் அந்த மாணவனைப் பற்றிப் பேசத் தொடங்கி விட்டார்கள்.

"அட, சூரப்புலியே!" என்று கிரிகரி குதூகலத்தோடு சொன்னான். "நம்மோடு பத்து வருஷமாகப் பழகியவர் போல் அல்லவா நடந்து கொண்டார்! ஒவ்வொரு இடத்திலும் தன் மூக்கை நுழைக்கிறார். நமக்கு உபதேசம் பண்ணுகிறார். அப்புறம், வெளியே போய் விட்டார், கூப்பாடு இல்லை, கூச்சல் இல்லை. இவரும் உயர்ந்த இனத்தைச் சேர்ந்த ஒருவர் தான். இருந்தாலும் என்ன? ஏய் மேட்ரோனா, உண்மையாகவே அவர் நம் மீது அக்கறை கொண்டிருக்கிறார் என்பதை நீயே காண முடிகிறதா இல்லையா? எடுத்த எடுப்பிலேயே நீ அதை உணர்ந்திருக்கலாமே. அவர்கள் நம் உடலையும் ஆவியையும் சேர்த்து வைக்கவே விரும்புகிறார்கள். வந்து—வந்து—அதெல்லாம் வெறும் உளறல். மக்களுக்கு விஷம் கொடுக்கிற பேச்சு தான். அத்தைப் பாட்டி கதை அது. 'உங்கள் வயிறெல்லாம் எப்படி இருக்கிறது?' என்று அவர் கேட்கிறார். அவர்கள் நமக்கு விஷம் கொடுக்க விரும்பினால், நம் வயிறுகள் எப்படி இருக்கின்றன என்று என்ன இழவுக்காக அவர்கள் சிரத்தை காட்ட வேண்டும்? அவைகளைப் பற்றி-அவற்றை எப்படிக் குறிப்பிடுவது?—நம் உடலுக்குள் ஊர்ந்து கொண்டிருக்கிற சப்புச் சவருகள் தான், அவற்றைப் பற்றி அவர் எவ்வளவு சொல் நயத்தோடு விளக்கிப் பேசினார்!"

"வால் பூச்சிகள் என்றோ, அல்லது அது மாதிரி என்னவோ சொன்னார்" என்று கூறிச் சிரித்தாள் மேட்ரோனா. "ஆனால் அதெல்லாம் சும்மா நம்மைப் பயமுறுத்துவதற்காக, நாம் சுத்தம் செய்ய வேண்டும் என்பதற்காகச் சொன்னவை" என்றாள்.

"யார் கண்டது? ஒருவேளை அதெல்லாம் உண்மையாகவே இருக்கலாம். பார்க்கப்போனால், ஈரம் புழுக்களை உற்பத்தி பண்ணத்தான் செய்கிறது. அதெல்லாம் நாச

மாய்ப் போக! அவற்றை அவர் என்னவென்று சொன்னார்? வால் பூச்சிகளா? இல்லையே. அப்படி இல்லை. அந்த வார்த்தை என் நாக்கு நுனியில் இருக்கிறது; என்னால் சொல்ல முடியவில்லையே.''

அவ்விருவரும் படுத்த பிறகும் கூட, முதன் முதலாகத் தங்கள் உள்ளத்தில் நிலையாகப் பதிந்து விடுகிற விஷயங்களைப் பற்றி மனம் விட்டுப் பேசிக்கொள்ளும் குழந்தைகளின் களங்கமற்ற உற்சாகத்தோடு, பேசிக்கொண்டே இருந்தார்கள். தூக்கத்தில் சொக்கி விழுகிற வரையில் அவர்கள் பேசிக் களித்தார்கள்.

மறுநாள் அதிகாலையில், வர்ணம் பூசுகிறவர்கள் வீட்டு தடிச் சமையல்காரி எழுப்பவும், அவர்கள் விழித்தெழுந்தார்கள். அவர்களின் படுக்கையருகே அவள் நின்றாள். வழக்கமாக உருண்டு சிவப்பாக விளங்கும் அவள் முகம் அப்பொழுது படர்ந்து சாம்பல் நிறமாய் காணப்பட்டது.

“எழுந்து அலைந்து திரியும் நேரம் ஆகி விட்டது'' என்று அவள் அவசரத்தோடு சொன்னாள். பேசும் பொழுது அவளுடைய பருமனான உதடுகள் விசித்திரமான முறையில் அடித்துக் கொண்டன. “நம் வீட்டுக்குக் காலரா வந்து விட்டது. ஆண்டவனின் அருள் தான்'' என்று கூறிக் கண்ணீர் வடித்தாள் அவள்.

“உனக்குப் பைத்தியமா என்ன?'' என்று கத்தினான் கிரிகரி.

“நேற்று ராத்திரி நான் கழிவுத் தொட்டியைக் காலி செய்து கழுவி வைக்க மறந்தே போனேன்'' என்று குற்றம் செய்தவள் குரலில் பேசினாள் மேட்ரோனா.

“என்னைப் பொறுத்த மட்டில், அன்புள்ளவர்களே, நான் என் வேலையை விட்டு விடுகிறேன். இங்கிருந்து

போகப் போகிறேன். நான் நாட்டுப் புறத்துக்கே போய் விடுவேன்'' என்று சமையல்காரி சொன்னாள்.

படுக்கையிலிருந்து குதித்து எழும் போதே கிரிகரி கேட்டான், "அது யாருக்கு வந்திருக்கிறது?'' என்று.

"வாத்தியக்காரனுக்கு. ராத்திரியே அது அவனைப் பிடித்துக் கொண்டது. வயிற்றை அழுத்தமாகக் கவ்வி யிருக்கிறது. பாஷாணம் குடித்து விட்ட மாதிரி தான்.''

"வாத்தியக் காரனுக்கா?'' என்று கிரிகரி முணு முணுத்தான். அவனால் அதை நம்பவே முடியவில்லை. எப் படிப்பட்ட குதூகலமான பகட்டுக்கார ஆசாமி அவன்! நேற்று அவன் தனது வழக்கமான மயில் நடையில் கர்வ மாக முற்றத்தைக் கடந்து போனானே. "நான் போய் அவனைப் பார்க்கிறேன்'' என்று ஆர்லோவ், தெளிவற்ற சிரிப்போடு, சொன்னான்.

பெண்கள் இருவரும் பயத்தினால் கத்தினார்கள்.

"போகாதே கிரிகரி. அது தொத்து நோய்.''

"அட கடவுளே! அந்த நினைப்பே உனக்கு வேண் டாம்.''

கிரிகரி சபித்துக் கொண்டே, தன் பாதங்களைச் செருப் புகளுக்குள் திணித்தான். தலை முடியை வாரி விடாமலும், சட்டையின் கழுத்துப் பித்தானை மாட்டிக் கொள்ளாம லும், அவன் வாசலை நோக்கி விரைந்தான். அவன் மனைவி அவனது தோளைப் பற்றி பின்னுக்கு இழுத்தாள். அவள் கையின் நடுக்கத்தை அவன் உணர்ந்தான். அது, என்ன காரணத்தினாலோ, அவன் கோபத்தைக் கிளறியது.

அவன், அவள் மார்பில் கை பதித்து அவளை ஒதுக்கித் தள்ளியவாறே, "உன் மூஞ்சியை உடைத்து விடுவேன். தூரப் போ!'' என்று கர்ஜித்தான்.

முற்றம் அமைதியாய் காலியாய் கிடந்தது. வாத்தியக் காரனின் வீட்டு வாசலை நோக்கி அவன் முன்னேறிய

போது, பயத்தின் ஒரு விதக் குளிர் அவனைப் பற்றிக் கொண்டது. அதே சமயத்தில், அந்த வீட்டு வளைவில் உள்ள அத்தனை பேர்களிலும் அவன் மாத்திரம் தான் அங்கு போய் வியாதிக்காரனைப் பார்க்கும் துணிச்சல் பெற்றுள்ளான் எனும் உணர்வு எழுப்பிய ஆனந்தமும் அவனுக்கு ஏற்பட்டிருந்தது. இரண்டாவது மாடி ஜன்னலின் மூலம் தையல்காரர்கள் தன்னையே கவனித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அறியவும் அவனுடைய இந்த சுயதிருப்தி மேலும் அதிகமாக வளர்ந்தது. அவன் வாயினால் சீட்டி அடித்து, தன் தலையைத் தெம்புடன் அசைத்துக்கொண்டான். ஆனால் அந்த வாசலை அடைந்ததும், அவன் சிறு ஏமாற்றம் ஒன்றை சென்காவின் உருவில் சந்திக்க நேர்ந்தது.

கொஞ்சம் கீறல் தெரியும்படி கதவைத் திறந்து வைத்து, சென்கா தனது கூரிய மூக்கை அதனூடே திணித்து நின்றான். வழக்கம்போல், அவன் தனது ஆராய்ச்சியில் பரிபூரணமாக ஈடுபட்டிருந்ததால், கிரிகரி அவனுடைய காதைப் பிடித்துத் திருகியபோதுதான் திரும்பிப் பார்த்தான்.

“கிரிகரி மாமா, அது அவனை ஒரேயடியாகத் திருகிப் போட்டு விட்டது” என்று ரகசியக் குரலில் பேசினான் அவன். அழுக்குப் படிந்த அவன் முகம் புதிய அனுபவங்கள் எழுப்பிய உணர்ச்சிகளினால் முன் எப்பொழுதும் இல்லாத வகையில் வெகுவாக பாதிக்கப்பட்டிருந்தது. “காய்ந்து விட்ட காளான் மாதிரித் தோன்றுகிறான் அவன்” என்று அவன் சொன்னான்.

அறையினுள்ளிருந்து நாற்றம் பிடித்த காற்று வந்து தாக்கியது. கிரிகரி பதில் எதுவும் சொல்லாமல், சென்காவின் பேச்சைக் கேட்டுக் கொண்டு நின்றான். அதே வேளையில்,

கதவில் உள்ள இடுக்கு வழியாக நோயாளியைப் பார்த்து விட அவன் முயற்சி செய்தான்.

'கிரிகரி மாமா, அவன் குடிப்பதற்குத் தண்ணீர் கொடுக்கலாமா?'' என்று சென்கா கேட்டான்.

அச் சிறுவனின் முகத்தைக் கூர்ந்து நோக்கினுன் கிரிகரி. அம் முகம் பூராவும் உணர்ச்சிப் பரபரப்பினுல் துடித்துக் கொண்டிருந்தது. கிரிகரியும் குழப்பத் துடிப்பு பெற்றிருந்தான்.

"சரி. கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா'' என்று உத்திரவிட்டான் அவன். பிறகு, துணிந்து கதவை விரியத் திறந்து போட்டுவிட்டு வாசல்படி மீது நின்ருன். அவன் உடல் தாஞகவே பின்னுக்கடித்தது.

கிஸ்லியகோவின் உருவம் அவன் பார்வையில் மங்கலாகப்பட்டது. வாத்தியக்காரன், தனது உயர்ந்த உடுப்புகளை அணிந்து கொண்டு, மேஜை மீது மார்பை அழுத்தியபடி, அயர்ந்து கிடந்தான். அவன் கைகள் மேஜையை அழுத்தமாகப் பற்றியிருந்தன. உயர்ந்த தோல் பூட்ஸ் அணிந்திருந்த அவன் பாதங்கள், ஈரத் தரையில், குறிப்பற்று அசைந்து ஊர்ந்தன.

'யார் அது?'' என்று அவன் கம்மிய குரலில் உணர்ச்சியற்ற முறையில் கேட்டான்.

கிரிகரி தனது தோள்களை உயர்த்திக்கொண்டு, தரையில் எச்சரிக்கையோடு அடி எடுத்து வைத்து, அவன் அருகே சென்ருன். உற்சாகத்தோடு, வேடிக்கையாய் கூட, பேச முயற்சித்தான் அவன்.

"நான் தான், டிமிட்ரி பாவ்லோவிச். இதென்ன விஷயம்? நேற்று ராத்திரி உனக்கு உள்ளே தங்கியிருக்கக் கூடிய அளவுக்கும் அதிகமாகக் குடித்துவிட்டாயாக்கும்?''

என்ருன். அவன் கிஸ்லியகோவைக் கடுமையாக உற்று நோக்கினுன்.பயமும் வியப்பும் அவனை ஆட்டிப்படைத்தன. நோயாளி இனம் தெரியாதபடி மாறிப்போனதை அவன் உணர்ந்தான்.

வாத்தியக்காரனின் முகம் வறண்டு போயிருந்தது. கன்னத்து எலும்புகள் துருத்திக்கொண்டு நின்றன. குழி விழுந்திருந்த கண்களைச் சுற்றிலும் பச்சை நிறப் புள்ளிகள் படர்ந்துகிடந்தன. பார்வை விசித்திரமான மந்த நிலையோடு, ஒரே திக்கில் வெறித்து நிற்கும் தன்மை பெற்று விட்டது. கன்னங்களின் மீதுள்ள சருமம்,உஷ்ணம் மிகுந்த கோடைக்கால நாளில் காட்சிஅளிக்கும் சவத்தின் நிறத்தை பெற்றிருந்தது. பயங்கரமாகவும் மரணக் களையோடும் விளங்கியது அவன் முகம். அவனுடைய தாடைகளின் மெல்லிய அசைவு தான் அவன் உயிரோடு இருக்கிருன் என்பதை நிரூபித்தது. அவனது மந்த நோக்கு நெடுநேரம் கிரிகரியின் மீதே நிலைகுத்தி நின்றது. இது அந்தச் செம்மானை பயத்தில் ஆழ்த்தி விட்டது. சீக்காளியை விட்டுச் சில அடி தூரம் விலகி நின்றுகொண்டிருந்த அவன் ஏனே தன் கால் சட்டையின் விளிம்புத் தையல்களை இழுத்துப் பறிப்பதில் முனைந்து விட்டான். யாரோ ஒருவன் குளிர்ந்த ஈரக்கசிவு உள்ள கரம்கொண்டு தனது தொண்டையை அழுந்தப் பற்றிச் சிறிது சிறிதாக இறுக்கி அமுக்குவது போன்ற உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. முன்பு ஒளியும் வசதியும் நிறைந்ததாக விளங்கிய—ஆனுல் இப்போது விபரீதமான குளிர்ச்சியும் அழிவின் நாற்றமும் நிறைந்து காணப்பட்ட—அந்த அறையை விட்டு வெளியே பாய்ந்து ஓடிப்போக அவன் விரும்பினுன்.

திரும்பிச்செல்வதற்குத் தயாராகிக்கொண்டே அவன், "நல்லது..." என்று ஆரம்பித்தான். வாத்தியக்காரனின் சாம்பல் நிற முகத்தின் மேலே ஒரு நிழல் பரவி மறைந்தது.

அவன் கரு நிற நுரை விளிம்பு கட்டியிருந்த உதடுகளைத் திறந்து, ஓசை எழாத குரலில் பேசினான்:

"நான்...செத்துக்...கொண்டிருக்கிறேன்."

சொல்ல முடியாத உணர்ச்சியின்மையோடு பேசப் பட்ட இவ்வார்த்தைகள் கிரிகரியை, நெஞ்சிலும் தலைமீதும் தனித்தனியே விழுந்த ஊமை அடிகள் போல், தாக்கின. அவன் அசட்டுத்தனமாகப் பல்லிளித்து விட்டு வாசலை நோக்கித் திரும்பினான். ஆனால் அதே கணத்தில், சென்கா மேல் மூச்சு வாங்க, மேலெல்லாம் வேர்வை வடிய, ஒரு வாளித் தண்ணீரைச் சுமந்துகொண்டு உள்ளே ஓடி வந்தான்.

"இதோ—ஸ்பிரிடோனோவ் கிணற்றிலிருந்து—அங்கே இருப்பவர்கள், நாய் மகன்கள், எனக்குத் தண்ணீர் தரச் சம்மதிக்கவே இல்லை."

அவன் வாளியைத் தரை மீது வைத்துவிட்டு, ஒரு மூலைக்குள்ளே புகுந்தான்; திரும்பி வந்து கிரிகரியிடம் ஒரு கிளாசைக் கொடுத்தான். அவ்வளவு நேரமும் அவன் பேசிக்கொண்டுதான் இருந்தான்.

"ஆகவே உங்கள் வீட்டுக்குக் காலரா வந்துவிட்ட தாக்கும்?' என்று அவன் என்னிடம் கேட்டான். 'எங்களுக்கு வந்திருந்தால் என்ன?' என்றேன். 'எங்களிடம் அது வந்துவிட்டது. உங்களுக்கும் வந்து சேரும். போன தடவை குடியிருப்பில் வந்து போயிற்றே, அது மாதிரி அது நிச்சயமாக எல்லா இடத்தையும் சுற்றிவிட்டுத்தான் போகும்' என்று சொன்னேன். படார்! அவன் என் மண்டையிலே ஓங்கி ஒரு அறை கொடுத்தான்."

கிரிகரி ஒரு கிளாஸ் நிறையத் தண்ணீர் மொண்டு, ஒரே விழுங்கில் குடித்துத் தீர்த்தான். உயிரற்ற அவ் வார்த்தைகள் இன்னும் அவன் செவிகளில் ஒலித்துக் கொண்டிருந்தன:

“நான்...செத்துக்...கொண்டிருக்கிறேன்.”

ஆனால் சென்கா, இதுவரை இல்லாத வகையில், துரு துருத்துக்கொண்டிருந்தான்.

வாத்தியக்காரன், மேஜை ஓரமாக அவர்களை நோக்கி நகர்ந்துகொண்டே, “தண்ணீர்” என்று முனங்கினான்.

சென்கா துள்ளி எழுந்து, ஒரு கிளாஸ் தண்ணீரை அவனது நிறமிழந்த உதடுகள் அருகே பிடித்தான். வாசல் அருகே சுவர் மீது சாய்ந்து நின்ற கிரிகரி, ஏதோ கனவில் கேட்பதைப்போல், சீக்காளி தண்ணீரை உறிஞ்சிக் குடிக்கும் ஓசையைக் கேட்டான். அதன் பிறகு தாம் இருவரும் சேர்ந்து அவன் ஆடைகளைக் களைந்து விட்டு அவனைப் படுக்க வைக்கலாமே என்று சென்கா யோசனை கூறியதையும் அவன் கேட்டான். அப்புறம், வர்ணம் பூசு வோர் வீட்டுச் சமையல்காரியின் குரல் வந்தது. அவளது அகன்ற முகம், பயமும் இரக்கமும் தாங்கி, ஜன்னல் கண்ணாடியோடு அழுத்தப்பட்டுக் காட்சி தந்தது. அழுகைக் குரலில் அவள் சொன்னாள்:

“புகைக் கரியை சாராயத்திலே கலக்கி அவனுக்குக் கொஞ்சம் கொடுங்கள். ஒரு கிளாஸ் சாராயத்துக்கு இரண்டு கரண்டிப் புகைக்கரி.”

மர எண்ணெய், ஊற வைத்த உப்பு, உயர்ந்த ரக வோட்கா மது ஆகியவற்றைக் கலந்து கொடுக்கலாம் என்று முற்றத்தில் நின்ற வேறொருவன் சொன்னான்.

கிரிகரியை அழுத்திக் கிடந்த கனத்த வியாகுலத்தைக் குத்திக் கிழித்துக்கொண்டு திடீரென்று பிரகாசித்தது ஏதோ ஒரு நினைவின் ஒளி. அந்த ஒளியை அதிகப்படுத்துகிற மாதிரி அவன் பலமாகத் தனது நெற்றியைத் தேய்த்தான்; பிறகு சடாரெனத் திரும்பி, அறைக்கு வெளியே ஓடி, முற்றத்தைத் தாண்டி, தெருவில் ஓடலானான்.

"அட கடவுளே! அந்தச் செம்மானுக்கும் அது வந்து விட்டது! அவன் ஆஸ்பத்திரிக்கு ஓடுகிறான்" என்று, ஆர்லோவின் திடீர் பிரிவுக்கு விளக்கம் கூறும் வகையில், சமையல்காரி ஓலமிட்டாள்.

அவளுக்கு அடுத்தாற்போல் நின்ற மேட்ரோனா முகம் வெளுத்தாள்; தன் கண்களை அகல விரித்தாள்; உடல் விதிர் விதிர்க்க நின்றாள். உதடுகள் மிக லேசாக அசைய அவள் கரகரப்பாக முனங்கினாள்: "அது பொய். அந்தப் பாழும் நோய் கிரிகரியை அணுக முடியாது. அவன் அதை அணுகவிட மாட்டான்."

எனினும், சமையல்காரி ஓலமிட்டுக்கொண்டே வெளியே ஓடினாள். ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு, அண்டை அயலார்களும் வழியோடு போகிறவர்களுமாக ஒரு சிறு கும்பல் வியாபாரி பெடுன்னிக்கோவின் வீட்டு முன்னால் தெருவில் கூடிவிட்டது. எல்லோர் முகங்களிலும் ஒரேவித உணர்ச்சிகள்தான் பிரதிபலித்தன: பரபரப்பும் நம்பிக்கை இழந்த கவலைக் குறியும் மாறி மாறித் தோன்றின. தீய எண்ணமும், வீரத்தனம் போன்ற பாவனையும் காணப்பட்டன. வெறும் கால்கள் மின்ன சென்கா முற்றம் நோக்கிப் பாய்வான்; மறுபடியும் உள்ளே நுழைவான்: இப்படியாக அந்த வாத்தியக்காரனின் நிலைமையை கூட்டத்துக்கு எடுத்துச் சொல்வதற்குப் பாடுபட்டான் அவன்.

ஜனங்கள் இடித்து நெருக்கிக்கொண்டிருந்தார்கள். தெருவில் நிலை பெற்று நின்ற நாற்றக் காற்ருேடு அவர் களுடைய பேச்சின் ஒலியும் கலந்தது. சில சமயம், தீய அர்த்தமற்ற வசைமொழிகள் மேலோங்கி ஒலித்தன.

“பார் பார்! அதோ ஆர்லோவ்!”

வண்டி ஒன்றின் இருப்புச் சட்டத்தில் அமர்ந்தபடி ஆர்லோவ் வீட்டு வாசலை நோக்கி முன்னேறிக் கொண்டு இருந்தான். முற்றிலும் வெள்ளை நிற உடுப்பு அணிந்து காணப்பட்ட சோகமயமான ஆள் ஒருவன் வண்டியை ஓட்டி வந்தான்.

“வழியை விட்டு விலகுங்கள்!” என்று வண்டி ஓட்டி கனத்த குரலில் கூவியபடி குதிரையை நேரே கும்பலுக்குள் செலுத்தினுன்.

வண்டியின் வருகையும், வண்டியோட்டியின் கூச்சல் களும் கூடி நின்றவர்களின் உற்சாகத் தீ மீது தண்ணீரைக் கொட்டியது போல் அமைந்தன. உடனடியாகவே ஒவ் வொருவரும் அடங்கி விட்டார்கள். அவர்களில் அநேகர் அங்கிருந்து வேகமாக நழுவிச் சென்றனர்.

வண்டியைத் தொடர்ந்து அந்த மாணவனும் வந்து சேர்ந்தான். ஆர்லோவ் தம்பதிகளுக்கு அறிமுகமாகியிருந்த அதே நபர் தான். அவனுடைய குல்லாய் தலையின் பின்புற மாக வழுகிப் போயிருந்தது. அவன் புருவத்திலிருந்து வேர்வை பெருகி ஓடிக்கொண்டிருந்தது. கண்ணைக் கூச வைக்கும் வெண்மை நிறத்தில் நீண்ட அங்கி ஒன்று அணிந்திருந்தான் அவன். அதன் முன்புறத்தில் கரிய ஓரங் களுடைய பெரிய வட்ட வடிவமான துவாரம் ஒன்றும் காணப்பட்டது.

வாசலை அடுத்திருந்த மூலையில் கூடி நின்ற ஜனங்கள் மீது ஓரக்கண் பார்வை வீசியவாறே, "ஊங், நோயாளி எங்கே இருக்கிறான்?" என்று கேட்டான் அவன். அவர்களின் எதிர் மொழி பகைமையோடு ஒலித்தது.

"புதிய சமையல்காரனைப் பாருங்கள்!" என்று எவனோ ஒருவன் கூவினான்.

"இவன் எப்படிப்பட்ட விருந்து அளிக்கப்போகிறான் என்பதைக் கொஞ்சம் காத்திருந்து பாருங்கள்!" என்று வேறொருவன் முனங்கினான்.

"அவன் தருவான் சூப்பு; அது தருமே சீக்கு" என்று, எந்தக் கும்பலிலும் சகஜமாக ஆஜராகி விடுகிற புத்தி சாலி சொன்னான்.

உற்சாகம் இல்லாத சிரிப்பு வெடித்தெழச் செய்தது அது. அச்சமும் அவநம்பிக்கையும் அதில் கலந்து ஒலித்தன.

"பாரு. அவர்கள் பயப்படவே இல்லை. அதற்கு என்ன சொல்கிறாய்?" என்று கவனத்தைத் திருப்புகிற கேள்வியைக் கேட்டு வைத்தான் ஒருவன். வருத்தத்தின் சாயல் காணப்பட்டது அவன் முகத்தில். அவன் பார்வையில் குரோதம் மண்டியது.

ஜனங்கள் அமைதி அடைந்தார்கள். அவர்கள் பேச்சு அடங்கி ஒலித்தது.

"அவர்கள் அவனை வெளியே தூக்கிக்கொண்டு வருகிறார்கள்."

"ஆர்லோவ்—வேசி மகன்."

"அவனுக்கு பயம் இல்லையா?"

"அந்த அசிங்கமான குடிகாரப்பயலுக்கா?"

"மெதுவாக, மெதுவாக, ஆர்லோவ், அவன் பாதங்களை இன்னும் உயரமாகத் தூக்கு. அப்படித்தான். இப்போ சரி. பீட்டர், நீ வண்டியை ஓட்டலாம்" என்று அம் மாணவன் கூறினான். "நான் சீக்கிரமே வந்து விடுவேன். நல்லது ஆர்லோவ். இந்த ஒட்டு—பற்றுகளை எல்லாம் சுத்தப்படுத்த நீ எனக்கு உதவி புரியவேணும். அதனால் இதை எல்லாம் எப்படிச் செய்ய வேண்டும் என்பதையும் நீ கற்றுக் கொள்ளலாம். சமயத்துக்கு உதவும் அது. உனக்கு ஏதாவது ஆட்சேபம் உண்டோ?" என்றான்.

"இல்லை" என்று சொன்ன ஆர்லோவ் பெருமை உணர்வோடு சுற்றிலும் பார்த்துக் கொண்டான்.

"நானும் உதவி புரிய முடியும்" என்று சென்கா அறிவித்தான்.

பயங்கரமான அந்த வண்டியைத் தொடர்ந்து வாசல் வரை சென்றிருந்த அவன் தனது சேவா உணர்ச்சியை அறிவித்துக்கொள்வதற்கு ஏற்ற சமயத்தில் வந்து சேர்ந்து விட்டான்.

"நீ யாரோ?"

"வர்ணம் பூசுகிறவர்களில் ஒருவன். அவர்களிடம் வேலை பழகுகிறவன்" என்று சென்கா விளக்கினான்.

"காலராவைக் கண்டு நீ பயப்படவில்லையா?"

"எனக்கா? பயமா?" என்று வியப்புடன் கேட்டான் சென்கா. நான் எதற்கும் பயப்படமாட்டேன்" என்றான்.

"அதுவும் அப்படியா?'' நல்லது. சரி. அப்போ......''

அந்த மாணவன் அங்கே தரையில் கிடந்த பீப்பாய் ஒன்றின் மீது அமர்ந்து, முன்னுக்கும் பின்னுக்குமாக ஆடி அசைந்து கொண்டே, தங்களைத் தாங்களே சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டியது எவ்வளவு முக்கியமானது என்பது பற்றி கிரிகரிக்கும் சென்காவுக்கும் விளக்கமாகச் சொன்னான்.

மேட்ரோனா, தன் முகத்தில் ஆவல் கலந்த புன்னகை மிளிர, அங்கே வந்தாள். அவளுக்குப் பின்னால், சமையல் காரி எண்ணெய்ப் பிசுக்கு மிகுந்த தன் முந்தானையில் முகத்தைத் துடைத்துக் கொண்டே வந்து சேர்ந்தாள். சிறிது நேரத்திற்குள்ளாக, மற்றும் சிலர், குருவி ஒன்றைப் பிடிக்கச் செல்கிற பூனை மாதிரி, கள்ள நடை நடந்து வந்தார்கள். முடிவில் சுமார் பத்துப் பேர் அம் மாணவனைச் சுற்றி இடித்து நெருக்கிக் கொண்டு நின்றார்கள். அது அவன் ஆர்வத்தைத் தூண்டி விட்டது. அவன் அவர்களுக்கு மத்தியில் நின்று, பலமாகக் கையை ஆட்டி அசைத்து ஒரு பிரசங்கமே பண்ணத் தொடங்கி விட்டான். அது, கேட்டு நின்றவர்களின் முகங்களில் ஒரு புன்னகையை வரவழைத்தது; பிறகு ஒளிவு மறைவற்ற அவநம்பிக்கையை அல்லது கேலி செய்யும் சந்தேக சுபாவத்தை உண்டாக்கியது.

"எல்லா விதமான வியாதிகளையும் எதிர்க்கக் கூடிய மகா முக்கியமான சாதனம் சுத்தமே ஆகும் — உடல் சுத்தமும், நீங்கள் சுவாசிக்கிற காற்றின் சுத்தமும் தான்'' என்று அவன் சொன்னான்.

"அட கடவுளே!'' என்று முனங்கினாள் வர்ணம் பூசுவோர் வீட்டுச் சமையல்காரி. "உங்களை அகால மரணத்திலிருந்து நிச்சயமாகப் பாதுகாக்கக் கூடிய ஒரே விஷயம்,

புனித மதத் தியாகி அர்ச். பார்பாராவை வேண்டிப் பிரார்த்தனை புரிவதுதான்'' என்றாள்.

"எவ்வளவோ பேர் சுத்தமாக வாழ்கிறார்கள். சுத்தமான காற்றையே சுவாசிக்கிறார்கள். எப்படியும் அவர்களும் செத்தே விடுகிறார்கள்'' என்று கூட்டத்தில் ஒருவன் சொன்னான்.

ஆர்லோவ் தன் மனைவிக்கு அடுத்தாற்போல நின்று மாணவனையே கவனித்தபடி மனசில் ஏதோ எண்ணிக் கொண்டிருந்தான். அப்பொழுது தனது சட்டைக் கையை யாரோ பிடித்து இழுத்ததை அவன் உணர்ந்தான்.

சென்கா, தீக் கங்குகள் போல் மினுமினுக்கும் கண்களோடு அவனைப் பார்த்து ரகசியமாகப் பேசினான்: "கிரிகரி மாமா. கிஸ்லியகோவ் செத்துப்போவான் என்றே தோன்றுகிறது. அவனுக்கோ சொந்தக்காரர்கள் யாரும் கிடையாது. அவனுடைய வாத்தியம் யாருக்குச் சேரும்?''

"வாயை மூடுடா, போக்கிரிப் பயலே'' என்று ஆர்லோவ் அவனை ஒதுக்கித் தள்ளினான்.

விலகிச் சென்ற சென்கா, வாத்தியக்காரன் வசித்த அறையின் ஜன்னல் வழியாக உள்ளே கவனித்து, ஏதாவது தென்படுமா என்று தன் கண்களால் துழாவினான்.

"சுண்ணாம்பு, கிலெண்ணெய்......'' என்று உரத்த குரலில் அடுக்கத் தொடங்கினான் மாணவன்.

* * *

குழப்பம் மிகுந்திருந்த அந்த நாளில், சாயங்கால வேளையில், இராச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருந்த போது, மேட்ரோனா தன் கணவனிடம் விசாரித்தாள்:

"இன்று அந்த மாணவனுடன் நீ எங்கே போனுய்?"

கிரிகரி பதில் எதுவும் பேசாமல், சிரத்தையின்றி அவளை நோக்கினுன்.

வாத்தியக்காரன் அறையில் புகை மூட்டம் போட்ட பிறகு, அவன் மாணவன் கூடப் போய்விட்டான். மூன்று மணிக்குத்தான் திரும்பி வந்தான். வரும்பொழுதே அவன் சிந்தனேயோடும் மௌனமாகவுமே காணப்பட்டான். வந்ததும் படுக்கையில் விழுந்து, ஒரு வார்த்தை கூடப் பேசாமல் கிடந்தான். அவனேப் பேச்சுக்கு இழுக்க அவன் மனேவி அநேக தடவைகள் முயன்றும் பயனில்லாமல் போய் விட்டது. அவன் அவளிடம் எரிந்து விழுந்து ஏசக் கூட வில்லே. விசித்திரமான, அவனது இயல்புக்கு மாறுன, இந்தப் போக்கு அவளுக்கு மனக் கலக்கம் ஏற்படுத்தியது.

தனது பூரண வாழ்வின் மையமாக விளங்குகிறவன் கணவனே எனக் கருதுகிற எந்தப் பெண்ணுக்கும் இயல் பாக உள்ள நுண் உணர்வோடு அவளும் அவனேச் சந்தேகித்தாள். அறிவை மயக்கும் ஆவல் எதனுலோ அவன் பாதிக்கப்பட்டுவிட்டான் என்று அவள் கருதினுள். இந்த நினேப்பினுல் எழுந்த அச்சம் அவளுடைய ஆராயும் குணத்தை விசிறி விட்டது. எதுதான் அவனே அப்படித் துயருறுத்திக் கொண்டிருக்கக் கூடும்?

"உன் உடம்புக்குக் குணமில்லேயா, கிரிகரி?"

சாஸரிலிருந்த கடைசி மடக்குத் தேநீரை விழுங்கி விட்டு, அவன் தனது புறங்கையினுல் மீசையைத் துடைத்துக்கொண்டான். காலியான கிளாஸை தன் மனேவியின் பக்கமாக மேஜை மீது அவசரமின்றித் தள்ளி வைத்தான்.

"நான் அந்த மாணவனேடு வாசஸ்தலத்துக்குப் போனேன்'' என்று அவன் சிறிது கோபத்தோடு சொன்னுன்.

"காலரா வாசஸ்தலத்துக்கா?'' என்று ஆச்சரியத் தோடு கேட்டாள் மேட்ரோனு. பிறகு பயம் கலந்த ரகசியக் குரலில் விசாரித்தாள் "அங்கே ரொம்பப் பேர் இருக்கிருர்களோ?'' என்று.

"ஐம்பத்து மூன்று பேர், நம்ம வாத்தியக்காரனையும் சேர்த்து. சிலர் சுகம் அடைந்து விட்டார்கள். இப்பவே அவர்கள் எழுந்து நடமாடுகிருர்கள். ஆனுல் மஞ்சள் பூத்து எலும்பும் தோலுமாய் இருக்கிருர்கள்.''

"காலரா கண்டிருந்த ஆட்களா அவர்கள்? நான் நம்ப வில்லை. சும்மா மேற்பார்வைக்காக அவர்கள் வேறு சிலரை யும் சேர்த்து வைத்திருக்கலாம். தங்களால் அவர்களைக் குணப்படுத்த முடிந்தது என்று ஊராருக்குக் காட்டு வதற்காக.''

"நீ ஒரு முட்டாள்'' என்று கிரிகரி வெடுக்கெனச் சொன்னுன். அவன் கண்களில் கோபக் கனல் தெறித்தது. "இங்கே இருக்கிற நீங்கள் எல்லோருமே தடி மூளை பெற்ற வர்கள்தான். மடையர்கள். அறிவிலிகள். இதுதான் உங்கள் உண்மை நிலை. இத்தகைய மரமண்டையர்களோடு வாழ்ந்தாலே போதும்—ஒருவனைச் சாகடிக்க அதுவே போதுமானது. உங்களுடைய கனத்த மண்டைகளுக் குள்ளே எவனும் எந்த விஷயத்தையும் திணித்துவிட முடியாது'' என்ருன். மறுபடியும் நிரப்பி வைக்கப்பட் டிருந்த கிளாசை வேகமாகப் பற்றி எடுத்துக்கொண்டு, அவன் மீண்டும் பேசா நிலை பெற்ருன்.

"இவ்வளவு ஞானோதயம் உனக்கு எங்கேதான் ஏற்பட்டதோ?" என்று சூடாக மொழிந்த மேட்ரோனா, பெருமூச்சு உயிர்த்தாள்.

அவன் ஒன்றும் பேசவில்லை. கிட்ட நெருங்க முடியாதபடி கடுமையும் சிந்தனை நிலைமையும் பெற்றிருந்தான் அவன். குளிர்ந்து கொண்டிருந்த ஸமோவார் ஈனமிழுத்த சிறு இசை பாடியது. வர்ணம், கார்பாலிக் ஆஸிட், கிளறிவிடப்பட்ட குப்பைக் கிடங்கு ஆகியவற்றின் நாற்ற அலைகள் ஜன்னலின் வழியே மிதந்து வந்தன. மாலை மயக்கமும் நாற்றங்களும் ஸமோவாரின் மெல்லிய இரைச்சலும் கூடிக் கலந்து நிலவின. கரிய அடுப்பின் வாய், கிடைக்கக் கூடிய முதல் சந்தர்ப்பத்திலேயே அவர்களை லபக்கென விழுங்கிவிடக் காத்திருப்பது போல், அவனையும் அவன் மனைவியையும் நோக்கிக் கோபமாய் திறந்து கிடந்தது. அந்தத் தம்பதிகள் அவரவர் சர்க்கரைத் துண்டுகளைப் பற்களால் கடித்து நொறுக்கினார்கள்; கிண்ணங்களில் ஓசை எழும்படியாகக் கலக்கினார்கள்; தேநீரை விழுங்கினார்கள். மேட்ரோனா அடிக்கடி பெருமூச்சு விட்டாள். கிரிகரி தன் விரல்களினால் மேஜை மீது கொட்டிக் கொண்டிருந்தான்.

"அது மாதிரியான சுத்தத்தை நீ இதுவரை பார்த்து இருக்கவே மாட்டாய்!" என்று எதிர் பாராத விதத்தில் பேச்செடுத்தான் அவன். "அங்கே வேலை செய்கிற ஒவ்வொரு ஆளும் வெள்ளை வெளேர் என்று உடுப்பு அணிந்திருக்கிறார்கள். சீக்காளிகளை நிமிஷத்துக்கு நிமிஷம் குளிப்பாட்டுகிறார்கள். ஒயின் கொடுக்கிறார்கள். ஒரு பாட்டில் இரண்டரை ரூபிளாக்கும். அவர்கள் சாப்பிடுகிற சாப்பாடு? அதன் வாசனையை ஒரு மூச்சு இழுத்தாலே போதும்; நம் வயிறு நிரம்பி விடும். அவர்களைக்

கவனிக்கிற விதமோ—ஒரு தாயின் அக்கறையோடு பார்க்கிருர்கள். ஊம். இதிலே அர்த்தம் எங்கே இருக்கிறது? ஒரு மனிதன் வருஷக் கணக்கிலே கவனிப்பாரற்று உயிர் வாழ்கிருன். அவனைப் பார்த்துக் காறித் துப்புவதற்குக் கூட நாதி கிடையாது. அடிக்கடி வந்து பார்க்கவும், எப்படி இருக்கிருன், வாழ்க்கை அவனை எந்த நிலைமையில் வைத்திருக்கிறது என்று கேட்கவும் ஆள் உண்டுமா என்பது கிடக்கட்டும். ஆனல், செத்துப்போகலாம் என்ற நினைப்பு அவன் மூளையிலே தலைதூக்கும் அதே நிமிஷத்திலே தடுத்து நிறுத்த வந்து விடுகிருர்களய்யா. ஏன்? அவனை உயிரோடு வைத்திருப்பதற்காக அவர்கள் தங்களைத் தாங்களே அரை உயிராய் சாகடித்துக் கொள்கிருர்கள். தங்குவதற்கு இடம்; பாட்டில் இரண்டரை ரூபிள் என்று ஓயின் வேறே. இதில் அர்த்தமே இல்லை என்பதை அவர்கள் அறிய முடியவில்லையா என்ன? ஓயினுக்கும் வாச ஸ்தலத்துக்குமாக அவர்கள், ஏயம்மா, ஏகப்பட்ட பணம் அல்லவா செலவு செய்கிருர்கள். அவன் நல்ல படியாக இருக்கும் பொழுது, அவன் வாழ்க்கையை வசதியுள்ளதாகச் செய்வதற்கென்று — வருஷத்துக்கு இவ்வளவு என்ற விகிதத்தில்—இந்தப் பணத்தை எல்லாம் அவர்கள் செலவழிக்கக் கூடாதா?'' என்ருன்.

அவன் சொல்வது என்ன என்று புரிந்துகொள்ள அவனுடைய மனைவி முயற்சி எதுவும் செய்யவில்லை. அவன் புதிதாக எதையாவது சொல்லிக்கொண்டிருப்பதே போதும் என்று பட்டது அவளுக்கு. அவள் கணித்து விட்ட சரியான முடிவு இது தான்: கிரிகரியின் உள்ளத்துள் என்ன கொதித்துக் கொண்டிருந்தாலும் சரிதான்; அது அவளுக்குத் தீமை பயப்பதாகத்தான் இருக்கும். அது தன்னை எவ்விதம் பாதிக்கும் என்று அறிய விரும்பினுள் அவள். அதையும் கூடிய சீக்கிரம் அறிந்து கொள்ளத்

தவித்தாள். இந்த ஆசையில் பயமும், நம்பிக்கையும், தன் கணவனிடம் ஓர் வகை வெறுப்பும் கலந்து கிடந்தன.

"அவர்கள் என்ன செய்கிருர்கள் என்பதைப் பற்றி உன்னை விட அவர்களே நன்ருகத் தெரிந்து வைத்திருப்பார்கள்" என்று சொல்லி, உதடுகளைச் சுழித்துக் கொண்டாள் அவள்.

கிரிகரி தனது தோள்களைக் குலுக்கினுன். அவள் மீது ஓரக் கண் பார்வை வீசினுன். சிறிது நேரம் சும்மா இருந்த பிறகு, அவன் தன் குரலில் மேலும் அதிகமான கடுகடுப்பைச் சேர்த்துப் பேசலானுன்:

"அவர்கள் அறிந்தாலும் சரிதான்; அறியாது போனுலும் சரிதான். அது அவர்களுடைய தொழில் ஆகிவிட்டது. ஆனுல், வாழ்க்கையின் ஒழுங்கான சுவையை அனுபவித்து உணராமலே சாகவேண்டியவன் நான் என்ற நிலை இருக்குமானுல், எது எப்படிப் பட்டது என்று எடுத்துச் சொல்ல வேண்டியவனும் நானே தான். நான் சொல்வது இதுதான்: இது மாதிரியான வாழ்க்கையை நான் போதுமான அளவுக்கு அனுபவித்தாயிற்று. காலரா வந்து என்னை முடிச்சு முடிச்சாகக் கட்டிப் போடுவதை எதிர் பார்த்து இங்கேயே காத்திருக்கும் எண்ணம் எனக்கு இல்லை. அப்படி என்ருல் இருக்கவும் முடியாது. பீட்டர் ஐவனேவிச் இவ்விதம் சொல்கிருர் — அதை எதிர்த்து நீயே குதித்துவிடு. விதியை எதிர்த்து நீ; உனக்கு எதிராக விதி. முடிவில் யாருக்கு வெற்றி என்று பார்க்கலாமே. நேரடித் தாக்குதல் தான். ஈவு இரக்கம் என்பதுக்கு இடமில்லை. தெளிவாகச் சொன்ருல்—நான் போய் வாசஸ்தலத்தில் வேலை செய்ய வேண்டும். அதுதான் விஷயம். புரிகிறதா? சிங்கத்தின் வாய்க்குள்ளேயே என் தலையைப் புகுத்துவது தான். அது

கடித்து விட்டால், நான் என் கால்களை எற்றி விடுவேன். மாதம் இருபது ரூபிள்கள் சம்பளம். அது தவிர போனஸ் கிடைத்தாலும் கிடைக்கலாம்.பதிலுக்கு என் வாழ்வையே பணயம் வைக்கிறேனுக்கும்? இருக்கட்டுமே நான் இங்கேயே இருந்தால் வெகு விரைவிலேயே செத்துப் போவேன்.''

கிரிகரி தன் முஷ்டியை மேஜை மீது பலமாக அறைந் தான். அதனால் தட்டுகள் துள்ளிக் குதித்தன.

ஆரம்பத்தில் அவன் பேச்சை மேட்ரோனு முகத்தில் கவலையும் ஆராயும் பாவமும் பரவி நிற்க, உன்னிப்பாகக் கவனித்தாள். அவன் முடித்ததும், அவள் அதை ஏற்றுக் கொள்ளாத முறையில் கண்களைச் சுழற்றினுள். தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டே அவள் கேட்டாள்:

“இப்படிச் செய் என்று உனக்கு உபதேசித்தது அந்த மாணவன் தானே?''

“என்னக்கென்று தனியாக ஒரு மனம் இருக்கிறது. எனக்காக நானே சிந்திக்க முடியும்'' என்று மழுப்பலாகப் பேசினுன் ஆர்லோவ்.

“நல்லது. என்னை என்ன செய்வது என்பதுபற்றி அவர் உனக்கு என்ன யோசனை சொன்னுர்?'' என்று மேட்ரோனு கேட்டாள்.

“உன்னையா?'' அவள் கேள்வி எதிர்பாராத விதத்தில் அவனைப் பற்றிக்கொண்டது. தன் மனைவியின் நிலைபற்றிச் சிந்திக்க அவனுக்கு அது வரை நேரம் கிட்டவேயில்லை. அவன் அவளை வீட்டில் விட்டு விட்டுச் செல்லலாம். மற்ற வர்கள் தங்கள் மனைவிமாரை வீட்டில் வைத்து விட்டுத்தான் போகிருர்கள். ஆனல் மேட்ரோனுவை

தனியாக விட்டு வைப்பது ஆபத்தான காரியமாகும். இந்த உண்மை மனசில் படவும் அவன் அவளைக் கோபமாகப் பார்த்து, "நீ இங்கேயே வசித்துக் கொண்டிரு. நான் என் சம்பளப் பணத்தைக் கொண்டு வந்து உன்னிடம் கொடுப்பேன்" என்றான்.

"புரிகிறது" என்று அமைதியாகச் சொன்னாள் அவன் மனைவி. பிறகு, ஆணின் உள்ளத்தில் பொறுமை உணர்வை நிச்சயமாகக் கிளறி விடக் கூடிய அர்த்தம் நிறைந்த பெண்மைச் சிரிப்பை அவள் காட்டினாள்.

நுண்ணிய உணர்ச்சி பெற்றிருந்த கிரிகரி உடனடியாக உணர்ந்து கொண்டான். ஆயினும் தனது உணர்ச்சிகளைத் தன் மனைவியிடம் காட்டுவதற்கு அவனுடைய தற்பெருமை இடமளிக்கவில்லை.

"ஊவ்-ஊவ், குவாக் குவாக்— நீ சொல்லக்கூடியதெல்லாம் இவ்வளவு தானே?" என்று கூறி, அவளது மறு மொழிக்காகக் காத்திருந்தான் அவன்.

ஆனால் அவளோ சித்திரவதை செய்யும் அதே மென் சிரிப்பை மீண்டும் அளித்தாள்; எதுவும் பேசினாள் இல்லை.

"நம்ம விஷயம், அது எப்படி அமைவதாம்?" என்று கிரிகரி எரிந்து விழுந்தான்.

"என்ன விஷயம்?" என்று கேட்டாள் மேட்ரோனா. அவள் அமைதியாய் கண்ணாடிப் பாத்திரங்களைத் துடைத்துக் கொண்டிருந்தாள்.

"ஏ பாம்பே! உன் பாவலா எதுவும் வேண்டியதில்லை. நான் சரியானபடி உனக்குக் கொடுத்து விடுவேன்" என்று கிரிகரி கொதித்தான். "நான் என் சாவை நோக்கிப் போவதாக முடிந்தாலும் முடியலாம்" என்றான்.

“அப்படி உன்னை அனுப்புவது நான் இல்லையே. நீ போக வேண்டாம்.''

“என்னை அனுப்பி விடுவதில் உனக்கு எவ்வளவோ சந்தோஷம் தான். உன்னை எனக்கு நன்ருகத் தெரியும்'' என்று இரக்க மில்லாமல் கத்தினுன் அவன்.

மீண்டும் அவள் பதில் பேசவில்லை. இது அவன் கோபத்தை மேலும் கிண்டிவிட்டது. ஆயினும் தனது வழக்கமான கூப்பாடுகளை அவன் கட்டுப்படுத்திக்கொண்டான். அப்படி அவன் தன்னைக் கட்டுப்படுத்தியதன் காரணம், அப்பொழுது அவன் உள்ளத்தில் மிகவும் தந்திரமான எண்ணம் ஒன்று மின் வெட்டியதுதான். மிகப் பெரிய தந்திரம் என்றே அவன் அதை மதித்தான்.

“நான் ஏதாவது சாவுக் கிடங்கில் அகப்பட்டுக் கொள்வதைக் காண நீ ரொம்பவும் சந்தோஷப்படுவாய் என்பது எனக்குத் தெரியும். ஆனல் நீ கொஞ்சம் காத்திரம்மா. எனக்கும் ஒன்றிரண்டு தந்திரங்கள் தெரியும். நானே உனக்குக் காட்டுவேன்'' என்று அவன் பெருமை அடித்துக் கொண்டான்.

அவன் குதித் தெழுந்து, ஜன்னல் ஓரத்திலிருந்த குல்லாயை வேகமாக எடுத்துக் கொண்டு வெளியேறினுன். அங்கே தனியளாய் விடப்பட்ட அவன் மனைவி தான் கையாண்ட உத்திகளுக்காக வருத்தப்பட்டாள்; அவனது மிரட்டல்களை எண்ணி வருந்தினுள்; என்ன நேருமோ என்ற அச்சத்தினுல் கலங்கி யிருந்தாள்.

“ஏ கடவுளே, பரிசுத்த கன்னியே, தேவலோக ராணியே!'' என்று முனங்கினுள் அவள்.

கிரிகரி என்ன செய்யத் திட்டமிட்டிருக்கிருன் என்று யூகிக்க முயற்சித்தவாறே அவள் வெகு நேரம் மேஜை முன் உட்கார்ந்திருந்தாள். சுத்தம் செய்யப்பட்ட பாத்தி ரங்கள் அவளுக்கு முன்ஞல் இருந்தன. அவர்கள் அறை யின் ஜன்னலுக்கு எதிரில் வெள்ளேச் சுவர் மீது அஸ்தமன சூரியனின் செவ்வொளி சிறிது படிந்திருந்தது. சுவர் அவ் ஒளியை மடக்கித் திருப்பி அறையினுள் எறிந்தது. மேட்ரோனுவின் முன் இருந்த சர்க்கரைக் கிண்ணத்தின் விளிம்பு அதை ஏற்று மிளிர்ந்தது. இந்தச் சிறு பிரகாசம் அவள் கவனத்தைக் கவர்ந்தது. அவள் தன் புருவங்களேச் சுருக்கிக்கொண்டு, கண்கள் வலி எடுக்கும் வரை, அதையே உறுத்து நோக்கியவாறு உட்கார்ந்திருந்தாள். அப்புறம் பாத்திரங்களே வேறு இடத்தில் வைத்துவிட்டுப் படுக்கப் போனுள்.

கிரிகரி திரும்பிய போது நன்ருக இருட்டி யிருந்தது. படிக் கட்டுகளில் எழுந்த அவனது காலடி ஓசையைக் கொண்டே அவன் சுமுகமான நிலேயில் இருக்கிருன் என்பதை அவள் உணர முடிந்தது. அவன், அறையில் நிலவிய இருளேச் சபித்துக் கொண்டே படுக்கையை அணுகினுன்; அவள் பக்கத்தில் அமர்ந்தான்.

"விஷயம் தெரியுமா?" என்று கேட்டு, லேசாகச் சிரித்தான் அவன்.

"என்னவாம்?"

"நீயும் என்னேடு அங்கே வேலே பார்க்கப் போகிருய்."

"எங்கே?" என்று நடுங்கும் குரலில் அவள் கேட்டாள்.

"நான் வேலை பார்க்கப் போகிற அதே இடத்தில்தான்'' என்று அவன் வெற்றிப் பெருமிதத்தோடு அறிவித்தான்.

உடனே அவள் அவனுடைய கழுத்தைச் சுற்றித் தன் கரங்களை வளைத்து அவனை இறுக அணைத்து, அவன் உதடுகளில் முத்த மிட்டாள். இது முற்றிலும் எதிர் பாராததாக இருந்ததால் அவன் அவளை விலக்கித் தள்ளினுன்.

தான் நம்ப வேண்டும் என்பதற்காக அவள் அப்படி நடிக்கிருள் என்று தான் அவன் நினைத்தான். "இவள் அங்கே வேலை செய்ய விரும்பவே இல்லை. இலச்சை கெட்டவள். சும்மா நம்ப வைக்க முயற்சிக்கிருள். அவள் புருஷன் பரம முட்டாள் என்ற நினைப்பு அவளுக்கு. வெறும் துப்புக் கெட்டவள்!'' என்று அவன் மனம் பேசியது.

அவளைத் தரையிலே பிடித்துத் தள்ள வேண்டும் என்கிற திடீர் உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. "நீ ஏன் இப்படிச் செய்தாய்?'' என்று அவன் சந்தேகத்தோடு கேட்டான்.

"ஏனென்ருல் அப்படித்தான்'' என்று நழுவலாக பதிலளித்தாள் அவள்.

"உன் பாசாங்கு எதுவும் வேண்டாம். உன்னை நான் நன்ருக அறிவேன்.''

"ராசா! எனது ஆண் சிங்கமே!''

"ஏய், இதை விட்டு விடு. இல்லையோ சரியானபடி கொடுப்பேன்.''

"கிரிகரி, என் அன்பே!"

"இந்தா பாரு, நீ நிசமாத்தான் பேசுகிருயா?"

அவளுடைய கொஞ்சுதல்களினுல் அவனுடைய கொதிப்பு ஓரளவு தணிந்து போனதும் அவன் ஆர்வத் தோடு அவள் பக்கம் திரும்பி, "நீ பயப்பட வில்லையா?" என்று கேட்டான்.

"எதற்கு பயம்? நாம் தான் ஒன்ருக இருப்போமே. இருக்க மாட்டோமா என்ன?" என்று அவள் சகஜமாகக் கூறினுள்.

அவ்விதம் அவள் பேசியதைக் கேட்க மகிழ்வாக இருந்தது அவனுக்கு.

"நீயும் தேர்ந்தவள் தான்" என்று சொல்லி அவன் அவளை அழுத்தமாகக் கிள்ளி விடவே, அவள் கீச்சிட்டுக் கத்தினுள்.

* * *

ஆர்லோவ் தம்பதிகள் வாசஸ்தலத்தில் சேர்ந்த முதல் நாளன்று, மிக மிக அதிகமான நோயாளிகள் புதிதாகக் கொண்டு வரப்பட்டார்கள். தொழிலுக்குப் புதியவர் களான அவ்விருவரும் தங்கள் வாழ்க்கையில் பரபரப் பற்ற நிதானமான போக்கிலே பழகியிருந்ததால், இப்போது வேகத்தோடு இயங்கிய அலுவல்களின் மத்தி யில், நிலை குலைந்து பயந்து தவித்தார்கள். கைப் பழக்கம் இல்லாததால் நேரும் திகைப்பையும், இன்னது செய்ய வேண்டும் என்று பிறர் சொல்வதைப் புரிந்து கொள் வதற்குத் தாங்கள் படும் சிரமத்தையும், தங்கள் நினைவில் பதிகிற பயங்கரத் தோற்றங்களையும் கண்டு அவர்கள் குழப்பம் அடைந்தார்கள். தங்களால் இயன்ற மட்டும் பாடுபட்டார்கள் அவர்கள். ஆயினும் அவ்விருவரும்

மற்றவர்களின் பாதையில் குறுக்கிடுவதிலேயே வெற்றி கண்டார்கள். பிறர் தன்னைக் கோபித்து அதட்டினால் அது நியாயம் ஆகும்; திறமையில்லை என்பதற்காகச் சுடுசொல் பெறத் தான் அருகதையானவனே என்று கிரிகரி அநேக தடவைகள் கருதினான். ஆனாலும் ஒருவர் கூட அவனை அதட்டாமலிருந்தது அவனுக்குப் பெரு வியப்பு அளித்தது.

டாக்டர்களில் ஒருவர்—கறுப்பு மீசையும் வளைந்த மூக்கும், வலது புருவத்துக்கு மேலே பெரிய மச்சம் ஒன்றும் பெற்றிருந்த நெட்டை மனிதர்—ஒரு நோயாளியை குளிக்குமிடத்தில் சேர்ப்பதற்கு உதவி புரியும்படி கிரிகரியை ஏவினார். அவனது கைகளினூடாக மிகுந்த பலத்தோடு பற்றி அந்தச் சீக்குக்காரனை கிரிகரி தூக்கிய போது அவன் கூச்சலிட்டு வேதனையால் முகம் சுளித்தான்.

"அவனை துண்டு துண்டாக முறிக்க வேண்டாம், நண்பரே. முழுசாக அப்படியே அவனை ஸ்நானத்தொட்டி யில் வைத்து விட வேண்டியது தான்" என்று கம்பீர மாகச் சொன்னார் டாக்டர்.

கிரிகரி வெட்கம் அடைந்தான். நீண்டு மெலிந்து காணப்பட்ட நோயாளி வலுவில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு பேசினான். "இவன் இந்த வேலைக்குப் புதுசு. இன்னும் சரியாகக் கற்றுக் கொள்ள வில்லை" என்றான்.

ஆர்லோவ் தம்பதிகள் அந்த இடத்துக்கு வந்து சேர்ந் ததும், வயது முதிர்ந்த டாக்டர் ஒருவர் அவர்களுக்குப் போதித்தார். சாம்பல் நிறமுள்ள கூரிய தாடியும், மின்னும் பெரிய கண்களும் உடையவர் அவர். நோயாளி களை எவ்வாறு கவனிப்பது, ஒரு இடத்திலிருந்து வேறு

இடத்துக்குத் தூக்கிச் செல்கையில் அவர்களை எப்படிப் பிடித்துக் கொள்வது, வெவ்வேறு சமயங்களில் எவ்விதம் நடந்து கொள்ள வேண்டும் என்பது பற்றி யெல்லாம் அவர் எடுத்துச் சொன்னார். முடிவாக, அவர்கள் ஸ்நானம் செய்தாயிற்று என்று அவர் கிரிகரியையும் மேட்ரோனவை யும் விசாரித்தார். ஆளுக்கு ஒரு வெள்ளை முந்தானை கொடுத்தார். அந்த டாக்டர் மென்குரல் பெற்றிருந்தார்; வேகமாகப் பேசினார். ஆர்லோவ் தம்பதிகளுக்கு அவரை மிகவும் பிடித்து விட்டது. வெண்ணிற உடை தரித்தவர்கள் அங்கும் இங்குமாக விரைந்து கொண்டி ருந்தார்கள். அவர்கள் நடந்து கொண்டிருந்த வேளையிலே உத்திரவுகளிட்டார்கள்; உத்திரவுகளை ஏற்றுக் கொண் டார்கள். வியாதிக்காரர்கள் அழுதார்கள்; அரற்றினார்கள். தண்ணீர் தெறித்து விழுந்தது; வழிந்து ஓடியது. இவ் ஓசைகள் எல்லாம் இனிமை யில்லாத நாற்றங்கள் கனத் துக் கவிந்து கிடந்த காற்றிலே கலந்து மிதந்தன. அதனால், டாக்டர் பேசும் ஒவ்வொரு சொல்லும், நோயாளி உயிர்க் கும் ஒவ்வொரு அரற்றலும் தத்தமக்கென்று தனியாக வலி கொடுக்கும் நாற்றம் பெற்றிருந்தது போல் தோன்றியது.

முதலில் அங்கே குழப்பத்தைத் தவிர வேறு எதையும் கிரிகரி காணவில்லை. அந்தச் சூழ்நிலையில் தானும் இணங்கி இயங்குவதும் சாத்தியமல்ல — மூச்சு முட்டித் தான் சீக்கிலே விழ நேரிடலாம் என்றே அவன் நிச்சயித்தான். ஆனால் ஒரு சில மணி நேரத்திலேயே, அங்கு நெடுகிலும் பரவியிருந்த சக்தியினால் அவனும் பாதிக்கப்பட்டான். அவனும் சுறுசுறுப்படைந்து, பயனுள்ள பணி புரிவதற்கு ஏதேனும் ஒரு வழி காண்பதில் ஆர்வமாக இருந்தான். ஏனெனில், தானும் அந்தப் பரப்பிலே கலந்து கொண்டால் தான் அமைதியும் நல்லுணர்வும் பெற முடியும் என அவன் உணர்ந்தான்.

"மெர்குரி பைகுளோரைட்!'' என்று ஒரு டாக்டர் கத்தினர்.

"வெந்நீர்!'' என்று கட்டளை யிட்டான் மாணவன் ஒருவன். மெலிந்து தோன்றிய அவனது கண் இமைகள் சிவந்தும் வீங்கியுமிருந்தன.

"ஏய், உன் பெயர் என்ன? ஆர்லோவா? இவன் கால்களைத் தேய்த்து விடு. இப்படித் தேய். சரிசரி, அப் படித்தான். மெதுவாக. தோலை உரிக்க வேண்டிய அவசியம் இல்லையே'' என்று வேருெரு மாணவன், எவ்வாறு உடம்பைத் தேய்த்து விடுவது என்பதுபற்றி கிரிகரிக்கு எடுத்துச் சொன்னுன். நீண்ட தலை முடியும், முகத்தில் அம்மைத் தழும்பும் பெற்றிருந்தான் அவன்.

"இன்னுமொரு நோயாளியைக் கொண்டு வந்திருக் கிருர்கள்'' என்று யாரோ ஒருவன் அறிவித்தான்.

"அவனை உள்ளே எடுத்து வா, ஆர்லோவ்.''

கிரிகரி—குழம்பி, வேர்த்து, கண்ணெளி மழுங்க, மனம் தெளிவற்று விட— தனது ஆற்றலுக்கு ஏற்பச் செயல் புரிந்தான். சில சமயங்களில், அவன் தான் கண்டு உணர்ந்த அனுபவங்களினுல் பரவசமடைந்து தன்னிலை மறந்து போவதும் உண்டு.மண் நிறம் பெற்ற முகங்களில் கண்ணுடி போல் மினுங்குகிற கண்களைச் சுற்றிலும் படர்ந்த பச்சைப் புள்ளிகள், சீக்கினுல் சீவிச் சிதைக்கப் பட்டது போல் காட்சி தந்த அங்கங்கள், பிசு பிசுக்கும் நாற்றமும் உள்ள சருமம், லேசாக உயிர் தொக்கி நிற்கும் உடல்களின் பயங்கரமான துடிப்புகள்—இவை எல்லாம் அவன் இதயத்தில் வேதனையும் வயிற்றில் கரைச்சலும் ஏற்படுத்தின.

ஒன்றிரண்டு தடவைகள் அவன் அவ் வாசஸ்தலத்தின் தாழ்வாரத்தில் வேகமாகச் செல்லும் தன் மனைவியைக் காண முடிந்தது. அவள் முன்னைவிட மெலிந்திருந்தாள். அவள் முகம் சாம்பல் நிறமாக மாறியும் சஞ்சலம் நிறைந்தும் தோன்றியது.

"விஷயம் எல்லாம் எப்படி உள்ளன?" என்று ஒரு சமயம் அவன் கேட்டான்.

அவள் உணர்ச்சியற்ற சிரிப்பு சிரித்து விட்டு, ஒரு வார்த்தை கூடப் பேசாமல் போய் விட்டாள்.

அவனது இயல்புக்குப் புறம்பான ஒரு எண்ணம் கிரிகரி உள்ளத்தில் உதயமாயிற்று. இந்தக் கொடிய இடத்துக்குத் தன் மனைவியைத் தான் இழுத்து வந்தது தவருகவே இருக்கலாம்; அவளுக்கு ஏதாவது நேர்ந்து விடக் கூடும் என்று அவன் நினைத்தான். ஆகவே அவளை மறுமுறை கண்டபோது, அவன் கடுமையாக மொழிந்தான்:

"நீ அடிக்கடி உன் கைகளைக் கழுவிக் கொள்ள வேண்டும். உன்னை நீயே சிரத்தையோடு கவனித்துக் கொள்!"

"நான் அப்படிச் செய்யாவிட்டால்?" என்று வெடுக்கெனக் கேட்டு, தனது வெண்மையான சிறு பற்கள் முழுவதும் தெரியச் சிரித்தாள் அவள்.

அது அவனுக்குக் கோப மூட்டியது. கேலி பேசுவதற்கு அருமையான இடம் பாரு! அறிவு கெட்ட மண்டூகம்! எவ்வளவு கீழ்த்தரமானவர்களாக இருக்கிருர்கள் இந்தப் பெண்கள்! ஆனல் மேட்ரோனு அவன் கண்களின் கோபக் கனலைக் கண்டு விட்டாள். அவன் சுடு சொல் எறிவதற்கு முந்தி அவள் பெண்கள் பகுதிக்குள் ஓடி மறைந்து கொண்டாள்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகு, அவன் தனக்கு அறிமுக மாகியிருந்த போலீஸ்காரன் ஒருவனை சவக் கிடங்குக்கு எடுத்துச் சென்று கொண்டிருந்தான். அந்தப் போலீஸ் காரன் 'ஸ்ட்ரெச்ச'ரில் அமைதியாக அசைந்தபடி கிடந் தான். அவன் கண்கள், உஷ்ணமான நீல வானை நோக்கி ஒளியின்றி நிலைத்து நின்றன. கிரிகரி மந்தமான பயத்தோடு அவனைப் பார்த்தான். மூன்று நாட்களுக்கு முன்பு கூட அவன் 'பீட்டில்' நிற்கும் போது கிரிகரி பார்த்திருக்கிறான். அவனைப் பார்த்து சபிக்கக் கூடச் செய்தானே! (இதே போலீஸ்காரன் கூடத்தான் அவன் பைசல் பண்ணியாக வேண்டிய சிறு விவகாரம் ஒன்று இருந்தது.) இப்போதோ அவன் விழுந்து கிடந்தான். வலிமையும் சண்டைக் குண மும் பெற்று விளங்கிய மனிதன் இதோ செத்துப் போய், பயங்கரமாக மாறி, வலிப்புகளினால் சீர்குலைந்து கிடந்தான்.

இதில் ஏதோ தவறு இருக்கிறது என்று கிரிகரி உணர்ந்தான். இத்தகைய அருவருப்பான வியாதியினால் ஒரே நாளில் அடித்துச் செல்லப்படுவதனால், மனிதன் ஏன் இந்த உலகத்தில் பிறக்க வேண்டும்? அவன் அந்தப் போலீஸ்காரனை மறுபடியும் பார்த்தான்; அவனுக்காக வருத்தப்பட்டான்.

அப்பொழுது திடீரென்று பிணத்தின் இடது கை அசைந்து நேராக நிமிர்ந்தது. கோணியிருந்த வாயின் இடது பக்கம், அது வரை திறந்து தொங்கியது, தானாக மூடிக் கொண்டது.

"நில்லு! புரோனின் —" என்று கூவிக்கொண்டே கிரிகரி ஸ்ட்ரெச்சரில் தான் பிடித்திருந்த பகுதியைக் கீழே வைத்தான். "இவன் உயிரோடு இருக்கிறான்" என்றான்.

மறுமுனையைப் பற்றியிருந்தவன் திரும்பி, செத்தவனை ஒரு கணம் நிதானத்தோடு ஊன்றி நோக்கினுன். பிறகு கடுமையாகப் பேசினுன்:

"எதற்காகப் பொய் சொல்லுகிருய்? அவன் சவப் பெட்டிக்குச் சரியாக இருக்கும்படி கையை நேர்படுத்திக் கொண்டான். அது உனக்குத் தெரியாதாக்கும்? சும்மா வா."

கிரிகரி பயத்தால் நடுங்கிக்கொண்டே, "ஆனுல் அவன் அசைந்தானே" என்று சொன்னுன்.

"அட விசித்திரப் பிரகிருதியே, சும்மா வா. சொல்வதை உன்னுல் புரிந்துகொள்ள முடியவில்லையா என்ன? அவன் சவப்பெட்டிக்கு வசதியாகத் தன் கையை நேராக்கிக் கொண்டான் என்கிறேன். அதனுல் அவன் அசைந்தான். உனது அறியாமை என்ருவது ஒரு நாள் உன்னை தொல்லையில் மாட்டிவைக்கத்தான் போகிறது. உயிரோடு இருக்கிறதாம்! செத்த பிணத்தைப் பற்றிச் சொல்வதற்கு அருமையான விஷயம் தான். நீ தொந்தரவு கிளப்பிவிட ஆசைப் படுகிருயா? பிணங்களின் அசைவைப் பற்றி நீ ஒருவரிடமும் ஒன்றும் பேச வேண்டாம். எல்லாப் பிணங்களும் அப்படித்தான் செய்கின்றன. இது தெரிந்தால், ஊர் பூராவும் விஷயம் பரவி விடும். கொசு ஒரு யானை அளவு பெரிதாகி விடும். அப்புறம் நரக வேதனை தான். ஆட்களை உயிரோடு புதைக்கிருர்களாமே என்று ஜனங்கள் படை படையாகத் திரண்டு வந்து விடுவார்கள். நம்மைத் தாக்கி நம் உயிரை அப்புறப்படுத்தி விடுவார்கள். உன் உயிரைக் கூடத்தான். இதோ இவனை இடது பக்கமாகத் தள்ளு."

அந்த மனிதனின் கலக்கமில்லாத குரலும், அவசரமில்லாத நடையும் கிரிகரியை சாந்தப்படுத்தும் சக்தி பெற்றிருந்தன.

"மனம் இடிந்து போகாதே. இதெல்லாம் பழக்கப்பட்டு விடும். இது மோசமான இடம் அல்ல. நல்ல சாப்பாடு, நல்ல கவனிப்பு, மற்றும் பல வசதிகள் எல்லாம் இருக்கின்றன. என்ருவது ஒரு நாள் நாம் எல்லோருமே பிணங்களாகி விடுவோம். இதைவிட நிச்சயமான உண்மை வேறு எதுவுமில்லை. இடைக்காலத்திலே, உதடுகளை இறுக மூடிக்கொண்டிரு. அதுதான் முக்கிய விஷயம். நீ குடிப்பது உண்டா?"

"ஆம்" என்ருன் கிரிகரி.

"நல்லது. அங்கே ஒரு பொந்தில் நான் ஒரு புட்டியைப் பதுக்கி வைத்திருக்கிறேன். நாம் அங்கே போய் ஒரு விழுங்கு விழுங்கினுல் என்ன?"

ஆகவே அவர்கள் வாச ஸ்தலத்தின் பின்புற மிருந்த பொந்து அருகே போனுர்கள்; ஒரு விழுங்கு விழுங்கினுர்கள். அதன் பிறகு புரோனின் ஒரு சர்க்கரைத் துண்டின் மீது கொஞ்சம் பெப்பர்மின்ட் தைலத்தை ஊற்றி, அதை கிரிகரியிடம் கொடுத்தான்.

"நாற்றத்தைப் போக்கடிப்பதற்காக இதைத் தின்னு. வோட்கா விஷயத்தில் இங்குள்ளவர்கள் மிகவும் கண்டிப்பாக இருக்கிருர்கள். அது உங்களுக்குக் கேடு பயக்கும் என்று சொல்கிருர்கள்" என்று அவன் சொன்னுன்.

"நீ இந்த இடத்தில் நன்ருகப் பழகி விட்டாயோ?" என்று கிரிகரி கேட்டான்.

"நானு? முதல் ஆரம்பத்திலிருந்தே நான் இங்கே இருக்கிறேன். எல்லா ஜனங்களும் இங்கே மண்டையைப் போட்டு விட்டதை நான் பார்த்திருக்கிறேன். இது உண்மையிலேயே அமைதி நிறைந்த வாழ்க்கை இல்லைதான். ஆனுலும் மோசமானது அல்ல. கடவுளின் வேலை இது.

யுத்த களத்தில் இருப்பது போல் தான். யுத்த களத்தில் உள்ள நர்சுகளையும் டாக்டர்களையும் பற்றி நீ எப்போ தாவது கேள்விப்பட்டிருக்கிருயா? துருக்கிப் படையெடுப் பின் போது நான் ஏகப்பட்ட பேரைப் பார்த்தேன். அர்டகான், கார்ஸ் ஆகிய இடங்களில் தான். அவர்கள் போர் வீரர்களான எங்களைப் பார்க்கிலும் தைரியமான வர்கள் தான். நாங்கள் கைகளில் துப்பாக்கிகள், குண்டுகள், பாய்னட்டுகள் சகிதம் யுத்தத்தில் பிரவேசிக்கிருேம். ஆனுல் அவர்களோ குண்டுகள் மழையாக விழுந்து கொண் டிருக்கிற போது, கவலை இல்லாமல் உலாவப் போகிற மாதிரி அங்குமிங்கும் நடமாடுவார்கள். எங்களை அல்லது துருக்கியரை அவர்கள் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல் வார்கள். அவ்வளவு நேரமும் உய்ங், பிங்ங், பேங்ங் என்று குண்டுகள் சிதறிக்கொண்டே யிருக்கும். சில சமயம் எவராவது ஒரு டாக்டரின் பின் தலையில் அடிபடும்— பிங்ங்—அவ்வளவு தான். ஆள் காலி!''

இந்தப் பேச்சுக்கும், நல்ல ஜோரான வோட்கா மதுக் குடிக்கும் பிறகு, கிரிகரி ஊக்க உணர்ச்சி பெற்ருன்.

"உரலிலே தலையைக் கொடுத்த பிறகு உலக்கைக்குப் பயப்பட முடியுமா? என்று அவன், நோயாளிகளில் ஒருவனின் கால்களைத் தேய்க்கும் வேளையில், தனக்குத் தானே சொல்லிக் கொண்டான். அவனுக்குப் பின்னுல் யாரோ புலம்பிக் கொண்டும் துயரக்குரலில் கூப்பிட்டுக் கொண்டு மிருந்தார்கள்.

"தண்ணீர்...ஓஓ ... தயவு செய்யுங்கள் ...யாராவது''

"ஐயோ! இன்னும் சூடாக! அது இதம் தருகிறது, டாக்டர். கடவுளுக்குப் பொதுவாகச் சொல்கிறேன். கொதிக்கும் நீரை இன்னும் கொஞ்சம் அதிகமாகச் சேர்க்கச் சொல்லுங்கள்!''

"அவனுக்குக் கொஞ்சம் ஒயின் கொடு!" என்று உரத்துக் கூறினார் டாக்டர் வாஷென்கோ.

கிரிகரி வேலையில் முனைந்ததும், அங்குள்ள நிலைமை முதன் முதலில் தோன்றியது போல அவ்வளவு பயங்கரமாகவும் வெறுப்பூட்டுவதாகும் இல்லை என்பதைக் கண்டான். குழப்ப நிலை என்று தான் கருதியது உண்மையில் அறிவுள்ள பெரிய சக்தி ஒன்றின் ஒழுங்கான வேலை முறையேயாகும் என்பதையும் அவன் புரிந்து கொண்டான். எனினும், போலீஸ்காரனைப் பற்றிய நினைவு அவனுக்கு எழுகிற போதெல்லாம் அவன் தேகம் நடுங்கும்; அவன் திருட்டுத்தனமாக ஜன்னலுக்கு வெளியே முற்றத்தை நோக்கிப் பார்வை எறிவான். அவன் இறந்து போனான் என்றே கிரிகரி நம்பினான். ஆனாலும் அந்த நம்பிக்கை ஊசலிட்டுக் கொண்டிருந்தது. அந்தப் போலீஸ்காரன் திடீரென்று குதித்தெழுந்து கூப்பாடு போட்டால் என்ன செய்வது? முன்னொரு தடவை காலராவுக்குப் பலியானவர்கள் தங்கள் சவப்பெட்டிகளிலிருந்து மேலே பாய்ந்து வெளியே ஓடி விட்டார்கள் என்று யாரோ சொல்லக் கேட்டிருப்பதை இப்போது அவன் நினைத்துக் கொண்டான்.

அவனுடைய எண்ணங்கள் அவன் மனைவியை நாடி அடிக்கடி ஓடின. அவள் அதை எப்படி ஏற்றுக் கொண்டிருக்கிறாளோ? சில சமயம் தன் வேலையை விட்டு விட்டு கள்ளத்தனமாக அங்கே போய் மேட்ரோனாவைச் சிறிது நேரம் சந்திக்க வேண்டும் எனும் ஆசை அவனுள் சட்டெனத் தோன்றி மறையும். ஆயினும் இத்தகைய ஆசைத் துடிப்புகளினால் அவன் வெட்கமே அடைந்தான்.

"தீவிரமாக உழைத்து உன்னை நீயே தேய வைத்துக் கொள், தடிப் பெண்ணே! இந்த இடத்தில் நீ நன்றாக

மெலிந்து விடுவாய். அது தான் நல்லது. அது உனது நேர்த்தியான திட்டங்களை எல்லாம் முளையிலேயே கிள்ளி எறிந்து விடும்'' என்று தன் மனசிலேயே அவளை எதிர் நிறுத்திப் பேசிக்கொள்வான் அவன்.

கணவன் என்ற தன்னுடைய அந்தஸ்துக்கு இழிவு தேடி வைக்கும் யோசனைகளைத் தனது மனைவி போற்றிப் பாதுகாக்கிருள் என்று அவன் சதா சந்தேகித்து வந்தான். அவனுடைய சந்தேகங்கள் அவ் விஷயத்தைப் பற்றித் தெளிவாகச் சிந்திக்கும்படி அவனைத் தூண்டுகிற சமயங் களில், அவள் அத்தகைய எண்ணங்களை வளர்ப்பதற்கு நியாயமான காரணம் உண்டு என்பதை அவனும் ஒப்புக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. கேவலமான சிறு வாழ்வுதான் அவன் வாழ்ந்தது. அவ்வித வாழ்க்கை முறை காரணமாக ஒருவர் மூளையில் சகல விதமான எண்ணங்களும் தோன்றுவது இயல்புதான். இந்த ரக வெளிப்படையான ஆராய்ச்சி அவனுடைய சந்தேகங்களை நிச்சயமான நம்பிக்கையாக மாற்றி விடுவதற்குப் போது மானதாக அமைந்தது. நிரந்தரமாக இல்லாவிட்டாலும் தற்காலிகமாகவேனும் அந் நம்பிக்கை நிலைபெற்றிருக்கும். அவன் தனது அடித்தள அறையை விட்டு வெளிப்பட்டு ஏன் இந்த நகர வாயிலில் புகுந்தான் என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொள்வான். அதற்கு உரிய விடையை அவனுல் கண்டுபிடிக்க முடியவில்லை. ஆனுலும் அவனுடைய தீர்க்காலோசனை அவனுள் எங்கோ ஆழமான இடத்தில் இயங்கிக் கொண்டு தானிருக்கும். டாக்டர்களின் அலுவல்களைத் தீவிர கவனத்தோடு அவன் பின்பற்றி வந்தது, அவனுடைய சிந்தனைகள் அவனது வேலைக்குக் குந்தகமாக எழுந்து நிற்காதபடி தடுக் கும் எல்லையாக அமைவது போல் காணப்பட்டது. இங்கே அவர்கள் உழைப்பது போல் மக்கள் தன்னலமற்றுப்

பணி புரிவதை அவன் இதற்கு முன்னர் ஒருபோதும் கண்டதில்லை. டாக்டர்கள், மாணவர்கள் ஆகியோரின் சோர்வு படிந்த முகங்களைப் பார்க்கையில் இங்குள்ள மனிதர்கள் தான் உண்மையாகவே பாடுபட்டு உரிய பணத்தைப் பெறுகிறார்கள் என்று அவன் கருதினான்.

அன்று, நாள் முடிவில், அவனுடைய வேலை தீர்ந்ததும் மிகவும் தளர்வுற்றிருந்த கிரிகரி வாசஸ்தலத்தின் முற்றத்துக்குப் போய், அங்கேயுள்ள மருந்துக் கடை ஜன்னலின் கீழே படுத்துவிட்டான். அவனுக்கு மண்டையிடி ஏற்பட்டிருந்தது; வயிற்றில் கடுமையான வலி அரித்தது. அவனுடைய பாதங்களும் குத்திக் குடைந்தன. எண்ணம், ஆசை எதுவும் இல்லாமல் அவன் புல் தரை மீது நீட்டி நிமிர்ந்து விட்டான். அஸ்தமன சூரியனால் வளமான வர்ண மெருகு பெற்றிருந்த பஞ்சு மேகங்கள் சிலவற்றைப் பார்த்தவாறே கிடந்தான்; சீக்கிரமே அவன் அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்து விட்டான்.

அவன் கனவு கண்டான். டாக்டர் ஒருவர், மிகப் பெரிய அறை ஒன்றில், அவனுக்கும் அவன் மனைவிக்கும் விருந்து அளிக்கிறார். அந்த அறையின் சுவர்கள் அருகே வரிசையாக நாற்காலிகள் இருந்தன. வாசஸ்தலத்தின் நோயாளிகள் எல்லோரும் அந் நாற்காலிகளில் உட்கார்ந்திருக்கிறார்கள். டாக்டரும் மேட்ரோனாவும் அறையின் நடுவே, அமைவான ரஷ்ய நடனம் ஒன்றை ஆடிக் கொண்டிருக்கிறார்கள். அவன் வாத்தியம் வாசிக்கிறான். டாக்டரின் கால்கள் சரியாக வளையவில்லை. அறையைச் சுற்றிச் சுற்றி அவர் மேட்ரோனாவைத் தொடர்ந்து ஆடம்பரமாக ஆசாரத்தோடு ஆடிச் செல்லும் பொழுது, எல்லோர் பார்வைக்கும் அந்த டாக்டர் சதுப்பு நிலத்தில் உள்ள கொக்கு மாதிரியே காட்சி அளிக்கிறார். அதைக் கண்டு

அவன் சிரிக்கிருன். நோயாளிகள் எல்லோரும் விழுந்து விழுந்து சிரிக்கிருர்கள்.

திடீரென்று பழைய போலீஸ்காரன் வாசலில் வந்து நிற்கிருன். அச்சுறுத்தும் முறையில் அவன் அலறுகிருன்:

"ஆகா! நான் செத்துப் போனேன் என்று நீ நினைத்தாய். அப்படித்தானே கிரிகரி? என்னை சவக் கிடங்கில் தள்ளி விட்டு, நீ இங்கே வந்து வாத்தியமா வாசித்துக் கொண்டிருக்கிருய்? நல்லது, என்னோடு வா. உம், எழுந்திரு!"

கிரிகரி வேகமாக எழுந்து உட்கார்ந்தான். அவன் உடல் பூராவும் நடுங்கியது. பயத்தினுல் வேர்வை பொங்கியது. டாக்டர் வாஷென்கோ அவனுக்கு அருகில் உட்கார்ந்திருந்தார்.

"என்ன உதவியாளப்பா நீ! இப்படித் தரையில் கிடந்து தூங்கினுல்; அதுவும் குப்புறப் படுத்து?" என்று அவர் கண்டிக்கும் முறையில் பேசினுர். "உன் வயிற்றில் குளிர்ச்சி ஏற்பட்டு விட்டால், அப்புறம் நீ படுக்கையில் விழ வேண்டியது தான். விஷயம் என்ன என்று நீ உணர்வதற்குள்ளாகவே நீ செத்துப் போனுலும் போகலாம். இது சரிப்படாது, நண்பனே! வாச ஸ்தலத்திற்கு உள்ளேயே உனக்காக ஒரு படுக்கை ஒதுக்கப்பட்டிருக்கிறதே; உன்னிடம் யாரும் சொல்லவில்லையா? உனக்கு வேர்த்துக் கொட்டுகிறதே. உனக்குச் சளி பிடித்து விட்டது. என் கூட வா. நீ குடிப்பதற்கு ஒரு மருந்து தருகிறேன்" என்ருர் அவர்.

"எனக்கு ஒரே சோர்வாக இருந்தது" என்று கிரிகரி முனங்கினுன்.

"அது இன்னும் மோசம் தான். உன்னை நீயே நன்ருகக் கவனித்துக் கொள்ள வேணும். ஊரைச் சுற்றி லும் ஆபத்தாக இருக்கிறது. நீ எங்களுக்கு அவசியம் தேவை, அப்பனே!"

கிரிகரி மௌனமாக அந்த டாக்டரைத் தொடர்ந்து வராந்தா வழியே சென்ருன். அதே மாதிரி பேசாமலே, முதலில் ஒரு கிளாசிலிருந்து ஏதோ ஒரு மருந்தை விழுங் கிஞன். பிறகு வேருெரு கிளாசிலிருந்ததைக் குடித்தான். முகத்தைச் சுளித்து விட்டுத் துப்பிஞன்.

"சரி இப்ப போய் கொஞ்ச நேரம் தூங்கு" என்று சொல்லி விட்டு, டாக்டர் மெலிந்து நீண்டு காணப்பட்ட கால்களை வீசி வீசி நடந்து போஞர்.

அவர் போவதையே கவனித்தான் கிரிகரி. பிறகு சட் டென்று, முகத்தில் பெரும் சிரிப்பு படர, அவன் அவர் பின்ஞல் ஓடிஞன். "நன்றி, டாக்டர்" என்ருன்.

"எதற்காக?" என்று அவர் கேட்டார்.

"உங்களுடைய சிரமத்திற்காகத்தான். நான் என்ஞல் இயன்ற மட்டும் உங்களுக்காகப் பாடுபடுவேன். நீங்கள் நிச்சயமாக நம்பலாம். நீங்கள் எனக்காக இவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டதையும் ... இன்னும் ... வந்து ... நான் தங்களுக்குத் தேவை என்றெல்லாம் சொன்னதையும் நான் மிகவும் போற்றுகிறேன். ரொம்ப ரொம்ப வந்தனம்."

புதியதோர் உவகையில் ஒளிபெற்ற முகத்தோடு நின்ற அந்த உதவியாளனை டாக்டர் ஆச்சரியத்தோடு நோக்கிஞர்.

அவர் முகமும் புன்முறுவல் பெற்றுத் திகழ்ந்தது.

“நீ விசித்திரமான ஆள் தான். ஆனாலும் அது சரியே. உண்மையில் இது மிக அருமையான விஷயம்; நேர்மை யானதும் கூட. போ. உன்னால் இயன்ற மட்டும் உழை. எனக்காக அல்ல. சீக்காளிகளுக்காக. நாம் மக்களை இந்த நோயிலிருந்து பாதுகாக்க வேண்டும். சரியாகச் சொல்வ தானால், அதன் பிடியிலிருந்து அவர்களை நாம் அகற்றியாக வேண்டும். அதைத் தோற்கடிக்க நாம் பெரிதும் பாடு படு வோம். சரிதானே? ஆனால், முதலில் நீ போய் கொஞ்சம் தூங்கு'' என்றார் அவர்.

ஒரு நிமிஷத்துக்குப் பிறகு கிரிகரி படுக்கையில் கிடந்து தூங்க முயன்றான். அவன் வயிற்றில் ஏதோ கதகதப்பாக வும் இதம் அளித்துக் கொண்டும் நிறைந்திருந்த இனிய உணர்வை அவன் அனுபவித்தான். அவனுக்கு மகிழ்ச்சி பிறந்தது. அந்த டாக்டருடன் எளிய வார்த்தைகள் சில பேசி விட்டதற்காக அவன் பெருமை கொண்டான்.

அவற்றை மேட்ரோனா கேட்கவில்லையே என்பது தான் மிக மோசமான விஷயம். இது தான் அவன் தூங்கு வதற்கு முன்பு நினைத்த கடைசி எண்ணமாக அமைந்தது. நிகழ்ந்தது பூராவையும் அவன் அவளிடம் மறுநாள் சொல்லுவான். ஆனால், அவள் அவனை நம்பவா போகிறாள்? சரியான வாயாடி அவள்!

* * * *

மறுநாள் காலையில் தன் மனைவியின் குரல் கேட்டு அவன் விழிப்படைந்தான்.

“தேநீர் குடிக்கப் போவதற்கு நேரம் ஆகிவிட்டது, கிரிகரி'' என்று அவள் சொன்னாள்.

அவன் தலையைத் தூக்கி அவளை நோக்கினான். அவள் அவனைப் பார்த்து புன்னகை புரிந்தாள். அவளுடைய கூந்தல் ஒழுங்காக வாரி விடப்பட்டிருந்தது. அவள் தனது வெண்ணிற உடையில், அதிசயமான சுத்தத்துடனும் புதுமையுடனும் பிரகாசித்தாள்.

அவள் இந்த விதமாகக்காட்சி அளிப்பதைக் காண்பதே மனோரம்மியமாக இருந்தது. ஆனால், அவ் வாசஸ் தலத்தில் உள்ள மற்ற ஆண்கள் பார்வையிலும் அவள் இவ்வாறு தானே தோன்றுவாள் என்ற எண்ணத்தினால் அவன் குழப்பம் அடைந்தான்.

"யாருடைய தேநீரை நான் குடிக்க வேண்டுமாம்? எனக்கு என்று தனியாக டீ இருக்கிறது. அதற்காக நான் ஏன் வேறு இடம் போக வேண்டும்?" என்று அவன் கடு கடுப்பாய் பேசினான்.

"நானும் உன்னோடு வருகிறேன். நாம் இருவரும் சேர்ந்து டீ குடிப்போம்" என்று அவள் சொன்னாள். இனிய மென் நோக்கு நிறைந்த கண்களோடு அவள் அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

கிரிகரி பார்வையைத் திருப்பிக் கொண்டான்; தானும் வருவதாகச் சொன்னான்.

அவள் போன பிறகு, அவன் மறுபடியும் படுத்து விட்டான். அவன் மனம் சிந்திக்கத் தொடங்கியது:

"அவளிடம் என்ன மாறுதல் ஏற்பட்டிருக்கிறது? என்னைத் தன்னோடு டீ குடிக்க அழைப்பது, என்னை அது மாதிரிப் பார்ப்பது— இதெல்லாம் என்ன? ... அவள் மெலிந்து காணப்படுகிறாளே."

அவன் அவளுக்காக வருத்தப்பட்டான். அவளை மகிழ் விக்க ஏதாவது செய்ய வேண்டும் என்று விரும்பினன். தேநீரோடு சாப்பிடுவதற்கென்று ஏதேனும் இனிப்பு தினுசு கள் வாங்கலாம் என்று அவன் நினைத்தான். ஆனல் எழுந்து சுத்தம் செய்து கொண்டிருந்தபோது அவன் அந்த எண்ணத்தை வெறுத்து ஒதுக்கி விட்டான். ஒரு பெண்ணை நாமாகவே பாழ் படுத்துவதில் அர்த்தமே கிடையாது; இனிப்புப் பண்டங்கள் இல்லாமலே அவள் வாழ முடியும்!

சின்னஞ் சிறிய அறை ஒன்றில் இருந்து அவர்கள் தேநீர் பருகினர்கள். அங்கு இரண்டு ஜன்னல்கள் இருந் தன. உதய சூரியனின் பொன்னொளியில் மூழ்கிக்கிடந்த ஒரு வயலைப் பார்க்க அமைந்திருந்தன அவை. ஜன்னலுக்கு அரு காமையில் உள்ள புல்லில் பனி இன்னும் பளபளத்துக் கொண்டிருந்தது. தூரத்தில், காலை நேரத்து இளம்சிவப்புப் பனி மூட்டத்தினூடே, வண்டிப்பாதையை அடையாள மிட்டுக் காட்டுகிற மரங்களின் வரிசையை அவர்கள் காண முடிந்தது. வானம் களங்கமின்றி இருந்தது. ஈரம் படிந்த மண்ணின் வாசனையையும் புல் மணத்தையும் சுமந்து மிதந்த இளம் காற்று சாளரம் வழியாக உள்ளே புகுந்தது.

ஜன்னல்களுக்கு இடையேயிருந்த சுவர் ஓரமாக மேஜை கிடந்தது. கிரிகரி, மேட்ரோனு, மேட்ரோனுவின் சிநேகிதி ஆகிய மூவரும் மேஜை முன் அமர்ந்திருந்தார்கள். மத்திம வயதுடைய அந்த சிநேகிதி நெட்டையாகவும் மெலிந்தும் காணப்பட்டாள். அம்மைத் தழும்பு கிடந்த முகமும், அன்பு நிறைந்த சாம்பல் நிறக் கண்களும் பெற்றி ருந்தாள். **பிலிட்ஸட்டா எகரோவ்ஞ** என்பது அவள் பெயர். கலியாணமாகாதவள் அவள். அவளுடைய தந்தை ஒரு கல்லூரியின் ஆலோசனையாளராகப் பணியாற்றியவர். அவள் எப்பொழுதும் தனது தேநீருக்கு வேண்டிய

தண்ணீரைத் தனக்குச் சொந்தமான ஸமோவாரிலேயே கொதிக்க வைத்துக் கொள்வது வழக்கம். ஏனென்ருல் ஆஸ்பத்திரிப் பாத்திரத்தில் ஒருமிக்கக் கொதிக்க வைக்கப் படுகிற தண்ணீரை உபயோகிப்பது அவளுக்குப் பிடிக்காது. இவ் விஷயங்களை எல்லாம் அவள், கீறல்விழுந்ததுபோன்ற குரலில், ஆர்லோவிடம் அறிவித்தாள். பிறகு, ஜன்னலுக் குப் பக்கத்தில் உட்கார்ந்து 'சுயம்புவான வான மண்டலக் காற்றைக் கொண்டு' சுவாசப்பைகளை நிரப்பிக் கொள்ளும் படி உபசரித்து விட்டு அவள் வெளியே போனுள்.

"நேற்று நீ களைத்துப் போனுயோ?" என்று கிரிகரி தன் மனைவியிடம் கேட்டான்.

"மிகவும் பயங்கரமாக!" என்று அவள் உற்சாகத் துடன் பதிலளித்தாள். "என்னுடைய பாதங்கள் இற்றுப் போகும் என்று எண்ணினேன். எனக்கு ஒரே மயக்கம். அவர்கள் என்னிடம் என்ன சொன்னுர்கள் என்றே என்னுல் புரிந்து கொள்ள முடியவில்லை. நான் அப்படியே விழுந்து மடிந்து போவேனே — சாயங்காலம்வரை தாக்குப் பிடிப்பதே கஷ்டம் — என்று நான் ஒரே அடியாகப் பயந்து விட்டேன். ஓயாமல் நான் பிராத்தனை செய்து கொண்டு இருந்தேன். 'கடவுளே, எனக்கு உதவி பண்ணு' என்று சொல்லிக் கொண்டேயிருந்தேன்."

"உனக்கு பபமாக இருக்கிறதா?"

"இறந்தவர்களைப் பற்றித் தான் எனக்கு பயம். உனக்குத் தெரியுமா?" என்று அவள் அவன் பக்கமாக வளைந்து, பயம் கலந்த குரலில் ரகசியம் பேசினுள்: "அவர் கள் செத்த பிறகும் கூட அசைகிருர்கள். உண்மையாகச் சொல்கிறேன், அவர்கள் அசைகிருர்கள்."

கிரிகரி மறுக்கும் முறையில் லேசாகச் சிரித்து விட்டுச் சொன்னான்: "நானே அதைக் கண்ணால் கண்டேன். நேற்று போலீஸ்காரன் நாஸரோவ் செத்துப் போன பிறகு என் தாடையில் ஒரு குத்து விடுவதற்கு இருந்தான். நான் அவனை சவக்கிடங்கிற்குத் தூக்கிக்கொண்டு போனேன். திடீரென்று அவன் தனது இடது புறத்தால் உந்தினான். நான் குனிந்து தப்பிக் கொள்வதற்குக்கூட நேரம் போத வில்லை. இது உனக்கு எப்படிப்படுகிறது?'' அவன் கொஞ் சம் 'அளந்து விட்டான்'. ஆனால் அது தானாகவே அப்படி வந்தது; அவனாக எண்ணிப் பேசியதில்லை.

எல்லையற்ற பசிய வயல்களையும் நீல வானையும் நோக்கியிருந்த ஜன்னலோடு மிகவும் சுத்தமாக விளங்கிய அந்த அறையில் அமர்ந்து தேநீர் பருகுவதை அவன் ரசித்து மகிழ்ந்தான். அவன் விரும்பிய மற்றுமொரு அம்சமும் உடனிருந்தது. அது தன் மனைவியா, அல்லது தானே தானா என்பதில் அவனுக்கு நிச்சயம் ஏற்படவில்லை. ஆயினும் எல்லாவற்றையும் விட, தனது இயல்பின் சிறப்பான தன்மையை விளம்பரப்படுத்தவே — அன்றைய தினத்தின் தனிநாயகனுக்கப் பிரகாசிக்கவே —அவன் ஆசைப்பட்டான்.

"நான் மனம் வைத்துத் தீவிரமாக உழைக்கத் தொடங்கி விட்டால்,பூமியே அதிர்ந்து விடும்.முதலாவதாக, நீயே பாரு. நான் எனது காரணங்களைச் சொல்கிறேன். இங்கே இருக்கிறவர்கள் — அவர்கள் இந்த உலகத்தைச் சேர்ந்தவர்களே இல்லை.''

அவன் டாக்டரோடு நிகழ்த்திய சம்பாஷணையை அவளுக்குச் சொன்னான். இதிலும் தன்னை அறியாமலே மிகைபடுத்தித் தான் அவன் பேசினான். இது அவனுடைய மனநிலையை முன்னைவிட குஷியான தன்மைக்கு உயர்த்தி விட்டது.

"இரண்டாவது விஷயம், இந்த வேலை தான். இது மிகப் பெரிய வேலை ஆகும். உதாரணமாக, யுத்தம் மாதிரி. ஒரு பக்கம் காலரா. மறுபுறம், நோயாளிகள். யாருக்கு வெற்றி? மூளையைச் செலுத்த வேண்டிய வேலை அது. ஒவ்வொரு விஷயமும் அப்படிப்பட்டது தான். பார்க்கப் போனால், காலரா என்பது என்ன? தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் தான் அது. அப்புறம், நம் திறமையை எல்லாம் சேர்த்துக்கொண்டு அதனுடைய பலவீனமான இடத்திலே ஓங்கிக் குத்துவிட வேண்டியது. டாக்டர் வாஷென்கோ என்னிடம் சொன்னார். 'அதற்காக எங்களுக்குத் தேவையான சரியான ஆள் நீ தான், ஆர்லோவ்' என்றார். 'அதன் பின்னாலேயே போ. அவர்களை என்னிடம் கொண்டுவா.' நல்ல கசப்பு மருந்து கொடுத்துக் குணப் படுத்தி விடுவேன், நோயாளி குணம் அடைந்து விடுவான். அவன் தனது வாழ்நாள் பூராவும் எனக்கும் உனக்கும் நன்றி உள்ளவனாக இருப்பான். ஏனென்றால், அவனைச் சாகாமல் காப்பாற்றியது யார்? நாம் தான்?'' என்றார். கிரிகரி தன் நெஞ்சை நிமிர்த்துக் கொண்டு, ஒளி மிளிரும் கண்களால் தனது மனைவியை நோக்கினான்.

அவள் ஆசையோடு அவனைப் பார்த்துச் சிரித்தாள். அந்தச் சமயத்தில் அவன் பார்ப்பதற்கு மிகுந்த அழகு உடையவனாகத் தென்பட்டான். அவர்களுக்குக் கலியாணம் நிகழ்வதற்கு முன்பெல்லாம் அவள் கண்டு வியந்த கிரிகரி போலவே இப்பொழுதும் தோன்றினான்.

"எங்கள் வார்டிலும் அப்படிப்பட்ட ஆட்கள் இருக்கிறார்கள். அன்பு நிறைந்த உள்ளமும் கடுமையாக உழைக்கும் பண்பும் பெற்றவர்கள். ஒரு டாக்டர் இருக்கிறார்— பருமனான பெரிய மனுஷி. கண்ணாடி அணிந்தவள். மிகவும் நல்ல மனிதர்கள். ஆடம்பரமே கிடையாது. அவர்கள்

நம்மிடம் சொல்கிற விஷயங்களை நாம் எப்பவும் புரிந்து கொள்ள முடியும்.''

"ஆகவே, உனக்குக் கவலை எதுவும் இல்லையே? திருப்திதானே?'' என்று கிரிகரி கேட்டான். அவனுடைய உற்சாகம் இதற்குள் ஓரளவு தணிந்திருந்தது.

"எனக்கா? ஆண்டவனே! நீயே தீர்மானித்துக் கொள்ள முடியுமே. நான் பன்னிரண்டு ரூபிள்கள் பெறுகிறேன். உனக்கு இருபது. இரண்டும் சேர்ந்து, ஒரு மாசத்துக்கு முப்பத்திரண்டு ரூபிள்கள் வருகின்றன. செலவே கிடையாது. காலரா இப்படியே இருந்தால், மாரிக் காலத்திற்குள்ளாக நாம் எவ்வளவு பணம் சேர்த்துவிட முடியும் என்று பாரு. ஆண்டவன் அருள் இருந்தால், நாம் நம்முடைய அந்த அடித்தளத்து இருட்டறையை விட்டு வெளியே வந்துவிட வகை செய்து கொள்ளலாம்.''

"உம்ம். இதுவும் யோசிக்க வேண்டிய விஷயம் தான்'' என்று கிரிகரி சொன்னான். அப்புறம் சிறு தாமதத்திற்குப் பிறகு, ஒரு வித நம்பிக்கை எழுச்சியினால் தூண்டப் பெற்று அவன் தன் மனைவியின் முதுகில் தட்டிக் கொடுத்தான். மேட்ரோனா! வருங் காலத்தில் நமக்கும் நல்ல காலம் பிறக்கும். நீ உன் முகத்தை தொங்கப் போடாமல் இருந்தால் போதும்!'' என்று உற்சாகத்தோடு சொன்னான்.

அவள் மகிழ்ச்சியுற்றாள்.

"நீ மட்டும்...'' என்று ஆரம்பித்தாள் அவள்.

"அதைப்பற்றி ஒரு பேச்சும் வேண்டாம். 'தோலுக்கு ஏற்ற ஊசியை எடு; காலுக்கு ஏற்ற செருப்பைத் தேடு.' நம் வாழ்க்கை மாறிப்போனால் அதுவும் மாறிவிடும்.''

"ஏ கருணையுள்ள கடவுளே, அது மட்டும் அவ்விதமே ஆகுமானால்!"

"இது எதுவும் இப்ப வேண்டாம்."

"கிரிகரி, என் அன்பே!"

அவர்கள் பிரிந்து போகும்போது ஒருவருக்கு மற்றவர் மீது ஏற்பட்டிருந்த புதுரக உணர்ச்சி இருவர் உள்ளத்திலும் நிரம்பி நின்றது. அவர்களுடைய நம்பிக்கை அவர்களை உற்சாகிகளாகவும், துணிச்சல் உடையவர்களாகவும், எலும்புதேய்கிறவரை உழைக்கச் சித்தமானவர்களாகவும் மாற்றி விட்டது.

அடுத்த மூன்று அல்லது நான்கு தினங்களில் அநேக தடவைகள் கிரிகரி அவனது உழைப்பின் வேகத்திற்காகவும் திறமைக்காவும் பாராட்டுதல்கள் பெற்றான். அதே வேளையில் புரோனினும் இன்னும் சில உதவியாளர்களும் அவன் மீது பொறாமை கொண்டு அவனுக்குச் சிறு தீங்குகள் செய்ய முயற்சித்ததையும் அவன் கவனித்தான். விழிப்பு அடைந்தான். அந்தத் தடிமூஞ்சி புரோனின் மீது அவனுக்கு வெறுப்பு ஏற்பட்டது. அதற்கு முன்னர் அவன் புரோனின் கூட சிநேகம் கொண்டாடவும், 'இதயத்தோடு ஒட்டும்' பேச்சுக்கள் பேசவும் விரும்பியது உண்டு. அவனது சகாக்கள் அவனைப் பழிப்பதற்காக எடுத்துக் கொண்ட ஒளிவு மறைவு இல்லாத முயற்சிகளைக் காணக் காண அவனுக்கு மிகுந்த மன வேதனை தான் உண்டாயிற்று.

'அயோக்கியர்கள்' என்று அவன் தனக்குத் தானே சொல்லிக்கொண்டு, பற்களைக் கடித்தான். அவர்களுக்கு பதிலுக்குப் பதில் செய்ய பாடம் கற்பிக்கத் தான் தயங்கப் போவதில்லை என்றும் அவன் உறுதி செய்து கொண்டான்.

அவனுடைய எண்ணம் இயல்பாக அவன் மனைவி பக்கம் திரும்பியது. அவளிடம் அவன் எதையும் பயம் இல்லாமல் சொல்லலாம். தனது வெற்றியைக்கண்டு அவள் பொருமைப் படுவாளோ, அல்லது புரோனின் செய்தது போல் தன்னுடைய பூட்ஸில் கார்பாலிக் ஆஸிடைக் கொட்டி வைப்பாளோ என்று அஞ்ச வேண்டிய அவசியமே கிடையாது.

தொடர்ந்து வந்த தினங்கள் முதல் நாளைப் போலவே வேலை மிகுதியும் பரபரப்பும் நிறைந்தே இருந்தன. எனினும் கிரிகரி முன்போல் சோர்ந்து போகவில்லை. ஏனென்ருல் ஒவ்வொரு நாளும் அவன் தனது சக்தியை மிக்க அறிவுடன் செலவு செய்தான். பலவகை மருந்துகளின் விதம் விதமான மணத்தைப் புரிந்து கொள்ள அவன் கற்றுக் கொண்டான். ஈதர் எனும் மருந்தை அறிந்து கொண்ட பிறகு, அவன் மற்றவர் அறியாதபடி அதை அவ்வப்போது நீண்ட மூச்சிழுத்து உட்கொண்டு வந்தான். பெரிய கிளாஸ் நிறைய வோட்கா மது குடிப்பதின் மூலம் பெறக் கூடிய இன்பத்தை ஏகதேசமாக இதுவும் தந்தது என்பதை அவன் கேட்டிருந்தான். சொல்லப்படுவதை கிரகித்துக் கொள்ளும் வேகம், இரக்க சுபாவம், பேசும் குணம், நோயாளிகளுக்கு உற்சாகமூட்டும் திறமை ஆகிய அவனுடைய பண்புகளின் காரணமாக டாக்டர்களும் மாணவர்களும் அவனை அதிகம் அதிகமாக விரும்பலானுர்கள். இந்தப் புது விதமான வாழ்வின் மூலம் அவன் பெற்ற அனுபவ உணர்வுகள் எல்லாம் சேர்ந்து கிரிகரியின் உள்ளத்தில் அதிசயமான ஓர்வித உயர்வு உணர்ச்சியைத் தூண்டி விட்டன. தான் அசாதாரணமான தன்மைகளுடைய மனிதன் என்று அவன் கருதினுன். மற்ற எல்லோருடைய கவனத்தையும் தன் பக்கம் இழுக்கக்கூடிய ஏதாவதொரு காரியத்தை— ஒவ்வொருவரையும் பிரமிக்க வைக்கும் ஏதேனும் ஒரு

செயலை — செய்ய வேண்டும் எனும் ஆசை அவனுள் பிறந்தது. இது ஏறக்குறைய திடீரென்று தானும் ஒரு மனிதப் பிறவி தான் என்று தானாகவே உணர்ந்து கொள்கிற— ஆனாலும் தனக்கு முற்றிலும் புதிதான அந்த உண்மை பற்றிய சந்தேகங்கள் தன்னுள் வேலை செய்வதினால், தனக்கும் மற்றவர்களுக்கும் அதன் உண்மைத் தன்மையை உணர்ந்த ஒரு வழி தேடித் தவிக்கிற — ஒரு ஜீவனின் தற்சிறப்பு மோகமேயாகும். தற்சிறப்பை வலியுறுத்த வேண்டும் என்கிற அவனுடைய ஆசை சிறிது சிறிதாக, தன்னையே தியாகம் செய்ய உதவும் மகத்தான சாதனையைச் செய்ய வேணும் என்ற தவிப்பாக மாறிவிட்டது.

இந்தவித மனோபாவம் கிரிகரியை அவசியமில்லாமலே ஆபத்துக்களை நாடிச் செல்லும்படி தூண்டியது. உதாரணமாக, ஒரு நாள் அவன் பிறர் உதவிக்காகக் காத்திராமல் மிகவும் பருமனான நோயாளி ஒருவனை படுக்கையிலிருந்து குளிக்கும் இடத்திற்குத் தான் மட்டுமே சுமந்து சென்று, அளவுக்கு அதிகமான சிரமம் ஏற்றுக் கொண்டான். மிகவும் அசிங்கமான நோயாளிகளைக் கவனிக்கும் பொறுப்பை அவனே ஏற்றான்; தொத்து நோய் அபாயம் என்பதை அவன் இகழ்ச்சியாய் கருதினான். மனிதரிடம் வெறுப்பு என்று தோன்றக் கூடிய அளவுக்கு அவன் சகஜ சுபாவத்தோடு மரணத்தை மதித்தான். ஆனால் இவை எல்லாம் அவனுக்குப் போதுமானவையாக அமையவில்லை. மிகப் பெரிதான ஏதாவதொன்றைச் செய்து முடிக்க அவன் ஏங்கினான். இந்த ஏக்கம் வளர்ந்து வளர்ந்து அவனை வதை புரியலாயிற்று; மனம் குலையும் நிலைக்கு உந்தியது. அத்தகைய சந்தர்ப்பங்களில் அவன் தன் உள்ளத்தின் நிலைமையைத் தனது மனைவியிடம் கொட்டினான். ஏனெனில், அவன் பேச்சைக் கேட்பதற்கு வேறு யாரும் இல்லை.

ஒரு நாள் மாலே, அவர்களுடைய வேலே முடிந்து இராச் சாப்பாடு சாப்பிட்டானதும், தம்பதிகள் இருவரும் வயல் வெளிகளில் உலாவச் சென்ருர்கள். வாசஸ்தலம் நகரை விட்டுக் கொஞ்ச தூரம் தள்ளியிருந்த நீண்ட பசிய பள்ளத் தாக்கு ஒன்றில் அமைந்திருந்தது. அதன் ஒரு புறத்தில் மரங்களின் இருண்ட வரிசையும், மற்ெறுரு பக்கம் நகர வாசிகளின் இருப்பிடங்களும் எல்லேயிட்டிருந்தன. வடக்கே வயல் வெளி வெகு தூரம் விரிந்து கிடந்தது. முடிவில் அதன் பச்சை நிறப் பரப்பு அடி வானத்தின் மங்கிய நீல நிறத்தோடு ஒன்று சேர்ந்தது. தெற்கே செங்குத்தான மலேயும் நதியும் காணப்பட்டன. அந்த மலேயின் ஓரமாக ரஸ்தா வளேந்து சென்றது. இலே செறிந்த முதிர்ந்த மரங்கள் பாதையில் இடை யிடையே நின்றன. சூரியன் அஸ்தமித்துக் கொண்டிருந்தது. பழத் தோட்டங்களின் கரும் பச்சை இலேத் தொகுப்புக்கும் மேலாக ஓங்கி நின்ற மாதா கோயில்களின் சிலுவைகள், சூரிய ஒளியின் பொன் கதிர்களே ஏற்றுப் பிரகாசமாய் எதிரொளி வீசி மின்னின. நகரின் வெளிப்புற வீடுகளில் உள்ள ஜன்னல்களும் அஸ்தமன சூரியனின் செவ்வொளி யைப் பிரதிபலித்தன. எங்கோ இசை பயிலும் ஒலி எழுந் தது. கணவாய் ஒன்றில் மண்டி வளர்ந்து நின்ற இளம் மரங்களில் வடிந்த பிசின் நாற்றம் எங்கும் பரவியது. மரங்களின் அழுத்தமான மணம் காற்றில் நிறைந்து நின்றது. மணம் கலந்த காற்றின் கத கதப்பான அலேகள் மிருதுவாக நகர் நோக்கி நகர்ந்தன. விசாலமான வெறும் வயல்களில் இனிமை இருந்தது. அமைதியும் இனிய சோகமும் கலந்த சூழ் நிலே அது.

கிரிகரியும் மேட்ரோனுவும் வயல் வெளிகளில் மௌன மாக நடந்தார்கள். வாச ஸ்தலத்தின் நாற்றங்களுக்குப்

பதிலாக இந்தச் சுத்தமான காற்றைப் பருகுவதில் அவர்கள் ஆனந்தம் அடைந்தார்கள்.

"இந்த இசை எங்கிருந்து வருகிறதோ தெரியவில்லே. நகரிலிருந்தா, அல்லது முகாமிலிருந்தா?'' என்று மேட்ரோனு, சிந்தனேயில் ஆழ்ந்து விட்ட தன் கணவனிடம் கேட்டாள்.

அவன் சிந்தனேயில் லயித்து விடுவதை அவள் விரும்புவதில்லே. அத்தகைய நேரங்களில் அவன் அந்நியனுகவும் அவளே விட்டு விலகிச் செல்பவனுகவும் தோன்றினுன். இப்போதெல்லாம் அவர்கள் அபூர்வமாகத்தான் சந்தித்தார்கள். அப்படிக் கிடைத்த ஒவ்வொரு கணத்தையும் பொன்னுகப் போற்றினுள் அவள்.

"இசையா?'' என்று கேட்டான் கிரிகரி, ஏதோ கனவிலிருந்து விழித்து எழுந்தவன் போல. "அந்த இசை எக்கேடும் கெடட்டும். எனது ஆத்மாவில் ஒலிக்கும் சங்கீதத்தை நீ கேட்க வேண்டும்! அதல்லவா உண்மையான இசை!'' என்றுன்.

"நீ என்ன சொல்கிருய்?'' என்று மேட்ரோனு, தன் கணவனின் முகத்தைக் கவலேயோடு நோக்கியவாறே கேட்டாள்.

"நான்... நான் அறியேன். என் நெஞ்சு தீப்பற்றி எரிகிறது. அது மட்டும் தான் எனக்குத் தெரிகிறது. எனக்கு இடம் தான் தேவை. இடம் தான். எனது பலம் முழுவதையும் சேர்த்து வைத்துச் செயல் புரிவதற்கு உரிய இடம். என்னுள் நிறைந்து கிடக்கிற சக்தியை மிஞ்சிவிடக் கூடியது எதுவுமே இல்லே! உதாரணமாக, இந்தக் காலராவை ஒரு மனிதனுக மாற்றி விட்டால். ராட்சஸ உருவினனுக மாற்றினுல்—நான் அவனுக்குச்

சரியான பூசை கொடுக்க மாட்டேனு என்ன? சாகும் வரை சண்டை! நீ பலசாலி. கிரிகரி ஆர்லோவும் அப்படித் தான். அதனுலே வந்து பார். யார் ஜெயிக்கிருர் என்று பார்த்து விடலாமே! அவனுக்குள்ளே யிருக்கும் உயிரை நான் பிழிந்து எடுத்து விடுவேன். அப்புறம், நானும் கீழே படுத்து உயிரை விட்டு விடுவேன். எல்லோரும் சேர்ந்து என்னை அங்கே வெளியே வயலில் புதைத்து மேலே ஒரு சிலுவையை நாட்டி வைப்பார்கள். 'ரஷ்யாவை காலராவிடமிருந்து காப்பாற்றிய கிரிகரி ஆண்ட்ரீவிச் ஆர்லோவ் இங்கே தூங்குகிருன்' என்று எழுதி வைப்பார்கள். அவ்வளவு தான்."

அவன் பேசிய போது அவனது முகம் பிரகாசித்தது; அவன் கண்களில் ஒளி தெறித்தது.

"என் மாவீர மனிதனே!" என்று மேட்ரோனு முனங்கி, அவனேடு ஒட்டி நெருங்கிக் கொண்டாள்.

"அதனுல் ஏதாவது நன்மை விளையும் என்று நான் கருதினுல், நானே நூறு ஈட்டிகளுக்கு எதிராகப் பாய்ந்து விடுவேன். அது மட்டும் வாழ்வின் தன்மையை எளிதாக மாற்ற முடியும் என்ருல்தான். ஏனெனில் மக்கள் எப்படி இருக்க முடியும் என்பதை நான் ஓரளவு கண்டு விட்டேன். உதாரணமாக, டாக்டர் வாஷென்கோ, அந்த மாணவன் கோக்ரியகோவ். அவர்கள் எப்படி உழைக்கிருர்கள் என்பதை நீ நம்பவே முடியாது. அவர்கள் இன்னும் உயிரோடு இருப்பதே அதிசயம் தான். அவர்கள் அதை எல்லாம் பணத்துக்காகத்தான் செய்கிருர்கள் என்று நீ நினைக்கிருயா? பணத்துக்கென்று யாரும் அப்படிப் பாடுபட மாட்டார்கள். அந்த டாக்டர் அருமையான சிறு குவியல் ஒன்று திரட்டி வைத்திருப்பார். அது தவிர வேறு ஏதாவது

இருந்தாலும் இருக்கலாம். அதைப் பற்றி நீ நிச்சயமாக நம்பலாம். ஆனால், சென்ற தடவை அந்தப் பெரிய டாக்டர் சீக்காகப் படுத்த போது, வாஷெங்கோ ஓய்வு நேரத்துக்கு வீட்டுக்குப் போகாமல் கூட நான்கு நாட்கள் உழைத்தார். அவர்களுக்குப் பணம் பெரிதல்ல. இரக்கம்தான் முக்கியம். மற்றவர்களிடம் இரக்கம். தங்களுக்காக அவர்கள் இரக்கப் படுவதே இல்லை. அவர்கள் யாரிடம் இரக்கம் கொள் கிறார்கள்? எவருக்காகவும் தான். உதாரணமாக, **மிஷ்கா உஸோ**வைக் குறிப்பிடலாம். மிஷ்கா இருக்க வேண்டிய இடம் ஜெயில்தான். அதை எல்லோரும் அறிவார்கள். ஏனென்றால் மிஷ்கா ஒரு திருடன். அதைவிட மோசமான வனைக் கூட இருக்கலாம். இருந்தாலும், மிஷ்கா நல்ல நிலைமை அடைவதற்காக அவர்கள் சிரத்தையோடு பாடு பட்டார்கள். அவன் படுக்கையிலிருந்து எழுந்தவுடனே அவர்கள் ஆனந்தமாகச் சிரித்தார்கள். அத்தகைய ஆனந் தத்தை நானும் அனுபவிக்க ஆசைப்படுகிறேன். நிறைய நிறைய, என்னை மூழ்கடிக்கக் கூடிய அளவு ஆனந்தம். ஏனென்றால், அவர்கள் அப்படி ஆனந்த மிகுதியோடு சிரிப்பதைப் பார்த்துக் கொண்டு அங்கே சும்மா நிற்பது எனக்கு வேதனை தருகிறது. எனது உள்ளும் புறமும் வலி எடுத்து எரிச்சலுறும்படி செய்கிறது. எல்லாம் நாசமாய்ப் போகட்டும்!''

கிரிகரி மறுபடியும் சிந்தனையில் ஆழ்ந்து விட்டான்.

மேட்ரோனா ஒன்றுமே சொல்லவில்லை. எனினும், அவள் இதயம் வேதனையோடு துடித்துக்கொண்டிருந்தது. தனது கணவனின் வேகத்தைக் கண்டு அவள் பயந்து போனாள். அவனுடைய சொற்களின் பின்னால் மறைந்து கிடந்த அவன் ஏக்கத்தின் உக்கிரத்தை அவள் தெளிவாக உணர்ந்தாள். ஆயினும் அந்த ஏக்கத்தை அவளால்

புரிந்து கொள்ள முடிய வில்லை. ஏனெனில் அவள் அதைப் புரிந்து கொள்ள முயற்சிக்கவே இல்லை. அவளுக்கு மிக அருமையானவன், அத்தியாவசியமானவன், அவளுடைய கணவன் தான்; கருத்தில் உருப்பெற்ற வீர நாயகன் எவனுமல்ல.

அவர்கள் கணவாய் ஓரத்திற்கு வந்து அருகு அருகாக அமர்ந்தார்கள். இளம் பர்ச் மரங்களின் சுருண்ட முடிகள் தலை நிமிர்ந்து அவர்களைப் பார்ப்பது போல் நின்றன. கணவாயின் அடிப் புறத்தில் நீல நிற மப்பு கவிந்து கிடந்தது. அதன் ஆழத்திலிருந்து ஈரம், பைன் மர ஊசிகள், பழைய இலைகள் ஆகியவற்றின் ஓர் வகை நாற்றம் மேலெழுந்து வந்தது. அடிக்கடி மென் காற்று தவழ்ந்தது. பர்ச் மரக் கிளைகள் அசைந்தன. சிறிய பர் மரங்களும் அசைந்து ஆடின. கணவாய் முழுவதும் பயந்து நடுங்கிய மெல்லோசை நிரம்பி யிருந்தது. அம் மரங்கள் தங்களுக்கு மிகவும் பிரியமான ஒருவர் தங்கள் நிழலின் பாதுகாப்பில் படுத்து உறங்குவதைக் கவனித்து, அவர் விழித்து விடக் கூடாதே என்று பயந்து மிக மெதுவாகப் பேசி நிற்பது போல் தோன்றியது. நகரத்தில் விளக்குகள் ஒளி வீசிக் கொண்டிருந்தன. பழத் தோட்டங்களின் இருண்ட பின்னணியில் பூத்த ஒளிப் பூக்கள் போல் விளங்கின அவை. ஆர்லோவ் தம்பதிகள் பேசாமலே உட்கார்ந்திருந்தார்கள். அவன் தனது விரல்களினுல் முழங்கால் மீது தட்டிக் கொண்டிருந்தான். அவள் அவனைப் பார்ப்பதும் பெருமூச் செறிவதுமாக இருந்தாள்.

திடீரென்று அவள் தன் கைகளை அவன் கழுத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு, தலையை அவன் மார்பில் பதித்தாள்.

"கிரிகரி, என் செல்வமே, என் அன்பே!" என்று அவள் முணுமுணுத்தாள். "மறுபடியும் நீ எனக்கு எவ்வளவு அற்புதமானவன் ஆகிவிட்டாய், என் மாவீர மனிதனே! நமக்குக் கலியாணமான புதுசில் நாமிருவரும் வாழ்ந்தோமே, அதுபோல் தோன்றுகிறது இதுவும். என் மனம் புண்படும்படியாக நீ எதுவும் பேசுவதில்லை. எப்பொழுதும் என்னோடு பேசிக் கொண்டே இருக்கிறாய்; உன் மனசில் இருப்பதை எல்லாம் என்னிடம் சொல்கிறாய். நீ என்னை அடிப்பதே இல்லை......"

"அதைத்தான் நீ ஆசையோடு எதிர்பார்க்கிறாயாக்கும்? நீ விரும்பினால் நான் உனக்குச் சரியான உதை கொடுக்க முடியும்" என்று அவன் அன்போடு கேலி செய்தான். தனது மனைவி பேரில் ஏற்பட்ட காதலும் கருணையும் கலந்த உணர்வு அலை ஒன்றில் சிக்கியிருந்தான் அவன்.

அவள் கூந்தலை வருடத் தொடங்கினான் அவன். அது மனோகரமான — அவள் ஒரு குழந்தை போலவும் தான் தந்தை போன்றும் ஒரு உணர்வு — தோன்றியது. அவன் மார்பில் தவழ்ந்து, மிருதுவான கதகதப்பான பந்துபோல் சுருண்டுகிடந்த மேட்ரோனா உண்மையாகவே ஒருகுழந்தை மாதிரித் தான் இருந்தாள்.

"என் கண்ணாளா!" என்று முனங்கினாள் அவள்.

அவன் ஆழ்ந்த பெருமூச்சு உயிர்த்தான். அவனுக்கும் அவளுக்கும் புதிதான சொற்கள் தாமாகவே அவன் வாயிலிருந்து ஓடி வந்தன.

"என் சிறு பூனைக்குட்டியே! நீ என்ன தான் சொல்லு. உனக்கு உன் புருஷனைப் போன்ற நண்பன் யாருமே கிடையாது. நீயோ வேறு யாருக்காகவோ கண்வீசிக்கொண்டிருக்கிறாய். நான் சில சமயங்களில் உன்னிடம் கொடுமையாக நடந்துகொண்டால், அதற்குத் துயரம் தான் காரணம்

ஆகும். அங்கே அந்தப் பொந்தில், வெளிச்சத்தையே காணுமல், உண்மையில் மக்கள் எப்படி இருக்கிருர்கள் என்பதை அறிய முடியாமல் வசித்தது தான். நான் அந்தப் பொந்தை விட்டு வெளியே வந்த உடனேயே என் கண்கள் திறந்து விட்டன. ஆனுல் அதற்கு முன்பெல்லாம் நான் குருடாகத் தான் இருந்தேன். யார் என்ன தான் சொன்னு லும், ஒருவனது மனைவி தான் அவனுக்குச் சிறந்த சகா என்பதை இப்பொழுது நான் அறிந்து கொண்டேன். ஏனென்ருல், உன்னிடம் உண்மையைச் சொல்கிறேனே - பெரும்பாலான மக்கள் வெறும் கிருமிகள் தான். அவர்கள் பிறருக்குக் கொப்புளங்களைக்கொடுக்கவே விரும்புகிருர்கள். உதாரணத்துக்கு, புரோனினும் வாஸ்யுகோவும். ஆனுல் அவர்கள் நாசமாய்ப்போகட்டும்... உஷ், ஒன்றும் பேசாதே மேட்ரோனு. நாம் நல்ல நிலைமை அடைவோம். நீ மாத்திரம் தலை நிமிர்ந்து இரு. நாம் யோக்கியமாகவும் புத்திசாலித் தனமாகவும் வாழ்க்கை நடத்தத்தொடங்குவோம். இந்தா பாரு, இது என்ன? என் அப்பாவி குஞ்சே!''

அவள் ஆனந்தக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந் தாள். அவனுடைய கேள்விக்கு அவள் முத்தங்களினுல் பதில் ஈந்தாள்.

"அன்பே!'' என முனங்கி, அவனும் அவளை மாறி மாறி முத்தமிட்டான்.

இப்படியாக இருவரும் ஒருவர் கண்ணீரை மற்றவர் முத்தமிட்டே துடைத்துக் கொண்டார்கள்; கண்ணீரின் கரிப்பை இருவரும் சுவைத்தார்கள். வெகு நேரம் வரையில் கிரிகரி அவனுக்கே புதிதாக ஒலித்த வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

இருட்டியது. நட்சத்திரங்கள் நிறைந்த வானம் காம்பீர்யமான சோகத்தோடு பூமியை நோக்கிக் கொண்டு

இருந்தது. வயல்கள் வானத்தைப் போலவே அமைதியாகத் தோன்றின.

* * *

இருவரும் ஒன்ருகயிருந்து காலை ஆகாரம் சாப்பிடும் வழக்கத்தை அவர்கள் ஏற்படுத்திக் கொண்டார்கள். வயல் வெளியில் அவர்கள் சம்பாஷித்துக் கொண்டதற்கு மறுநாள் காலையில் கிரிகரி வருத்தத்தோடும் தன் உணர்வுடனும் தனது மனைவியின் அறைக்கு வந்து சேர்ந்தான். பெலிட்ஸட்டாவுக்கு உடல் நலமில்லை. ஆகையால் மேட்ரோனு தனியாகத் தான் இருந்தாள். ஒளி பூத்த முகம் திருப்பி அவள் அவனை நோக்கினுள். ஆனுல் உடனடியாக அவள் முகம் வாடிவிட்டது.

"என்ன விஷயம்? உனக்கு உடம்புக்குக் குணமில்லையா?" என்று கேட்டாள் அவள்.

"நான் நன்ருகத்தான் இருக்கிறேன்" என்று உணர்ச்சியற்ற குரலில் சொல்லியபடி அவன் நாற்காலியில் உட்கார்ந்தான்.

"பின்னே என்னவாம்?"

"என்னுல் தூங்கவே முடியவில்லை. சிந்தித்துக் கொண்டே கிடந்தேன். நாம் இருவரும், நீயும் நானும், நேற்று இரவில் கொஞ்சிக் குலாவிய விதம், சரியான செல்லப்பிள்ளைகள் விளையாட்டு மாதிரி தான். அதற்காக நான் இப்பொழுது வெட்கப்படுகிறேன். நமக்கு அது சரிப்படாது, பெண்கள் இருக்கிருர்களே அவர்கள் எப்பொழுது பார்த்தாலும் ஒரு ஆண் பிள்ளையை சுண்டு விரலால் வளைத்து ஆட்டி வைப்பதற்கு உரிய வழிவகைகளைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிருர்கள். ஆனுல் நீ என்னை அப்படிச்செய்யமுடியும் என்று நினைத்துவிடாதே. அதனுல் எவ்விதமான பலனும் விளையாது. நீ என்னைப்

பொறியிலே சிக்கவைக்க முடியாது. உனது தந்திரங்களால் நான் மயங்கிவிடமாட்டேன். இதை நீ மறக்கவேண்டாம்!''

இதை அவன் மிகுந்த அழுத்தத்தோடு, தன் மனைவியை நிமிர்ந்து பார்க்காமலே, சொல்லி முடித்தான். மேட்ரோனு வின் கண்கள் அவன் முகத்திலேயே பதிந்து நின்றன, அவள் உதடுகள் விசித்திரமாகக் கோணியிருந்தன.

''ஓ, நீயும் நானும் நேற்று இரவில் அவ்வளவு நெருக்க மாக இருந்ததற்காக வருத்தப்படுகிருய்; இல்லையா?'' என்று அவள் முணமுணத்தாள். ''என்னை முத்தமிட்டது, காதல் புரிந்தது இவற்றுக்காக வெல்லாம் வருத்தப்படு கிருய்; அப்படித்தானே? நீ இப்படிப் பேசுவதைக் கேட்கவும் எனக்கு எவ்வளவு வேதனை உண்டாகிறது என்பது மட்டும் உனக்குப் புரியுமானுல்! நீ உனது கொடிய வார்த்தைகளால் என் நெஞ்சைப் பிளந்து விடுவாய் என்று தோன்றுகிறது. உனக்கு என்னதான் வேண்டும்? என்னிடம் உனக்கு அலுப்பு ஏற்பட்டு விட்டதா? இப்போ தெல்லாம் என்னை நீ காதலிக்கவில்லையா? அல்லது வேறு என்ன விஷயம்?''

அவள் அவனை சந்தேகத்தோடு கவனித்தாள். கசப்பு உணர்ச்சியும் சண்டைக்கு இழுக்கும் தன்மையும் அவள் குரலில் கலந்து ஒலித்தன.

''இல்லை'' என்று கிரிகரி சங்கடத்தோடு சொன்னுன். ''ஆனுல், மொத்தத்தில் நீயும் நானும் எப்படிப்பட்ட வாழ்க்கை நடத்தினேம் என்பதை நீயே அறிவாய். அதைப் பற்றிய வெறும் நினைப்பே நம் வயிற்றைக்குமட்டுவதற்குப் போதுமானது. இப்போது நாம் அதை விட்டு வெளியேறி யிருக்கிறேம். எனக்குப் பயமாக இருக்கிறது. எல்லாமே திடீரென்று மாறி விட்டது. நான் முற்றிலும் வேருன ஆள் மாதிரித் தோன்றுகிறேன். நீ கூட அப்படித்தான்

இருக்கிருய். இதன் அர்த்தம் என்ன? அடுத்தாற் போல் என்ன நடக்கும்?''

"கடவுள் நினைக்கிறபடி தான், கிரிகரி'' என்று மேட்ரோனு அமைதியாகப் பேசினுள். "ஆனல் நேற்று ராத்திரி அவ்வளவு அன்பாகப் பழகியதற்காக, நீ வருத்தப்பட வேண்டியதில்லை.''

"நல்லது. அந்தப் பேச்சை விடு'' என்று குறுக்கிட்டான் கிரிகரி. "நாம் இரண்டு பேரும் சேர்ந்து வாழ்வதால் நன்மை ஏதாவது வந்து விடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. பழைய வாழ்க்கை இனிமை நிறைந்ததாக இருந்து விடவில்லைதான். ஆனுலும் இந்தப் புது வாழ்வுகூட எனக்கு ஒத்து வரவில்லை. நான் குடிக்கா விட்டாலும், உன்னை அடித்து ஏசாவிடினும்...''

அவள் வெறி கலந்த சிறு சிரிப்பு சிதறினுள். "அவற்றில் எதையும் செய்வதற்கு உனக்கு இப்போதெல்லாம் நேரமே கிடைப்பதில்லை'' என்ருள்.

"குடிப்பதற்கு வேண்டிய நேரத்தை நான் எப்பொழுது வேண்டுமானுலும் தேடிக் கொள்ள முடியும் என்று சொல்லிப் புன்னகை புரிந்தான் அவள் கணவன். "ஆனல் நான் குடிக்க விரும்பவில்லை. அதுதான் அதிசயம். ஆயினும், எண்ணிப் பார்க்கும் பொழுது, நான் வெட்கப் படுகிறேனு; இல்லை, பயப்படுகிறேனு என்பது எனக்கே தெரியவில்லை.'' அவன் தன் தலையை பின்புறம் சாய்த்துக் கொண்டு சிந்தனையில் ஈடுபட்டு விட்டான்.

"உனக்கு என்ன கோளாறு ஏற்பட்டிருக்கிறது என்பதை கடவுள் தான் அறிவார்'' என்று நீண்ட பெருமூச்சுடன் கூறினுள் மேட்ரோனு. "நாம் கடுமையாக உழைத்த போதிலும், இங்கு நாம் வாழ்வது நல்ல வாழ்க்கையே

ஆகும். டாக்டர்கள் உன்னை நேசிக்கிறார்கள். செய்யக் கூடாததை எதையும் நீ செய்வதில்லை. உனக்கு வேறு என்ன தான் வேண்டும்? மிகவும் அமைதியற்ற பிறவியாக இருக் கிறாயே நீ!''

"அது தான் உண்மை. நான் அமைதியற்றவன். இரவு பூராவும் நான் யோசித்துக் கொண்டே இருந்தேன். எல் லோரும் சமம் என்று பியோட்டர் ஐவனேவிச் சொல்கிறார். நான் மட்டும் மற்றவர்களைப் போல இல்லையா? ஆனால் டாக்டர் வாஷென்கோ என்னை விட உயர்ந்தவர். பியோட்டர் ஐவனேவிச்சும் அப்படித் தான். இன்னும் பல பேர் கூட, தெளிவாகச் சொல்வதானால், அவர்கள் சமமானவர்கள் அல்ல. நான் அவர்களோடு சமமானவன் இல்லை. அது எனக்கே தெரிகிறது. அவர்கள் மிஷ்கா உஸோவை குணப்படுத்தினார்கள். அதற்காக சந்தோஷப் பட்டார்கள். அது போன்ற ஒரு விஷயத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஒருவன் குணமடைந்து விட்டான் என்பதற்காக இவர்கள் ஏன் சந்தோஷப்பட வேண்டும்? உண்மையைச் சொல்லப்போனால், அவன் வாழ்கிற வாழ்க்கை காலரா இழுப்புகளை விட மோசமானது. இதை அவர்கள் அறிவார்கள். இருந் தாலும் மகிழ்ச்சி அடைகிறார்கள். அவர்கள் அனுபவிக்கிற மகிழ்ச்சியை நானும் பெற வேண்டும் என்று ஆசைப்படு கிறேன். ஆனால், என்னால் முடியவில்லை. ஏனெனில், அதை அடியொட்ட ஆராய்கிற போது அப்படி சந்தோஷிப் பதற்குஅதில் என்ன இருக்கிறது?''

"ஆனால் அவர்கள் மக்களுக்காகத் துயரப்படுகிறார்கள்'' என்று மேட்ரோனா மறுத்துப் பேசினாள். "எங்கள் வார்டில் கூட, ஒரு பெண் குணம் அடையத் தொடங்கியதும் என்ன நடைபெறுகிறது என்பதை நீ பார்க்கவேண்டும்! அவள் ஏழையாக இருந்தால், அவளை வீட்டுக்கு அனுப்பி

வைக்கிற போது அவர்கள் பணம், மருந்து, உபதேசம் எல்லாம் அளிக்கிறார்கள். அதைப் பார்க்கிற நமக்கு அழ வேண்டும் போலிருக்கிறது. அவர்கள் எவ்வளவு நல்லவர்களாக இருக்கிறார்கள்.''

“அழவா? அது எனக்கு ஆச்சரியம் அளிக்கிறது. அவ்வளவு தான்'' என்றான் கிரிகரி. அவன் தன் தோள்களைக் குலுக்கினான்; தலையைச் சொரிந்தான்; தெளிவில்லாமல் தன் மனைவியை நோக்கினான்.

திடீரென்று பெற்று விட்ட வாக்கு வன்மையோடு அவள் பேசத் தொடங்கினாள். மக்களிடம் அனுதாபம் காட்ட வேண்டியது அவசியம் என்று அவனுக்கு உணர்த்த விரும்பினாள். அவள் அவன் பக்கமாக சரிந்து, தனது மென்மையான பார்வையை அவனது முகத்தில் பதித்தவாறே, மக்களைப் பற்றியும், அவர்களுடைய வாழ்வின் கொடுமைகளைப் பற்றியும் அவள் பேசினாள்.

அவன் அவளையே விழித்துப்பார்த்துக் கொண்டிருந்தான். “இவள் நன்றாகப் பேசுகிறாளே! இவ் வார்த்தைகளை எல்லாம் இவள் எங்கிருந்து பெற்றாள்?'' என்று அவன் நினைத்தான்.

“நீ கூட அவர்களுக்காக அனுதாபப்படுகிறாய். உன்னிடம் பலம் இருக்குமானால் காலராவின் உயிரைப் பிழிந்து எடுத்து விட முடியும் என்று நீ சொல்லவில்லையா? ஆனால் நீ ஏன் அப்படிச் செய்ய வேண்டும்? காலரா வந்த பிறகு தானே உன்னுடைய வாழ்க்கை உயர்நிலை அடைந்திருக்கிறது!''

கிரிகரி உரக்கச் சிரித்தான்.

“அது உண்மை தான். நிலைமை முன்னைவிட நன்றாகத் தான் இருக்கிறது. எல்லாம் நாசமாகட்டும்! ஜனங்கள்

சாவதும், அதன் மூலமாக நான் நல்ல நிலை அடைந்து கொண்டிருப்பதும்! அது தான் வாழ்க்கை!''

சிரித்துக் கொண்டே எழுந்து அவன் வேலைக்குப் போனுன். தாழ்வாரத்தில் நடந்து போகிற பொழுதே, மேட்ரோனுவின் பேச்சை வேறு எவரும் கேட்காதது துரதிர்ஷ்டம் தான் என்று அவன் எண்ணினுன். "அவள் பேசியது அழகான பேச்சு. அவள் பெண்தான். ஆயினும் அவளும் ஒன்றிரண்டு விஷயங்களை அறிந்து வைத்திருக்கிருள்.'' நோயாளிகளின் முனகல்களும் கடுமையான மூச்சு வாங்குதல்களும் கலந்து எழுந்து வந்த ஆண்கள் வார்டினுள் புகும் பொழுது அவன் இனிமையான மனநிலைமையோடு விளங்கினுன்.

வரவர தான் தனது கணவனுக்கு முக்கியமானவளாக மாறி வருவதை மேட்ரோனு உணர்ந்தாள். அதை உறுதிப்படுத்தும் முறையில் அவள் தன்னுல் இயன்ற அனைத்தையும் செய்யலானுள். அவள் நடத்திய சுறுசுறுப்பான சக்தி மிகுந்த வாழ்க்கை தன்னைப் பற்றித் தானே உயர்வாக மதிக்கும்படி தூண்டியது. சிந்தித்து விஷயங்களை எடை போட்டு மதிப்பிடும் சுபாவம் பெற்றவள் அல்ல அவள். என்றுலும், அடித்தள அறையில் அவள் வாழ்ந்த நிலையை, முழுநேரமும் புருஷனுக்குப் பணிவிடை செய்தும் தங்கள் சிறு குடும்பத்தில் அக்கறை காட்டியும் வாழ்ந்த வாழ்க்கையை அவள் நினைத்துப் பார்க்கும் வேளைகளில், தனது இறந்த கால வாழ்வை நிகழ்கால வாழ்க்கையுடன் ஒப்பிட்டுப் பாராமல் இருக்க முடியாது அவளால். கொஞ்சம் கொஞ்சமாக, அந்தப் பொந்தில் அவர்கள் வாழ்க்கை நடத்தியதன் சோக நினைவு அவள் மனதை விட்டு மங்கி மறைந்தது. வாசஸ்தலத்தில் உள்ள அதிகாரிகள் அவளுடைய திறமையையும் உழைப்பையும் மெச்சி அவளிடம் அன்பு காட்டினுர்கள். ஒவ்வொருவரும்

அவளிடம் பரிவு காட்டி அவளையும் மனிதப் பிறவியாக மதித்து நடந்தனர். இத்தகைய அனுபவத்தை அவள் முன்பு எப்பொழுதுமே அறிந்ததில்லை. இது அவளை மேலும் உழைப்பதில் பெருமுயற்சி கொள்ளத் தூண்டியது.

ஒரு தடவை, இரவு வேலை உழைப்பு நேரத்தில், பருமனுன டாக்டர் அம்மாள் அவளிடம் அவளுடைய முந்திய வாழ்க்கை பற்றி விசாரித்தாள். மேட்ரோனுவும் மனமிசைந்து ஒளிவு மறைவு இல்லாமல் அனைத்தையும் அவளிடம் சொன்னுள். திடீரென்று அவள் பேச்சை நிறுத்தி விட்டு லேசாகச் சிரித்தாள்.

"எதை எண்ணிச் சிரிக்கிருய்?'' என்று டாக்டர் அம்மாள் கேட்டாள்.

"விசேஷமாக எதுவுமில்லை. ஆனுல் அது மோசமான வாழ்க்கை முறை தான். எனினும்—உங்களால் நம்ப முடிகிறதா?—இதை நான் என்றுமே உணர்ந்ததில்லை. அதாவது இதோ இந்த நிமிஷம் வரை.''

இவ்விதம் தனது இறந்த காலத்தைப் பற்றி நினைத்துப் பார்த்ததிலிருந்து, மேட்ரோனு தன் கணவன் மீது விசித்திரமான ஒரு மனப்பண்பை வளர்க்கத் தொடங்கினுள். எப்பொழுதும் போலவே அவள் அவனைக் காதலித்தாள். பெண்மைக்கே உரிய சுவாபத்தோடு கண் மூடித்தனமான அன்பை அவனிடம் செலுத்தினுள். ஆயினும் கிரிகரி தனக்கு எதற்காகவோ கடமைப்பட்டிருப்பது போல் அவளுக்குத் தோன்றியது. சில சமயங்களில் அவனேடு சம்பாஷிக்கையில் அவள் ஆதரவு காட்டும் குரலில் பேசலானுள். ஏனெனில் அவளுடைய அமைதியற்ற கண்டனப் பேச்சுக்கள் அவள் உள்ளத்தில் இரக்கத்தை வளர்த்தது. கிரிகரி தன்னிலை அடைவான்; அவன் அனுபவிக்கும் துயரங்கள் ஒடுங்கி விடும் என்று அவள் நம்பிய போதிலும்,

தானும் தனது கணவனும் சேர்ந்து இனி அமைதியான வாழ்வு வாழ்வது சாத்தியம் தானு என்ற சந்தேகம் அவள் உள்ளத்தில் தலை தூக்கிய சந்தர்ப்பங்களும் இருந்தன.

அவர்கள் ஒருவரை ஒருவர் உணர்ந்து, கண்டுகொள்ள, விதி இருந்தது. இளமையும் உறுதியும் உழைப்புத்திறனும் பெற்றிருந்த அவ் இருவரும் பயங்கரமான அரைப்பட்டினி நிலைமையிலேயே, உணவுக்காகப் பாடுபட வேண்டிய நித்தியப் போராட்டத்தில் ஈடுபட்டே, தங்கள் வாழ்க்கையைக் கழித்திருக்கக் கூடும். ஆனல், 'தன் நெஞ்சில் இருக்கும் அமைதியின்மை' என்று கிரிகரி குறிப்பிட்ட ஏதோ ஒன்று நித்தியச் சுழற்சியோடு ஒத்துப்போகும்படி அவனை விட்டு வைக்கவில்லை.

* * *

செப்டம்பர் மாதத்தில் ஒரு நாள், இருண்ட காலை வேளையில், வாசஸ்தலத்தின் முற்றத்தில் வண்டி வந்து நின்றது. அதனுள்ளிருந்து வர்ணக் கறைகள் படிந்த சிறுவன் ஒருவனை புரோனின் வெளியே தூக்கினுன். கன்றிப் போய் மெலிந்து தோன்றிய பையனுக்கு மூச்சு வருகிறதோ இல்லையோ என்ற நிலைமை...

நோயாளி எங்கிருந்து வருகிருன் என்று கேட்டதும், வண்டியோட்டி சொன்னுன்: "மோக்ரி தெருவில் உள்ள பெடுன்னிக்கோவ் வீட்டிலிருந்து மற்றும் ஒருவன்."

"ஸென்கா!" என்று துயரத்தோடு கிரிகரி கத்தினுன். "ஏ எளிய நாய்க்குட்டியே! ஸென்கா, என்னை உனக்குத் தெரிகிறதா?"

ஆர்லோவைப் பார்ப்பதற்காகத் தன் விழிகளை மெதுவாக சுழற்றிய ஸென்கா "ஆமாம்" என்று சிரமத்தோடு சொன்னுன். ஆர்லோவ் ஸ்ட்ரெச்சரின் தலைப்புறத்தைப் பற்றியவாறு அவனுக்கு மேலே குனிந்திருந்தான்.

"எவ்வளவு துடிப்பு மிகுந்த விட்டில் இவன்! இது உனக்கு எப்படித் தான் ஏற்பட்டதோ? "என்றான் கிரிகரி. நோயின் கோரப் பிடிப்பில் சிக்கித் தவித்த குழந்தையின் தோற்றத்தினால் அவன் விசேஷமாக பாதிக்கப்பட்டிருந் தான். அவன் வேதனையோடு தலையை ஆட்டிக் கொண்டு நின்றபோது, அவனுடைய உள்ளத்தில் முட்டிக் குழம்பிய உணர்ச்சிகள் எல்லாம் ஒற்றைக் கேள்வியாகத் திரண்டன:

"ஒரு குழந்தை ஏன் இந்த நோயை அடைய வேண் டும்?"

ஸென்கா நடுங்கினான். எதுவும் பேசவில்லை.

அவர்கள் அவனைப் படுக்கையில் போட்டார்கள். வான வில்லின் வர்ண ஜாலமெல்லாம் குழம்பிக் கிடந்த அவனுடைய கந்தல் உடையை கழற்றத் தொடங்கினார்கள்.

"எனக்குக் குளிர்கிறதே" என்றான் ஸென்கா.

"இப்பொழுது உன்னை வெந்நீரில் குளிப்பாட்டி, உனக்குக் குணம் அளிக்கப் போகிறோம்" என்று கிரிகரி சொன்னான்.

ஸென்கா ரகசியக் குரலில் முனங்கினான்: "நீங்கள் என்னை குணப்படுத்த முடியாது. கிரிகரி மாமா, கொஞ்சம் குனியேன்! ... உன் காதை இப்படிக் கொண்டு வா... வாத் தியத்தை நான் திருடி விட்டேன்... அது மரக் கொட்டகை யில் இருக்கிறது... மூன்று நாட்களுக்கு முந்தி தான் முதன் முதலாக நான் அதைத் தொட்டேன்... அதாவது, நான் அதைத் திருடியதற்குப் பிறகு... அது அற்புதமான பொருள். அதை நான் ஒளித்து வைத்தேன்...அப்பதான்... எனக்கு வயிற்று நோவு வந்தது. தெரிகிறதா? ஏனென்றால், நான் பாபம் செய்து விட்டேன்... படிக்கட்டின் கீழே சுவரில் அது தொங்குகிறது... அதற்கு முன்னால் நான்

கொஞ்சம் மரக்கட்டைகளை வைத்து மறைத்திருக்கிறேன். அதைத் திருப்பிக்கொடுத்து விடு, கிரிகரி மாமா. வாத்தியக் காரனுக்கு ஒரு சகோதரி இருக்கிருள்... அவள் அதைக் கேட்டாள்... அதை அவளுக்கே கொடுத்து விடு.''

அவன் பெரிதாக அரற்றினுன். நோயின் இழுப்புகள் அவனை வாட்டின.

அவனைக் காப்பாற்றுவதற்காக, சாத்தியமான சகல முறைகளையும் கையாண்டு பார்த்தார்கள். ஸென்காவின் போஷாக்கு இல்லாத உடலில் உயிர் தெம்புடன் பற்றி நிற்க இயலாமல் போய் விட்டது. சாயங்காலம் கிரிகரி அவனை சவக்கிடங்கிற்கு எடுத்துச் சென்ருன். தனக்கே யாரோ பெருத்த கேடு விளைவித்து விட்டதுபோல் அவன் உணர்ந் தான்.

சவக்கிடங்கில் அந்தச் சிறுவனின் அங்கங்களை நீட்டி நேர்படுத்த கிரிகரி முயற்சி செய்தான். முடியவில்லை.அவன் நிலை குலைந்து, மனம் ஒடிந்து, முன்பு மிகுந்த துடிப்போடு வாழ்ந்த சிறுவனின் முறுகித் திருகிய உடலின் சித்திரத்தை மனசில் சுமந்தவாறே சென்ருன்.

சாவின் முன்னிலையில் தான் பலமற்றவன் என்ற உண்மை உணர்வு அவனது பலத்தைப் பறித்து விட்டது. ஸென்காவை அவன் எவ்வளவு அக்கறையோடு பராமரித் தான்! டாக்டர்கள் தான் அவனுக்காக எவ்வளவு தீவிர மாகப் பாடுபட்டார்கள்! அப்படியிருந்தும் அவன் செத்துப்போனுன். இவ்விஷயம் கிரிகரியின் உள்ளத்தைத் துயரால் நிரப்பியது. என்ருவது ஒரு நாள் அந்த வியாதி அவனையும் பற்றிக் கொள்ளும். அவனை முண்டும் முடிச்சு மாக மாற்றிவிடும். அதோடு எல்லாம் முடிந்து போகும். அவன் பயந்து விட்டான். தனிமை அவனைக் கவ்விக் கொண்டது. இதை எல்லாம் பற்றி அறிவுள்ள எவராது

ஒருவருடன் சம்பாஷிக்க முடியுமானால்! மாணவர்களில் ஒருவனுடன் பேசவேண்டும் என்று அவன் அநேக தடவைகள் முயன்றது உண்டு. ஆனால் தத்துவ விசாரம் செய்து கொண்டிருக்க அவர்களில் யாருக்குமே நேரம் இல்லை. ஆகவே தன் மனைவியைத் தேடிச் சென்று அவளு டன் பேசுவது தவிர வேறெதுவும் செய்வதற்கில்லை. அவன் வருத்தத்தோடு முகம் வாடித் தொங்க அவளிடம் சென்றான்.

அவள் தனது அறையின் ஒரு மூலையிலிருந்து தன் உடலை சுத்தம் செய்து கொண்டிருந்தாள். மேஜை மீது ஸமோவார் கொதித்துக் கொண்டிருந்தது. அதிலிருந்து எழுந்த இரைச்சலும் ஆவியும் அறை பூராவும் பரவி யிருந்தன.

கிரிகரி ஒன்றும் பேசாமல் உட்கார்ந்து, தன் மனைவி யின் மென்மையான தோள்களையே பார்த்துக் கொண்டி ருந்தான். ஸமோவார் களகள ஒலி எழுப்பியது. தண்ணீர் தெறித்துச் சிதறியது. மேட்ரோனா தும்மினாள். தாழ் வாரத்தில் அங்குமிங்கும் நடந்தவர்களின் காலடி ஓசை கேட்டது. காதினால் கேட்டே யார் யாருடைய காலடிச் சத்தம் என்று ஊகிக்க முயன்றான் கிரிகரி.

மேட்ரோனாவின் தோள்களும், வலிப்பில் கிடந்து அவதியுற்ற ஸென்காவின் தோள்களைப் போலவே, குளிர்ந்து ஈரப்பிசுபிசுப்பு உடையதாக மாறுவது போல் திடீரென்று தோன்றியது அவனுக்கு. அதனால் அவன் நடுங்கினான்.

"ஸென்கா செத்துப்போனான்" என்று மந்தமான குரலில் அவன் அறிவித்தான்.

"ஸென்காவா! ஆண்டவன் அவன் ஆத்மாவுக்கு அமைதி அளிக்கட்டும்" என்று மேட்ரோனா பக்தியோடு

சொன்னாள். அப்புறம் அவள் தூ-தூ என்று துப்பத் தொடங்கினாள். சோப்புத் தண்ணீர் அவள் வாய்க்குள் போய் விட்டது தான் காரணம்.

"ஐயோ பாவம்!" என்று கிரிகரி பெருமூச்சுவிட்டான்.

"அவன் ஒரு பிசாசுப் பயலாக இருந்தான்."

"இப்பொழுது அவன் செத்துப் போனான். அவன் எப்படி இருந்தான், அல்லது எப்படி இல்லை என்று நீ சொல்லவேண்டாம். அவன் செத்து விட்டது ரொம்பவும் பரிதாபத்துக்குரிய விஷயம். அவன் சுறுசுறுப்பானவன். அந்த வாத்தியம், இப்போது—அஹஹ்...ஹூம்...சுறு சுறுப்பான சின்னப்பையன். சிலசமயம் நான் அவனைக் கவனிக்கையில், நானே அவனை ஏன் என்னுடன் தொழில் பழகுகிறவனாகச் சேர்த்துக் கொள்ளக் கூடாது என்று எண்ணியது உண்டு. அனாதை அவன். அவனை நமக்கு நன்கு பிடித்துவிடும். அவனும் நமக்கு ஒரு மகன் மாதிரி இருந்திருப்பான். நீ திடகாத்திரமான பலசாலிப் பெண் தான். ஆயினும் நீ பிள்ளை எதுவும் பெறவில்லை. ஒரு குழந்தை பெற்றாய். அதோடு சரி. ரொம்ப மோசம் தான். நம்மைச் சுற்றிலும் சில சின்னஞ்சிறுசுகள் வளைய வந்து கொண்டிருந்தால், வாழ்க்கை இவ்வளவு வெறுமை யாக இராது. இந்த நிலையில் நாம் எதற்காக உழைக் கிறோம்? நம் வயிற்றை ரொப்பிக் கொள்வதற்காகத்தான். அது எதற்காக? மேலும் உழைத்துக் கொண்டே இருப்ப தற்காக. இப்படி இந்தப் பைத்தியக்காரச் சக்கரம் சுற்றிச் சுழல்கிறது. நமக்குக் குழந்தைகள் இருந்தால், நிலைமை வேறு விதமாக மாறியிருக்கும்."

அவன் தலையைத் தொங்கப் போட்டவாறே பேசினான். அவனுடைய குரல் வருத்தம் தோய்ந்து, குறை கூறும் தன்மையில் ஒலித்தது. அவன் முன்னால் நின்ற

மேட்ரோனுவின் முகம் அவனது பேச்சைக் கேட்கக்கேட்க மிக மிக வெளிறியது.

"நானும் ஆரோக்கியமாக இருக்கிறேன். நீயும் ஆரோக்கியத்தோடு இருக்கிருய். இருந்தாலும் நமக்குக் குழந்தைகள் இல்லை" என்று தொடர்ந்தான் அவன். "அது ஏன்? இதைப் பற்றி நான் எண்ணிக் கொண்டே யிருக்கிறேன். இது தான் என்னைக் குடிக்கும்படி தூண்டுகிறது."

"அது பொய்" என்று மேட்ரோனு உரத்துக் கூறினுள். "அது வெறும் பொய்! இது மாதிரி மோசமான பேச்சை என்னிடம் பேசத் துணியாதே! தெரிகிறதா! பேசத்துணியாதே! நீ சும்மா குடிக்கவேணும் என்பதற்காகவே குடிக்கிருய். உன்னையே உன்னுல் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அதனுல் தான். நீ சொல்வது பொய்."

கிரிகரி பிரமித்துப் போனுன். தனது மனைவியை நன்ருகப் பார்ப்பதற்காக அவன் நாற்காலியில் பின்னுக்குச் சாய்ந்தான். அது அவளே தான் என அவனுல் நம்பமுடியவில்லை. இதற்கு முன்னர் அவளை இத்தகைய கோபாவேசத்தோடு அவன் கண்டதேயில்லை. அதற்கு முன்பு அவள் என்றுமே இதுபோல் தகிக்கும் வெறுப்புடன் அவனை நோக்கியதுமில்லை; இத்தனை வேகத்துடன் பேசியதுமில்லை.

"அப்புறம்?" என்று கிரிகரி கிண்டலாக இழுத்தான். அவன் நாற்காலியின் விளிம்பைத் தனது இரு கைகளாலும் அழுத்தமாகப் பற்றிக் கொண்டு உட்கார்ந்திருந்தான். "அப்புறம்? நீ வெறென்ன சொல்ல வேண்டும்?" என்ருன்.

"எவ்வளவோ! நீ அந்தப் பேச்சைப் பேசாமல் இருந்தால், நான் இதைச் சொல்லியிருக்கவே மாட்டேன். உனக்கு நான் பிள்ளை பெற்றுத் தரவில்லை, இல்லையா?

இல்லை தான். இனி நான் பெறப்போவதுமில்லை. என்ஞல் பெறமுடியாது. என்றைக்குமே எனக்குப் பிள்ளை கிடையாது.'' அவளுடைய கூச்சல் அழுகையில் ஒடுங்கிவிட்டது.

“கத்தாதே!'' என்ருன் அவள் கணவன்.

“நான் ஏன் பிள்ளை பெறமாட்டேன்? நீ என்னை எப்படி அடிக்கடி அடித்தாய் என்ற நினைவு உனக்கு இருக்கிறதா? என் அடிவயிற்றில் நீ எத்தனை தடவைகள் உதைத்திருக்கிருய்? அதை எல்லாம் எண்ணிப் பாரு! எப்படி என்னை உதைத்துக் குத்தினுய் என்பது உனக்கு நினைவிருக்கிறதா? உனது அடி மிதி இவற்றின் காரணமாக நான் எவ்வளவு ரத்தம் சிந்தியிருக்கிறேன் என்று உனக்குத் தெரியுமா? எனது இரவு உடை முழுக்க முழுக்க நனைந்து போகுமே. என் ஆசைக் கணவனே! அதனுல் தான் நான் உனக்குக் குழந்தை எதுவும் பெற்றுத் தர வில்லை. என் மூஞ்சியில் அறைந்து பேச உனக்கு எவ்வளவு தைரியம்? உன்னுடைய இந்த மூஞ்சியை என் முன்னுல் காட்டுவதற்கே நீ வெட்கப்பட வேண்டும். நீ ஒரு கொலைகாரன். உண்மையில் நீ அப்படித்தான். உன் சொந்தக் குழந்தைகளையே நீ கொன்ருய். இப்பொழுது ஒரு குழந்தை கூட இல்லை என்பதற்காக என்னைக் குற்றம் சாட்டுகிருய். எல்லாவற்றையும் நான் பொறுத்திருந்தேன். எல்லாவற்றுக்காகவும் நான் உன்னை மன்னித்திருந்தேன். ஆனுல் எனது உயிர் உள்ளவரையில், உன்னுடைய இவ் வார்த்தைகளை மட்டும் நான் மன்னிக்கவே மாட்டேன். நான் சாகிற நாள் வரும் வரை அவற்றை நினைத்துக் கொண்டிருப்பேன். நீ தான் குற்றத்துக்குப் பொறுப்பு. ஏனென்ருல் நீ கொடுத்த உதைகள் தான் மூலகாரணம் என்பதை உண்மையாகவே நீ தெரிந்து கொள்ளவில்லையா? எனக்குக் குழந்தைகள் வேண்டும் என்று ஆசைப்படாமலிருக்க நான் என்ன மற்றப் பெண் பிள்ளைகளிலிருந்து

மாறுபட்டவளா? ஏ கொலேகாரா! என் வயிற்றிலிருந்த சிசுவை உன் அடிகளிலிருந்து காப்பாற்றும்படி கடவுளைக் கெஞ்சிக் கேட்டவாறே நான் எத்தனை இரவுகள் கண் விழித்துக் கிடந்தேன் தெரியுமா? மற்றவர்களுடைய குழந்தைகளைப் பார்க்கையில் நான் பொறாமையினால் திக்கு முக்காடிப் போவேன்; எனக்காக நானே அனுதாபமும் கொள்வேன். பரிசுத்த கன்னியே! ஒரு குழந்தைக்காக நான் எப்படி ஏங்கினேன்! ஸென்காவை நான் மற்றவர் களுக்குத் தெரியாமல், கொஞ்சுவது வழக்கம்...நான்...ஒரு மலடியாம்! அட, கருணையுள்ள கடவுளே!''

அவள் மூச்சு வாங்குவதற்காக நிறுத்தினாள், வார்த் தைகள் அவள் வாயிலிருந்து இசைவில்லாமல் புரண்டு வந்தன. அவள் முகம் விகாரமாக விளங்கியது. அவள் தேகம் நடுங்கிக் கொண்டிருந்தது. அவள் கைகளால் தன் மார்பை இறுகப்பற்றி நின்றாள். அழுகை அவள் தொண் டையை அடைத்தது. கிரிகரி முகம் வெளுத்து, மனம் குழம்பி, அதுவரை எப்பொழுதுமே அவன் கண்டிராத வகையில் காட்சி அளித்த அந்தப் பெண்ணையே விழித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அவளிடம் பயம் ஏற்பட்டிருந்தது. அவள் தன்மீது பாய்ந்து தனது குரல்வளையை நெரித்து விடுவாளோ என்று அவன் பயந் தான். வஞ்சம் தீயாக ஜொலித்த அவளது வெறிக்கண் களில் அவன் அத்தகைய வெருட்டு தலையே கண்டான். அவனை விட இரு மடங்கு வலிமை பெற்றிருந்தாள் அவள். அதை அவன் இப்பொழுது தான் உணர்ந்தான். அதனால் அதிகமாக அஞ்சினான். ஏதோ ஒரு வலிய சக்தி அவளுள் புகுந்து பெரும் மாறுதலை மட்டும் செய்யாது இருந்திருக்கு மானால், அவன் இதற்குள் அவளை அறைந்திருப்பான். இப் பொழுதோ, அவனால் எழுந்திருக்க முடியவில்லை; அறையும் துணிவு பெற இயலவில்லை.

"எனது ஆத்மாவையே நீ சேதப்படுத்தி விட்டாய். எனக்கு நீ இழைத்துள்ள பாபம் மகத்தானது. என்றாலும் நான் அதை எல்லாம் தாங்கித் துயர் அனுபவித்தேன். ஏனெனில் நான் உன்னைக் காதலித்தேன். ஆனால் நீ இப்படி என் மூஞ்சியில் அறைந்த மாதிரிப் பேசுவதை நான் அனுமதிக்க மாட்டேன். நான் சகிக்கக் கூடிய அளவையும் மிஞ்சி விட்டது இது. நீ சொன்ன வார்த்தைகளுக்காகக் கொடிய நரகத்தில் விழுந்து நாசமாவாய்!"

"வாயை மூடு!" என்று கிரிகரி கத்தி, கோபத்தோடு பற்களைக் காட்டினான்.

"ஏய், இங்கே என்ன இவ்வளவு கூச்சல்? நீங்கள் எங்கே இருக்கிறீர்கள் என்பதை மறந்து விட்டீர்களா?"

கிரிகரியின் கண்களில் ஏதோ ஒரு திரை கவிந்து விட்டது. வாசல் நடையில் யார் நிற்பது என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. பயங்கரமான வசையோடு அந்த ஆளை ஒதுக்கித் தள்ளி விட்டு அவன் வெளியே பாய்ந்து வயல் புறம் நோக்கி ஓடினான். மேட்ரோனா ஒரு கணம் அறையின் மத்தியிலேயே நின்றாள். பிறகு குருடி மாதிரி தட்டுத்தடுமாறி, கைகளை நீட்டிக் கொண்டே படுக்கையை அடைந்து, ஒரு முனகலோடு, தன் நினைவை இழந்து விழுந்தாள்.

இருட்டி விட்டது. ஆராய்ந்து பார்க்கும் பொன்னிறச் சந்திரன், சிதறிய மேகங்களையும் தாண்டி, தன் கூரிய நோக்கை அந்த அறையினுள் எறிந்தது. ஆனால் விரைவிலேயே மாரிக் காலத்தின் முடிவற்ற சோக மயமான பெருமழைக்கு முன்னறிவிப்பான பெரும் தூற்றல் வாசஸ்தலத்தின் சுவர்கள் மீதும் ஜன்னல்களிலும் படபடவெனப் பொழிந்து கொண்டு இறங்கியது.

கடியாரத்தின் பெண்டுலம் நிமிஷங்களின் ஓட்டத்தைக் கணக்கிட்டுக் கொண்டிருந்தது. மழைத் துளிகள் ஜன்னல் கண்ணுடியில் ஓயாது கொட்டிக்கொண்டிருந்தன, ஒன்றின் பின் ஒன்ருக மணி ஊர்ந்து சென்றது. மழை பெய்து கொண்டே இருந்தது. அவள் அசையாமல் படுக்கையில் விழுந்து கிடந்தாள். எரிச்சலுற்ற அவளது கண்கள் கட்டிடத்தின் மேல் தளத்தில் பதிந்து நின்றன. அவள் பற்கள் கெட்டித்து கன்னத்தின் எலும்புகள் துருத்திக் கொண்டு காணப்பட்டன. மேலும் மேலும் மழை சுவர்கள் மீதும் சாளரங்களிலும் சடசடத்துக் கொண்டிருந்தது. யாருக்கோ எதையோ வலியுறுத்த விரும்புவது போல், சலிப்புத் தருகிற ஏதோ ஒற்றை நாதத்தை வைத்துக் கொண்டு அது திரும்பத் திரும்ப முணமுணப்பது போலிருந்தது. அதை வேகமாகவும் அழகாகவும் நிறைவேற்ற இயலாதபடி மந்தசுபாவம் பெற்றிருந்ததனுல், உண்மையான நம்பிக்கையின் நேர்மை எதுவுமற்ற, உணர்ச்சி இல்லாத, உபதேசத்தைத் திருப்பித் திருப்பிச் சொல்வதன் மூலம் சாதித்துவிடலாம் என்று அது நம்புவது போல் தோன்றியது.

அழுது வடியும் நாளை அறிமுகப்படுத்துவது போல் உதயம் வானத்திலே இலேசான ஒளியைப் பரப்பிய பிறகும் கூட, மழை பெய்து கொண்டிருந்தது. மேட்ரோனுவினுல் தூங்க முடியவில்லை. மழையின் ஓயாத ஒற்றை நாதத்தோடு கலந்து பயங்கரமான கேள்வி ஒன்று ஒலித்தது:

"இனி என்ன நடக்கும்?"

அவளது குடிகாரக் கணவனின் உருவந்தான் அவளுக்கு உரிய பதிலாகப் பளிச்சிட்டது, அன்பு நிறைந்த அமைதியான வாழ்வு பற்றிய கனவைத் துறந்துவிடுவது என்பது அவளுக்குக் கஷ்டமாகத் தான் இருந்தது. அது

கிட்டக்கூடியது அல்ல என அறிவிக்கும் துர்நிமித்தங்களை எல்லாம் தன் உள்ளத்திலிருந்து துரத்திவிட்டு அக்கனவை அவள் வளர்த்துப் பாதுகாத்து வந்தாள். இருப்பினும், கிரிகரி மீண்டும் குடிக்கத் தொடங்கி விட்டான் என்றால், தான் அவனோடு சேர்ந்து வாழ்வது சாத்தியமல்ல என்பதை அவள் வெகு நன்றாக அறிந்திருந்தாள். அவனை மாறுபாடு அடைந்த மனிதனாக அவள் கண்டிருக்கிறாள். தானும் மாறிவிட்டதை அவள் உணர்ந்தாள். எனவே, அவளது பழைய வாழ்க்கையின் நினைப்பு கூட அவளுக்கு அருவருப்பும் அச்சமும் அளித்தன. இத்தகைய உணர்ச்சிகளை அவள் முன்பு எப்பொழுதுமே அனுபவித்ததில்லை. ஆயினும், அவள் ஒரு பெண். அதனாலே தன்னுடைய கணவனுடன் ஏற்பட்ட சச்சரவுக்கு அவள் தன்னைத் தானே குற்றம் சாட்டிக் கொண்டாள்.

"இது எப்படித்தான் நிகழ்ந்ததோ? அட கடவுளே! எனக்கு வெறி பிடித்து விட்ட மாதிரி!"

ஒளி வளர்ந்து பரவியது. ஆகாயத்தை மூடிமறைத்துக் கொண்டு, கனத்த மூடுபனி வயல்கள் மீது கவிந்து தொங்கியது.

"மேட்ரோனா ஆர்லோவ்! வேலைக்குப் போக நேரம் ஆகி விட்டது!"

அந்த அழைப்புக்குப் பணிந்து அவள் எழுந்தாள். அவசரம் அவசரமாகத் தன்னை சுத்தப்படுத்திக் கொண்டு, வாசஸ்தலத்திற்குச் சென்றாள். அசதியும் சுகமின்மை போன்ற உணர்ச்சியும் அவளுக்கு ஏற்பட்டிருந்தன. அவளுடைய தளர்ச்சியும், ஒளி குன்றிய கண்களும், உற்சாகமற்ற முகமும் வார்டில் இருந்தவர்களுக்கு ஆச்சரியம் அளித்தன.

"உனக்கு உடல் நலம் இல்லையா?" என்று டாக்டர்களில் ஒருவர் விசாரித்தார்.

"ஒன்று மில்லை" என்ருள் அவள்.

"எங்களிடம் சொல்வதற்குக் கூச்சப்படாதே உனக்கு பதிலாக வேறு யாரையாவது நாங்கள் ஏற்பாடு செய்து கொள்கிருேம்."

மேட்ரோஞ வெட்கமடைந்தாள். தனது பயத்துடிப்புகளும் துயரங்களும், அன்பாக நடந்து கொண்ட போதிலும் தனக்கு அந்நியளான அந்த மாதுக்குத் தெரிய வேண்டாம் என்று தான் அவள் விரும்பினுள். துயரால் நலிந்த தன் உள்ளத்தினுள் உறைந்திருந்த துணிவின் மிச்சத்தைத் திரட்டிக்கொண்டு சிறு சிரிப்போடு அவள் பதிலளித்தாள்:

"ஒன்றுமில்லை. நானும் என் கணவனும் சிறு சண்டை போட்டுக்கொண்டோம். அது சரியாகிவிடும். இது முதல் தடவை இல்லையே!"

"நீ அப்பிராணி, பாவம்!" என்று அனுதாபப்பட்டாள் டாக்டர் அம்மாள். அவளுடைய வாழ்க்கைஎப்படிப் பட்டது என்பதை அந்த அம்மாள் அறிவாள்.

அந்த அம்மாளின் மார்பிலே தன் முகத்தைப் புதைத்துக் கொண்டு, தனது உணர்ச்சிக் கொதிப்புத் தணியும் வரை அழ வேண்டும் என்றெரு துடிப்பு மேட்ரோஞவுக்கு உண்டாயிற்று. எனினும், அவள் வெறுமனே தன் உதடுகளை இறுக மூடிக்கொண்டு, பொங்கி வந்த அழுகையை நெஞ்சுக்குள்ளே தள்ளுவதற்காகத் தொண்டையில் கையை வைத்து அழுத்திஞள்.

தனது வேலை முடிந்ததும் அவள் தன் அறைக்குப் போய், ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். வயல் வெளிகளின் ஊடாக, வாசஸ்தலத்தை நோக்கி வண்டி வருவது தெரிந்தது. அநேகமாக மற்றுமொரு நோயாளியை

அது சுமந்து வரலாம். மழை லேசாக விழுந்து கொண்டிருந்தது. இவற்றைத் தவிர அங்கே பார்ப்பதற்கு வேறு எதுவுமில்லை. மேட்ரோனு பெருமூச்சுடன் திரும்பி மேஜை முன் அமர்ந்தாள்.

"இனி என்ன நடக்கும்?" என்பது தான் அவளைக் கவர்ந்த பிரச்னையாக அமைந்தது.

அவள் ஒருவித மயக்க நிலையில் வெகு நேரம் உட்கார்ந்திருந்தாள். ஆயினும் வெளியே தாழ்வாரத்தில் காலடி ஓசை கேட்கும் ஒவ்வொரு சமயத்திலும் அவள் திடுக்கிட்டு நாற்காலியில் நிமிர்ந்து வாசலை நோக்கித் திரும்பிக் கவனித்தாள்.

ஆனுல் இறுதியாகக் கதவைத் திறந்து, கிரிகரி உள்ளே நுழைந்த போது, அவள் திடுக்கிடவுமில்லை; எழுந்திருக்கவுமில்லை. ஏனென்ருல் மாரிகாலத்து மேக மூட்டாக்கு பூராவும் வானிலிருந்து இறங்கி வந்து முழுப்பலத்தோடும் அவளைத் தரையோடு தரையாக அழுத்துவது போல் பட்டது அவளுக்கு.

கிரிகரி வாசல் படியில் நின்று தன் ஈரக் குல்லாயை எடுத்துத் தரை மீது வீசி விட்டு, மிகுந்த ஓசையோடு தனது மனைவியை நோக்கி நடந்தான். அவன் உடைகளில் இருந்து தண்ணீர் சொட்டிக் கொண்டிருந்தது. அவனது முகம் சிவந்து, கண்கள் கலங்கியிருந்தன. அவன் உதடுகள் அசட்டுத் தனமான பெருஞ் சிரிப்பு காட்டி நீண்டிருந்தன. அவனுடைய பூட்ஸினுள் தண்ணீர் தேங்கி ஒலி செய்வதை மேட்ரோனு கேட்க முடிந்தது. அவன் மிகவும் வெறுக்கத் தகுந்த தோற்றத்தோடு காணப்பட்டான். அவள் இதை எதிர்பார்த்ததே இல்லை.

"அழகான காட்சிதான்" என்ருள் அவள்.

அவன் அசட்டுத் தனமாகத் தன் தலையை அசைத்தான். "உன் முன்னால் நான் மண்டியிட்டு வணங்க வேண்டும் என்று நீ விரும்புகிறாயா?'' என்று கேட்டான்.

அவள் பதில் பேசவில்லை.

"நீ விரும்பவில்லை. விரும்பவில்லை அல்லவா? நீ சொல்வது சரி தான். நான் உனக்குத் தீங்கு செய்து விட்டேனா இல்லையா என்று தீர்மானிக்க நான் இவ்வளவு நேரமும் முயன்று கொண்டிருந்தேன். நான் தவறு செய்ததாகத் தான் தோன்றுகிறது. அதனாலே தான் நான் உன் முன்னால் மண்டியிட்டு மன்னிப்பு கேட்க வேண்டும் என்று நீ விரும்புகிறாயா என்று கேட்கிறேன்.''

இப்பவும் அவள் பதில் சொல்லவில்லை. வோட்கா மதுவின் நாற்றம் அவனிடமிருந்து அலை அலையாக வந்ததை அவள் உணர முடிந்தது. அவள் இதயத்தில் கசப்பு உணர்ச்சி நிறைந்தது.

"இங்கே பாரு. உன் பெரியதனம் எல்லாம் தேவையில்லை. நான் சமாதான நிலையிலே இருக்கிற போதே நீ பேசி விடுவது தான் நல்லது'' என்று கிரிகரி தன் குரலை உயர்த்திப் பேசினான். "நீ என்னை மன்னிக்கப் போகிறாயா இல்லையா?''

மேட்ரோனா மூச்சை உள்ளே இழுத்துக் கொண்டே சொன்னாள்: "நீ குடி போதையில் இருக்கிறாய். அது தெளிகிற வரையில் தூங்கு, போ.''

"இது பொய். நான் குடிபோதையில் இல்லை. நான் வெறுமனே — களைத்துப் போயிருக்கிறேன். இவ்வளவு நேரமும் நான் நடந்து கொண்டும், சிந்தித்துக் கொண்டும் இருந்தேன். ஓ, என்ன விஷயங்களைப் பற்றி எல்லாம் நான் யோசித்தேன் தெரியுமா! நீ ஜாக்கிரதையாக இருப்பது நல்லது.''

அவன் அவளை நோக்கித் தன் விரலை ஆட்டிக் கொண்டே கோணல் சிரிப்பு சிரித்தான். "நீ ஏன் ஏதாவது பேசக் கூடாது?" என்று கேட்டான்.

"உன்னோடு நான் பேச முடியாது."

"பேச முடியாதா? ஏனோ?"

திடீரென்று அவன் ஆத்திரம் அடைந்தான். அவன் குரல் அதிகக் கடுமை ஏற்றது.

"நேற்று ராத்திரி இதே இடத்தில் என்னைப் பார்த்து நீ கூச்சலிட்டாய். சீறி விழுந்தாய். இப்போது என்னை மன்னிக்கும்படி நான் உன்னைக் கேட்கிறேன். இதைப் பற்றி நீ யோசிப்பது நல்லது."

அவன் குரல் தீயதாய்த் தொனித்தது. அவன் உதடுகள் கோணின; நாசித் துவாரங்கள் விரிந்தன. இவற்றின் அர்த்தம் என்ன என்பதை மேட்ரோனா அறிவாள். முந்திய வாழ்வின் காட்சிகள் அவள் மனதில் உயிர்த்தெழுந்தன: அடித்தள அறை, சனிக்கிழமை தோறும் இரவு நேரத்தில் நிகழ்ந்த சண்டைகள், அவர்கள் வாழ்க்கையின் கொடுமை, துயரம் எல்லாம் தான்.

"நான் நன்றாக எண்ணிப் பார்த்து விட்டேன். உனக்குள்ளே மறுபடியும் மிருக குணம் தலையெடுத்திருக்கிறது. இதை நான் கண்ணால் காண்கிறேன்" என்று அவள் வெடுக்கெனச் சொன்னாள்.

"மிருகமா? அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்? என்னை மன்னிக்கும்படி நான் உன்னைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன். உனது மன்னிப்பு எனக்கு அவசியம் தேவை என்பது உன் எண்ணமோ? அது இல்லாமலே நான் ரொம்ப சுகமாக வாழ முடியும். இருந்தாலும், நீ என்னை மன்னிக்கத்தான் போகிறாய் என்று நான் உறுதி பண்ணிவிட்டேன். தெரிகிறதா?"

"போய்விடு, கிரிகரி" என்று அவள், அவனிடமிருந்து விலகி நின்றபடி, துயரத்தோடு சொன்னுள்.

"போவதா?" என்று சொல்லி அவன் விகாரமாய் சிரித்தான். "அப்புறம் உன் இஷ்டம் போல் செயல்புரிய உனக்குச் சுதந்திரம் கிடைத்துவிடும் என்ற நினைப்போ? அது நடக்காது. அந்த எண்ணம் உனக்குளப்படி வந்தது?"

அவன் அவள் தோள்களைப் பற்றி அவளைத் தன் அருகே இழுத்து, அவள் முகத்துக்கு எதிரே ஒரு கத்தியைக் காட்டினுன். அது குட்டையாய், கனமாய், துருப்பிடித்துக் காணப்பட்டது.

"நீ மட்டும் என்னைக் கொன்று விட்டால்!" என்று கூறி ஆழ்ந்த பெருமூச்சு உயிர்த்தாள் அவள். அவனை உதறி விட்டு அவள் மறுபடியும் விலகி நின்ருள். அவன் பின் வாங்கினுன். அவளுடைய சொற்களைவிட, அவற்றை அவள் சொன்ன விதந்தான் அவனை அதிகமாகத் தாக்கியது. இதை அவள் முன்பும் சொல்லக் கேட்டிருந்தான் அவன். ஆனுல் இந்த விதமாக அவள் ஒருபோதும் சொன்னதில்லை. ஒரு கணத்திற்கு முன்பு அவன் அவளை வெகு சுலபமாக அடித்து வீழ்த்தியிருக்க முடியும். இனி அவனுல் முடியாது. அப்படி அவன் செய்யவும் மாட்டான். அவளுடைய அலட்சிய பாவத்தினுல் அச்சம் அடைந்து போய், அவன் கத்தியை மேஜை மீது வீசி எறிந்தான்.

"ஏ பெண் பேயே! நீ என்னை என்னதான் செய்யச் சொல்கிருய்?" என்று கொடிய முறையில் உறுமினுன் அவன்.

"நான் உன்னிடம் எதையும் விரும்பவில்லை என்னைக் கொல்வதற்காகத் தானே நீ இங்கு வந்தாய்? நல்லது. உன்

காரியத்தைக் கவனி!'' என்று மேட்ரோஞ மெலிந்த குர லில் பேசிஞள்.

ஒன்றும் சொல்லாமல் கிரிகரி முற்றிலும் செயல் இழந்த தன்மையில் அவளேப் பார்த்தான். தன் மனேவியை அடக்கியே தீருவது என்ற உறுதியோடு தான் அவன் வந்தான். முந்திய தினத்துச் சண்டையில் அவளே பலம் மிகுந்தவள் என்று நிரூபித்து விட்டாள். இதை அவன் உணர்ந்தான். அது தனக்குப் பெரும் அகௌரவம் என்றே அவன் கருதிஞன். தான் அவளேக் கட்டாயம் பணிய வைக்க வேண்டும்—பணிய வைத்தே ஆக வேண்டும்— என்று நிச்சயமாக அவன் அறிந்திருந்தான். உணர்ச்சி வயப் பட்டவன் அவன். கடந்த இருபத்தி நான்கு மணி நேரத் திற்குள் அவன் எண்ணியதும் துயருற்றதும் அதிகமே யாகும். தனது மனேவியின் நியாயமான குற்றச்சாட்டு அவனுக்குத் தந்த உணர்ச்சிக் குழப்பம் எத்தகையது என் பதைப் புரிந்து கொள்ள முடியாதபடி அவனுடைய மன இருள் அவனேத் தடுத்திருந்தது. அவள் தன்னே எதிர்த்துக் கலகமிடுகிருள் என்று தான் அவன் நினேத்தான். ஆகவே அவளே பயமுறுத்துவதற்காக அவன் ஒரு கத்தியை எடுத்து வந்தான். அவனே எதிர்ப்பதில் அவள் மேலும் தீவிரமாக இருந்திருப்பின், அவன் அவளேக் கொன்றிருப்பான். ஆஞல் அவளோ எதிர்க்க முடியாமல் துயரால் நலிந்து போய் நின்ருள். எனினும், அவனே விட வலியவள் ஆகி விட் டாள். அது தான் அவனேக் குத்தியது. அந்தக் குத்தல் அவனுக்குத் தெளிவு ஏற்படுத்தியது.

"இதைக் கவனி. உன் உயர்ந்த பீடத்தை விட்டு இறங்கி வா. என்னே நீ நன்ருக அறிவாய். நான் உண்மை யாகவே இதை உனது விலா எலும்புகளுக்கு இடையே திணித்து விடுவேன். அத்துடன் எல்லாம் தீர்ந்தது. ஆமாம் மிகவும் சுலபமான விஷயம்'' என்று அவன் சொன்ஞன்.

அவன் சொல்ல வேண்டிய செய்தி இது அல்ல என்பது அவனுக்கே நன்கு புரிந்தது. அதனுல் அவன் பேச்சை நிறுத்தி விட்டான். மேட்ரோஞ அவனுக்கு முதுகைக் காட்டிக்கொண்டு நின்ருள். அங்கிருந்து அவள் கொஞ்சம் கூட அசையவில்லே. அந்தப் பழைய கேள்வி தான் இப்பொழுதும் அவள் உள்ளத்தில் துடித்துக் கொண்டிருந்தது:

"இனி என்ன நடக்கும்?"

"மேட்ரோஞ!" என்று குழைவுடன் கூப்பிட்டு, மேஜைக்கு மேலாக அவன் அவள் பக்கமாய் சாய்ந்தான். "பார்க்கப் போனுல், எல்லாம் எப்படி இருக்க வேண்டுமோ அப்படி இல்லே. அதற்கு நாஞ பொறுப்பு?" என்ருன்.

அவன் தலேயைத் தாழ்த்தி ஆழ்ந்த மூச்சை உள்ளுக்கு இழுத்தான்.

"வாழ்க்கை அழுகிப் போயிருக்கிறது. இதை வாழ்க்கை என்ரு சொல்கிருய்? ஆமாம். காலரா நோயாளிகள் இருக்கிருர்கள். அதனுல் என்ன? அவர்கள் எனக்குச் சுலபமான வழி வகைகள் செய்து தருகிருர்களா என்ன? அவர்களில் சிலர் செத்துப் போகிருர்கள். மற்றவர்கள் சுபம் அடைகிருர்கள். ஆனுல், நான் வாழ வேண்டும். எப்படி? இது வாழ்க்கை அல்ல; இது ஒரு பெரிய இழுப்பு தான். இது நியாயம் ஆகுமா? ஒவ்வொன்றும் எப்படி இருக்கிறது என்பதை நான் பார்க்கிறேன். ஆயினும் இதே ரீதியில் இனியும் நான் ஏன் வாழ முடியாது என்று விளக்கிச் சொல்லக் கஷ்டமாக இருக்கிறது எனக்கு. அவர்கள் காட்டும் சிரத்தையையும் கவனிப்பையும் பாரு. ஆனுல் நான் நன்ருக இருக்கிறேன். எனினும் என் உள்ளம் சீக்கடைந்து விட்டது. அதனுல் நான் அவர்களே விட மதிப்புக் குறைந்தவன் என்ருகி விடுமா? நினேவில் வைத்துக் கொள் —

காலரா நோய்களை விட நான் மோசமானவன். எனக்கு உள்ளத்தின் வலிப்புகள் வேதனை தருகின்றன. நீ என்னிடம் எரிந்து விழுகிறாய். என்னை மிருகம் என்று பழிக்கிறாய். குடிகாரன் என்கிறாய். இதெல்லாம் பெண்ணின் தர்க்கவாதம்தான்!''

அவன் அமைதியாகவும் தெளிவோடும் தான் பேசினான். என்றாலும் அவன் பேச்சை அவள் கேட்க வில்லை. இறந்த கால நிகழ்ச்சிகளைக் கடுமையாகத் தனது உள்ளத்தில் எண்ணிப் பார்த்துக் கொண்டிருந்தாள் அவள்.

"ஆகவே நீ சொல்வதற்கு எதுவுமே இல்லையாக்கும்?'' என்றான் கிரிகரி. அவனுள் புதிதாக வலிய உணர்வு ஏதோ பொங்கிக் கொண்டிருப்பது போல் தோன்றியது அவனுக்கு. "நீ ஏன் ஏதாவது சொல்லக் கூடாது? என்னிடம் நீ என்ன தான் விரும்புகிறாய்?''

"உன்னிடம் நான் எதையும் விரும்பவில்லை. உன்னால் என்னைச் சும்மா விட முடியவில்லையா என்ன? உனக்கு என்னதான் வேண்டும்?'' என்று அவள் கேட்டாள்.

"எனக்கு என்ன வேண்டுமா? எனக்கு வேண்டியது .........எனக்கு வேண்டியது...''

தனக்கு வேண்டியது என்ன என்பதைத் தன்னால் சொல்ல முடியவில்லை—உடனடியாக, தனக்கும் அவளுக் கும் தெளிவாக விளங்கும்படி அதைச் சொல்ல இயல வில்லை—என்று கிரிகரி உணர்ந்தான். அவனுக்கும் அவளுக்குமிடையே ஒரு பிளவு ஏற்பட்டு விட்டது; எவ் விதமான வார்த்தைகளும் அதை இணைத்து விட முடியாது என்பதையும் அவன் அறிந்தான்.

அது அவனைக் கொடிய வெறித்தனத்துக்கு உந்தியது. அவன் பைத்தியக்காரன் போல் கூச்சலிட்டுக் கொண்டே, தனது கையைச் சுழற்றி முஷ்டியால் தன் மனைவி தலையின் பின்புறத்தில் வேகமாகக் குத்தினான்.

"நீ என்னதான் செய்யப் போகிறாய்? வேசி நாயே! என்னடி ஆட்டம் காட்டுகிறாய்? நான் உன்னைக் கொன்றே போடுவேன்."

அவன் கொடுத்த அறை அவள் தலையை மேஜையோடு கொண்டு மோதியது. ஆயினும் அவள் துள்ளி எழுந்து நின்று தன் கணவன் மீது வெறுப்பு நிறைந்த பார்வை எறிந்தாள்.

"என்னை மறுபடியும் தாக்கு, பார்ப்போம்" என்று அவள் உரத்த குரலில் நிதானமாகச் சொன்னாள்.

"உன் வாயை மூடு!"

"என்னைத் திரும்பவும் அடியேன். உம், சீக்கிரம்."

"ஓ-ஓ-ஓ, ஏ பெண் பேயே!"

"இது தான் முடிவு, கிரிகரி. நான் அனுபவித்தது போதும்."

"உன் வாயை மூடு!"

"என்னை நீ இன்னும் உன் இஷ்டம் போல் ஆட்டி வைக்க நான் அனுமதிக்க மாட்டேன்."

அவன் தன் பற்களை நற நறவெனக் கடித்தான். மறுபடியும் அவளைத் தாக்குவதற்காகத்தானோ என்னவோ அவன் ஒரு அடி பின்னுக்கு நகர்ந்தான்,

ஆனால் அவ்வேளையில் கதவு திறந்தது. டாக்டர் வாஷெங்கோ உள்ளே வந்தார்.

“இதை என்ன என்பது? நீ எங்கே இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்? என்ன செய்யத் துணிந்தாய்?”

அவர் கடுமையாகத் தோற்றமளித்தார். அதே சமயத்தில் திடுக்கிட்டுமிருந்தார்.

கிரிகரி கொஞ்சம் கூடக் கவலை கொள்ளவில்லை. அவருக்காகச் சிறிது தலை வணங்கவும் செய்தான் அவன்.

“விசேஷமாக ஒன்றுமில்லை. சும்மா புருஷன் பெண்டாட்டிக்கு இடையே சிறு புகைச்சல்” என்று சொல்லி விட்டு, அவன் டாக்டரின் முகத்துக்கு நேரே வெறித்தனமாகச் சிரித்தான்.

அவனது சிரத்தையற்ற போக்கினால் எரிச்சலுற்ற டாக்டர், “நீ ஏன் வேலைக்கு வரவில்லை?” என்று கடுகடுப்போடு கேட்டார்.

கிரிகரி தோள்களைக் குலுக்கிக் கொண்டான். “என்னால் வரமுடியவில்லை. எனது சொந்தக் காரியம் ஒன்றைக் கவனிக்க வேண்டியிருந்தது” என்று அவன் அறிவித்தான்.

“நேற்று ராத்திரி இங்கே கலவரம் ஏற்படுத்தியது யார்?

“நாங்கள்—”

“நீயா? பிரமாதம். நீ உன் சொந்த வீட்டில் இருப்பது போல் காரியங்களைச் செய்கிறாய். நீ பாட்டுக்கு அனுமதி பெறாமலே போய்விடுகிறாய். மேலும்...”

“நாங்கள் உமது அடிமைகள் இல்லையே. வந்து...”

“நிறுத்து! ஏ மிருகமே, நீ இந்த அறையை மதுச்சாவடியாக மாற்றி விட்டாய். நீ எங்கே இருக்கிறாய் என்பதை நான் உனக்குக் காட்டுகிறேன்.”

எதிர்த்துச் சமாளிக்க வேண்டும் எனும் ஒரு வெறி எழுச்சி — எல்லாவற்றையும் தள்ளித் தகர்த்து விட்டு, தனது ஆத்மா சிக்கிக் கொண்டிருக்கிற இடைஞ்சலி லிருந்து தப்பி ஓடவேணும் என்கிற காட்டுத்தன வேகம்— கிரிகரியை அடித்துச் சென்றது. அதிவிசேஷமான ஏதோ ஒன்றைச் செய்யவேண்டிய வேளை வந்து விட்டது. தட்டுத் தடுமாறுகிற தனது ஆத்மாவை பிணைத்திருக்கிற விலங்கு களை, அந்தச் செயல் உடனடியாகத் தகர்த்துவிடும் என்று அத்தருணத்தில் அவன் உணர்ந்தான். அவன் தேகத்தில் ஒரு நடுக்கம் ஏற்பட்டது. அவனுடைய வயிற்றின் அடி மட்டத்தில் குளிர்ச்சியான ஒருவித உணர்ச்சி பரவியது. அவன் வெருகுப்பூனை மாதிரிப் பற்களைக் காட்டிக்கொண்டு டாக்டரை நோக்கித் திரும்பி நின்று பேசினன்:

"சத்தம் போட வேண்டாம். வீணுக உம்முடைய ரத்தக்குழாய் வெடித்துவிடப் போகிறது. நான் எங்கே இருக்கிறேன் என்பது எனக்கு ரொம்ப நன்ருகத்தெரியும். உயிர்களை அடித்துக் கொல்கிற சாவுக் கிடங்கில் தான் இருக்கிறேன்."

பிரமித்துவிட்ட டாக்டர் அவன் பக்கமாக அசைந்து கொண்டே, "என்னது? நீ என்ன சொன்னுய்?" என்று கேட்டார்.

அபசாரமான எதையோ தான் சொல்லி விட்டதாக கிரிகரி அறிந்தான். ஆயினும் அது அவன் உணர்ச்சிக் கொதிப்பைத் தணிப்பதற்கு மாருக மேலும் அதிகப் படுத்தியது.

"அது சரி தான். நீர் அதை மறந்து விடுவீர். மேட் ரோனு, உன் சாமான்களை எல்லாம் சேர்த்து மூட்டை கட்டு" என்ருன் அவன்.

"ஓகோ, அது நடக்காது, என் அருமை ஐயாவே! எனது கேள்விக்கு பதில் சொல்லு முதலில்!'' என்று டாக்டர் தீமையை அறிவிக்கும் அமைதியோடு சொன்னார். "அதற்காக நான்...''

கிரிகரி மரியாதையின்றி அவர் முகத்தை உற்று நோக்கிக் கொண்டே குறுக்கிட்டுப் பேசினான்: "கூச்சல் போடாதே! வீண் நாடகம் ஆட வேண்டாம்!'' பேசப் பேச அவன் தாவித்தாவி முன்னேறுவது போலவும், அப்படித் தாவுந் தோறும் அவனது மூச்சு சுலபமாக வெளிப்படுவது போலவும் அவன் உணர்ந்தான். "என்னை அடக்கி ஆள்வதற்குக் காலரா உனக்கு உரிமை அளித்திருப்பதாக நீ நினைக்கிறாய்; இல்லையா? அது மாதிரி நடக்காது. நீ கொடுக்கிற மருந்து இருக்கிறதே, அது யாருக்கும் தேவையில்லை. உயிர்களை அடித்துக் கொல்கிற இடம் என்று சொன்ன போது நான் ரொம்பவும் அளவு மீறிப் பேசியிருக்கலாம். அதனால் என்ன! நீ கூப்பாடு போடுவதை நிறுத்தி விடு.''

"இதெல்லாம் என்ன? நான் உனக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன். ஏய், இந்த வழியாக வா!'' என்று டாக்டர் அமைதியாகச் சொன்னார்.

இதற்குள் ஜனங்கள் தாழ்வாரத்தில் வந்து கூடி விட்டார்கள். கிரிகரி தன் கண்களைச் சுருக்கிக் கொண்டு பற்களைக் கடித்தான்.

"நான் பொய் பேசவில்லை. நான் பயப்படவுமில்லை நீ எனக்குப் பாடம் கற்பிக்க முடியும் என்று நீ எண்ணினால், நானும் உனக்குச் சில விஷயங்களைச் சொல்லத் தயார்'' என்றான் அவன்.

"சொல்லுவாயா? சரி, சொல்லு.''

"நான் நகருக்குப் போய், அங்கே இருப்பவர்களின் காதுகள் நிரம்பும்படி விஷயங்களைச் சொல்லுவேன். ஏ ஐயாமார்களே, அங்கே காலராவை எப்படிக் குணப் படுத்துகிறார்கள் தெரியுமா என்பேன்.''

"அது என்ன?'' என்று துயரத்தோடு கேட்டார் டாக்டர்.

"அப்புறம் நாங்கள் இங்கே உமக்காக புகை மூட்டம் போடுவோம்—வாண வேடிக்கையும் மத்தாப்பூக்களுமாக.

"நாசமாய்ப் போக! நீ என்ன உளறிக் கொண்டிருக் கிறாய்?''

டாக்டரின் வியப்பு கோபமாக மாறியது. சுறு சுறுப் பும் அறிவும் பெற்ற உழைப்பாளி என்று அவர் அறிந் திருந்த நபர், இப்பொழுது நம்ப முடியாத ஏதோ காரணத் தினால், தன் தலையைத் தானே சுருக்குக் கயிற்றுக்குள் நுழைத்துக் கொண்டிருக்கிறானே என்ற எரிச்சல் அவருக்கு ஏற்பட்டது. "ஏ முட்டாள்! நீ என்ன சொல்லிக் கொண்டிருக்கிறாய்?'' என்று சீறினார் அவர்.

முட்டாள்—அந்த வார்த்தை கிரிகரியின் உள்ளெ லாம், மூலைக்கு மூலை, எதிரொலி செய்தது. அது நியாயமான தீர்ப்பு என்று அவனுக்குப் பட்டது. ஆனால் அது அவனுடைய தீய உணர்ச்சியை அதிகப் படுத்தவே உதவியது.

"நான் என்ன சொல்கிறேனா? அது எனக்குத் தெரியும். மேலும், எல்லாமே எனக்கு ஒன்று தான்'' என்று அவன் கண்களில் பொறி தெறிக்கப் பேசினான். "என் போன்ற மக்களுக்கு எப்பொழுதும் எல்லாமே ஒன்று போல் தான். அதை நான் இப்பொழுது நன்றாக அறிய முடிகிறது. நாங்கள் எங்கள் உணர்ச்சிகளை மூடி

மறைக்க வேண்டும் என்பதற்கு அவசியம் எதுவுமில்லை. வா மேட்ரோனு! உனது சாமான்களை எல்லாம் எடுத்துக்கொள்.''

“நான் எங்கேயும் போகப் போவதில்லை'' என்று மேட்ரோனு உறுதியாகச் சொன்னுள்.

டாக்டர் விரிந்த கண்களோடு அவர்களைப் பார்த்தார்; மிகுந்த குழப்பத்துடன் தன் நெற்றியைத் தேய்த்துக் கொண்டார். “நீ குடி வெறியில் இருக்க வேண்டும். அல்லது உனக்குப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும். நீ செய்து கொண்டிருப்பது என்ன என்பது உனக்குப் புரிகிறதா?'' என்ருர்.

கிரிகரி பின்வாங்க வில்லை; பின்வாங்க முடியாது அவனுல்.

“நீ என்ன புரிந்து கொள்கிருய்? நீ என்ன தான் செய்து கொண்டிருக்கிருய்? புகை மூட்டம். ஹஹஹா! சீக்காளிகளைக் குணப் படுத்துவதும், ஆரோக்கியமாக இருக்கிறவர்களை விசித்திரமான வாழ்வு வாழ வைப்பதும் தானே!'' என்று அவன் நையாண்டி பண்ணினுன். “ஏ மேட்ரோனு, இந்த நிமிஷமே நீ என்கூடப் புறப்பட்டு வரா விட்டால் நான் உன் மூஞ்சியைச் சிதைத்து விடுவேன்'' என்று கத்தினுன்.

“நான் உன்னேடு வரப் போவதில்லை.''

அவள் முகம் வெளுத்து, இயல்புக்கு மாருன அமைதியோடு, காணப்பட்டாள். அவளது கண்களில் கடும் உறுதி படிந்திருந்தது. கிரிகரி வீரத் தனமாக வாயாடியதற்கு மாருக, திரும்பி நின்று மௌனமாகத் தலையைத் தொங்க விட்டுக் கொண்டான்.

"சனியன்! சாட்சாத் சைத்தான் கூட இந்த விஷயத்தில் தலை-கால் தெரிந்து கொள்ள முடியாது என்றே தெரிகிறது. ஏய், நீ வெளியே போ, நான் உன்னை சும்மா போக விடுவதற்காக நன்றி செலுத்திக்கொள். மர மண்டையனுன உன்னைக் கைது செய்யும்படி நான் ஏற்பாடு பண்ண வேண்டும். போகிறது போ!''

கிரிகரி டாக்டரை நிமிர்ந்து பார்த்து விட்டு மறுபடியும் தன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். அவனுக்கு அறை கொடுத்திருந்தால், அல்லது அவனை போலீஸ் ஸ்டேஷனுக்குத் தள்ளிக் கொண்டு போயிருந்தால் கூட, அவனது உள்ள நிலை இப்பொழுதை விட நன்ருக இருந்திருக்கும்.

"நான் கடைசித் தடவையாகக் கேட்கிறேன்—நீ வருகிருயா, இல்லையா?'' என்று கிரிகரி தன் மனைவியிடம் உரத்த குரலில் கேட்டான்.

அவள் அவனிடமிருந்து அறையை எதிர் பார்ப்பது போல் குறுகிக் கொண்டே, "இல்லை. நான் வரவில்லை'' என்று பதிலளித்தாள்.

கிரிகரி கையை அசைத்தான்.

"அப்போ நீங்கள் எல்லோருமே நாசமாய்ப் போகலாம். உங்களிடமிருந்து எனக்கு என்ன எழவு தான் தேவை?'' என்ருன்.

"ஏ முட்டாள், இங்கே வா!'' என்று, அவன் சுய அறிவு பெறுவதற்கு வகை செய்யும் தன்மையில், டாக்டர் பேசினுர்.

"வாயை மூடு!'' என்று கத்திஞன் கிரிகரி. "ஏ துப்புக் கெட்ட வேசியே, நான் போகிறேன். நாம் திரும்பச் சந்தித்தாலும் சந்திப்போம். சந்திக்காமலே போனுலும்

போய் விடலாம். அது என் இஷ்டத்தைப் பொறுத்தது. ஆனல் நாம் மறுபடியும் சந்தித்தால், உன்பாடு பெரும் பாடாக முடியும் என்பதை மட்டும் நிச்சயமாக நம்பிக்கொள்!'' என்று எச்சரித்து விட்டு வாசலே நோக்கி நடந்தான்.

கிரிகரி தன்னைக் கடந்து செல்கையில், "சோக நடிகரே, வணக்கம்'' என்று டாக்டர் கிண்டலாகச் சொன்னர்.

கிரிகரி தயங்கி நின்று, துயரம் கனலும் கண்களே உயர்த்தி அவரைப் பார்த்தான். "என்னைச் சும்மா விடுங்கள். திரும்பவும் எனக்கு முறுக்கேற்ற வேண்டாம். இந்தத் தடவை யாரையும் காயப் படுத்தாமலே வில்விசை தளர்ந்து விட்டது. அது அப்படியே போகட்டும்'' என்று அமைதியாகச் சொன்னன். தரையில் கிடந்த குல்லாயை எடுத்துத் தன் தலேயில் திணித்தபடி, தோள்களைக் கூனிக் கொண்டு, மனைவி பக்கம் கொஞ்சம் கூடத் திரும்பிப் பாராமலே அவன் வெளியேறினன்.

டாக்டர் கவலேயோடு அவளேக் கவனித்தார். அவள் முகம் வெளிறியிருந்தது.

கிரிகரி சென்ற திசையில் தலேயை அசைத்து, "அவனுக்கு என்ன வந்து விட்டது?'' என்று டாக்டர் கேட்டார்.

"எனக்குத் தெரியாது.''

"இப்பொழுது அவன் எங்கே போவான்?''

"குடி போதை பெறுவதற்குத் தான்'' என்று மேட் ரோனு தயக்கமின்றிப் பதில் சொன்னுள்.

டாக்டர் புருவங்களை உயர்த்திக் கொண்டார். பிறகு வெளியே போனுர்.

மேட்ரோனு ஜன்னல் வழியாக வெளியே கவனித்தாள். இருளினூடே, மழைக்கும் காற்றுக்கும் ஊடாக, ஒரு மனித உருவம் நகரத்திற்குச் செல்லும் ரஸ்தாவில் வேகமாக நடந்து போய்க் கொண்டிருந்தது. ஈரம் படிந்த சாம்பல் நிற வயல்களுக்கு மத்தியில் தன்னந்தனியாக அவ் உருவம் காட்சியளித்தது.......

மேட்ரோனுவின் முகம் மேலும் வெளுத்தது. அவள் விக்கிரக மூலைக்குச் சென்று, அங்கேயிருந்த புனித உருவங்களின் முன்னுல் மண்டியிட்டு அமர்ந்தாள். தலை தரை மீது படும்படி திரும்பத் திரும்பத் தாழ்ந்து பணிந்தாள். உணர்ச்சிப் பிரவாகமாக, ஒரு பிரார்த்தனையின் வார்த்தைகளை உச்சரித்துக் கொண்டேயிருந்தாள். அதே சமயத்தில் விரல்களினுல் அவள் தன் தொண்டையையும் மார்பையும் தேய்த்துக் கொண்டும் இருந்தாள்.

* * *

ஒரு சமயம் நான் ஒரு நகரில் உள்ள தொழிற் பள்ளிக்கூடம் ஒன்றைப் பார்வையிடப் போயிருந்தேன். எனக்குத் தெரிந்த மனிதர் ஒருவர் என்னேடு துணைக்கு வந்திருந்தார். அந்தப் பள்ளிக்கூடம் நிறுவப்படுவதற்கு அவர் உதவி செய்திருந்தார். வகுப்பு அறைகள் தோறும் என்னை அழைத்துச் சென்ற போது, அவர் அறிவித்தார்—

“நீங்களே பார்ப்பது போல, நாங்கள் பெருமைப்படக் கூடிய விதத்தில் பலவும் உள்ளன. எங்கள் இளைஞர்கள் பிரபலமாக முன்னேறி வருகிறுர்கள். நாங்கள் சேர்த்து உள்ள அருமையான உபாத்தியாயர்களைப் பார்த்து நீங்கள் அதிசயிப்பீர்கள். உதாரணமாக, செருப்பு தைக்கும் பகுதியில் உள்ள உபாத்தியாயர்—ஒரு பெண் — எளிய செம்மான் இனத்தைச் சேர்ந்தவள். ஆசையைத் தூண்டும் அழகுக்குட்டி. ஆனுலும் களங்கம் இல்லாத நடத்தை

உடையவள். ஆனால் இதை நான் ஏன் உங்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேனோ தெரியவில்லை! நான் குறிப்பிட்டது போல, சாதாரண செருப்புத் தொழிலாளி அவள். ஆனால் எப்படி வேலை பார்க்கிறாள்! எத்தகைய திறமை பெற்ற உபாத்தியாயினி அவள்! தன் மாணவர்களை அவள் எப்படி நேசிக்கிறாள்! மிகவும் அபூர்வமானவள். அத்தகைய சுறுசுறுப்பான சிறு தேனீயை இதுவரை நீங்கள் பார்த்திருக்கவே முடியாது. அவள் பெறுவதெல்லாம் மாசம் தோறும் பன்னிரண்டு ரூபிள்கள்; தங்கியிருப்பதற்கு பள்ளிக்கூடத்தில் ஒரு அறை; இவ்வளவு தான். அந்தத் தொகையில் அவள் இரண்டு அனாதைக் குழந்தைகளை வேறு காப்பாற்றி வருகிறாள். முற்றிலும் விதிவிலக்கான விசேஷ நபர் தான் அவள்.''

எனது நண்பர் அந்தச் செருப்பு தைக்கும் தொழிலாளியைப் பற்றி உற்சாகமாகப் புகழ்ந்து கொண்டிருந்ததனால், அவளை நான் அவசியம் சந்திக்க வேண்டும் என்று விரும்பினேன்.

அதற்கு எளிதில் ஏற்பாடாயிற்று. மேட்ரோனா ஆர்லோவ் தன்னுடைய வாழ்வின் சோகக் கதையை என்னிடம் சொன்னாள். அவள் தன் கணவனை விட்டு நீங்கிய பிறகு கொஞ்ச காலம் வரை, அவன் அவளை அமைதியாக வாழவிடவில்லை. குடிவெறியோடு அவன் அவளைக் காண வந்தான். கூச்சலிட்டுக் கும்பல் கூட்டினான். அவள் வெளியே போகும் போதெல்லாம் அவன் அவளுக்காகக் காத்திருந்து அவளை ஈவு இரக்கமின்றி அடித்தான். அவள் அனைத்தையும் சகித்துக்கொண்டு தான் இருந்தாள்.

வாசஸ்தலத்தை மூடி விட்ட பிறகு, அங்கிருந்த டாக்டர்களில் ஒருவர் அவளுக்கு இந்தப்பள்ளிக்கூடத்தில் வேலை வாங்கிக் கொடுக்கவும், அவள் கணவனிடமிருந்து

அவளைப் பாது காக்கவும் உதவி செய்தார். அது கை கூடிய தும், அமைதிகரமான—சேவை நிறைந்த—வாழ்க்கையை மேற்கொண்டாள். அவளுக்குத் தெரிந்த நர்ஸ் ஒருத்தி அவளுக்கு எழுதப்படிக்கக் கற்றுக் கொடுத்தாள். அவள் ஒரு விடுதியிலிருந்து இரண்டு அனாதைப் பிள்ளைகளை—ஒரு பையன், ஒரு பெண்—சுவீகாரம் செய்து கொண்டாள். தனது நிலைமையில் திருப்தி கொண்டு அவள் முழு ஈடு பாட்டுடன் உழைக்கிறாள். ஆயினும் அவள் தன் பழைய வாழ்வை எண்ணிப் பார்க்க மறந்து விடுவதில்லை. அந் நினைவு அவளுக்கு பயமும் வருத்தமும் தரும். தனது மாணவர்களுக்குச் செய்து காட்ட வேண்டிய எதையும் அவள் அதிகப்படியானது, சிரமமானது என்று கருதுவ தில்லை. தன் வேலையின் முக்கியத்துவம் பற்றி அவள் பரந்த நோக்கு பெற்றிருக்கிறாள். மிகவும் மனநேர்மை உடையவள். அதனால் பள்ளிக்கூட நிர்வாகிகளின் நன் மதிப்பை அடைந்திருக்கிறாள் அவள். ஆனால் மோசமான வறண்ட இருமல் அவளுக்கு இருக்கிறது. கேடு செய்யும் ரத்தக்கட்டு அவள் கன்னக் குழிகளில் எரிச்சல் கொடுத்து வருகிறது. சாம்பல் நிறக் கண்களில் சோகம் படர்ந்து கிடக்கிறது.

கிரிகரியின் அறிமுகமும் எனக்குக் கிட்டியது. நகரத் தின் அநாகரிகச் சேரிகளிலே நான் அவனைக் கண்டேன். இரண்டு மூன்று சந்திப்புகளுக்குப் பிறகு அவனுக்கு நண்பன் ஆனேன். அவன் மனைவி சொன்ன கதையையே அவனும் என்னிடம் சொன்னான். பிறகு, சிறிது சிந்தித்து விட்டு இதையும் கூறினான்:

"ஆகவே அது எப்படி முடிந்தது, மாக்ஸிம். நான் ஓரளவு உயர்த்தப் பட்டேன். அப்புறம் மறுபடியும் தாழ்ந்து விட்டேன். நான் செய்யவேண்டும் என்று கனவு கண்ட பெரிய காரியத்தைச் செய்யவே இல்லை. ஆனாலும்,

பெரிதாக ஏதாவது செய்தாக வேண்டும் எனும் ஏக்கம் இன்னும் என்னுள் இருக்கிறது. இந்த உலகத்தையே பொடிபண்ணிவிடுவது, அல்லது கொள்ளைக்காரர் கூட்டத்துக்குத் தலைமை வகிப்பது; அல்லது, மற்றவர்கள் எல்லோருக்கும் மேலானவனாக என்னை ஸ்தாபிக்கக் கூடிய ஏதோ ஒன்றைச் செய்து; அப்படி மேலே ஏறி மற்றவர்களை எல்லாம் அலட்சியமாக நோக்கி அவர்கள் மீது காறித்துப்ப வேண்டும் என்கிற ஆசை எனக்கு இருக்கிறது. நான் அவர்களைப் பார்த்து இவ்விதம் பேசுவேன்—'ஏ கிருமிகளா! நீங்கள் எதற்காக உயிரோடு இருக்கிறீர்கள்? எப்படிப்பட்ட வாழ்க்கைகளை நீங்கள் வாழ்கிறீர்கள்? நீங்கள் எல்லோரும் இரட்டைமூஞ்சி படைத்த சுரண்டல்காரர்கள் தவிர வேறொன்றுமில்லை. உண்மையிலேயே நீங்கள் இப்படிப்பட்டவர்கள் தான்' என்பேன். அதன் பிறகு அந்த உச்சாணி உயரத்திலிருந்து நான் அடித்துப் புரண்டு கீழே தலைகுப்புற வந்து விழுவேன். தடால்! அது தான் முடிவு ஆகும். வாழ்க்கை எவ்வளவு அசமந்தமாகவும் மப்பாகவும் இருக்கிறது! மேட்ரோனுவை விட்டு விலகியதும் எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்! 'கப்பலை நேரே விடு, கிரிகரி. நங்கூரத்தை நீக்கியாச்சு'. ஆனால் அது அந்த விதமாக நடைபெறவில்லை. தண்ணீரில் ஆழம் இல்லை. நான் ஒரு பாறையில் மோதிக் கொண்டேன். அதிலிருந்து நான் உயர்ந்தும் வறண்டும் போய்க் கொண்டிருக்கிறேன். அதனால் நான் தரையோடு தரையாகி விடுவேன் என்று அர்த்தமில்லை. நானல்ல அது. நான் என்ன செய்ய முடியும் என்பதை மக்களுக்கு நிரூபித்துக் காட்டுவேன். எப்படியோ? சைத்தானைத் தவிர வேறு யாரும் அதை அறியார்... என் மனைவியா? அவள் நரகத்துக்கு ஒழிந்து போகட்டும்! என்னைப் போன்ற ஒருவன் மனைவியை வைத்துக்கொண்டு என்ன செய்வது? அல்லது,

நாலாபுறமும் இழுக்கப்படுவது போன்ற உணர்ச்சியினுல் எப்பொழுதும் அவதிப்படுகிற என் மாதிரி ஆசாமி ஒருவனைக் கட்டிக்கொண்டு அவள் தான் என்ன பண்ண முடியும்? என் உள்ளத்தில் குடியிருக்கிற இந்த சஞ்சல சுபாவத்தோடு நான் பிறந்து விட்டேன். நாடோடியாக இருப்பது தான் என் விதி. நான் அலைந்து திரிந்திருக் கிறேன். சகலவிதமான இடங்களுக்கும் போயிருக்கிறேன். சுகம் என்பது எங்குமே இல்லை...குடியா? சந்தேக மில்லாமல், நான் குடிக்கிறேன். தீயை அணைப்பதற்கு வோட்கா மது ஏற்றது தான். என்னுள் பென்னம் பெரிய தீ அல்லவா சீறி எரிந்து கொண்டிருக்கிறது! நகரங்கள், கிராமங்கள், பல தரப்பட்ட மக்கள்—எல்லோர் மீதும், எல்லாவற்றின் பேரிலும் எனக்கு வெறுப்பு தான். நரகமாம்—இதை விட மேம்பட்ட தான நரகம் ஒன்றைப் பற்றி எண்ணமுடியுமா என்ன? ஒவ்வொருவனும் தனக்கு அண்டை அயலில் இருப்பவனுக்கு எதிராகக் குமுறுகிருன். அவர்கள் எல்லோருடைய உடல்களிலிருந்தும் உயிரைக் கசக்கிப் பிழிந்து விடுவதைத் தான் நான் பெரிதும் விரும்பு வேன். வாழ்வாம் வாழ்வு! சைத்தானின் கண்டு பிடிப்பு தான் அது.''

கிரிகரியும் நானும் உட்கார்ந்திருந்த மதுச் சாவடியின் கனத்த கதவு சதா திறந்து மூடிக்கொண்டு இருந்தது. ஒவ் வொரு அசைவின் போதும் அது கீச்சிட்டுக் கத்தியது. அந்த மதுச்சாவடியின் உட்புறமோ, ரஷ்யாவின் ஏழை எளியவர்களை எல்லாம்—அமைதியற்றவர்களையும்,அப்படி இல்லாதவர்களையும்—ஒருவர் பின் ஒருவராய், மெதுவாக ஆனல் நிச்சயத் தன்மையோடு, விழுங்கிக் கொண்டிருக்கும் ஒரு பெரிய வாய் போல் காணப்பட்டது. (1897.)